

# அவனுக்கு 5 வயதுதான் ஆகிறது

## அதற்குள் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டான்!

அவன் கெட்டிக்காரனோ இல்லையோ, அவனுடைய பெற்றோர்கள் நிச்சயம் கெட்டிக்காரர்கள் தான். எனவேதான், அவனுடைய சென்ற பிறந்தநாளில் தங்களுடைய அன்பளிப்பாக, பரோடா பாங்கில் அவன் பெயரில் வயதுவராதோர் சேமிப்புக் கணக்கை ஆரம்பித்து வைத்தார்கள்.

பெரியவனாகும் போது, அவன் தன் விருப்பப்படி டாக்டருக்கோ, வக்கீலுக்கோ, என்ஜினியராக ஆவதற்கோ, எதற்கு வேண்டுமானாலும் படிக்கலாம். அதற்குத் தேவையான பணம் சேர்ந்திருக்கும். ஒளிமயமான எதிர்காலத்திற்குத் தேவையான பணத்தைச் சேமிக்க உங்கள் குழந்தைக்கும் பாங்க் ஆஃப் பரோடா உதவும் இன்றே அவன் பெயரில் வயதுவராதோர் சேமிப்பு கணக்கை ஆரம்பியுங்கள்!

- ரூ. 1/- மட்டுமே செலுத்தி வயதுவராதோர் சேமிப்புக் கணக்கை ஆரம்பிக்கலாம... 4% வட்டி சம்பாதிக்கலாம்!
- உங்கள் குழந்தைகளுக்கு 14 வயது ஆகும் வரை இந்தக் கணக்கை நீங்களே கையாளலாம். பிறகு அவன் சுயமாகக் கையாள முடியும்—இவ்வாறு, அவன் சேமிப்புப் பழக்கத்தைக் கற்கத் தொடங்குவான்.

என்றென்றும் வளமையுடன் வாழ உங்களுக்கு உதவுகிறது—




**தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்**

நிறுவனம்: (1908) ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: மாண்ட்வி, பரோடா

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் 300க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன

"உங்கள் சேவை எங்கள் கடமை" என்னும் சிறுபிரசுரத்தை உங்களுக்கு அருகிலுள்ள கிளைக்கு எழுதியோ, நேரடியாகவோ, இலவசமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்.

shilpi bob 12/67A TAM



# கல்கி பொருளடக்கம்

பிலவங்க மார்கழி 30உ. 1968 ஜனவரி 14உ.



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

◀ படவிளக்கம் 26-ம் பக்கம் பார்க்க

# பொங்கல் திருநாள்

பிராணிகளின் வாழ்க்கை வளர்ச்சிக்கும் போஷணைக்கும் தாவர வாழ்க்கை அவசியம். மழை மூலமும், தட்சிணாயன காலத்தில் விழும் பனி மூலமும் தாவர உலகம் முழுதுமே தங்களுக்கு வேண்டிய போஷணைகளைப் பெற்று சூரியனின் வெப்பத்தினால் உத்தராயண காலத்தில் பலனடைகின்றன.

கருணாமூர்த்தியான நாராயணன்தான் சூரியனில் அந்தர்யாமியாக இருக்கிறார். இந்தப் போஷணைக்கும் பலனுக்கும் மூலாதாரமாக இருப்பவர் அவரே. எனவே, மனித வாழ்க்கையைப் போஷித்து வளர்க்கும் பயிர்களையும் காய்கறிகளையும் நாம் பொங்கல் புது நாள் அன்று அந்த ஆண்டவனுக்குப் பக்தி சிரத்தையுடன் அளிக்கிறோம். ஆண்டவனுக்கு இவைகளைப் படைக்காமல் வயிற்றுக்காக மட்டும் இந்தப் பொருள்களை உண்டால் நாம் உயர்வதற்குப் பதிலாகத் தாழ்ந்து போவதற்கு இவை வழி ஏற்படுத்திவிடும்.

மகர சங்க்ராந்தி தினத்தன்று சூரியனை நாம் பூஜிக்கிறோம். சூரியன் மூலம் ஈசுவரன் நமக்கு வாழ்க்கையின் தேவைகளை வழங்குகிறான். பூஜையில் வைக்கும் பசுமஞ்சள் மங்களத்தின் சின்னமாகும். வாழ்க்கையின் இனிப்பான அம்சங்களையெல்லாம் கரும்பு பிரதிபலிக்கிறது. தானியங்கள், வாழைப்பழம், தேங்காய் முதலியவை யெல்லாம் இப்பருவகால சுபிட்சத்தின் அறிகுறி. சர்க்கரைப் பொங்கலுடன் இந்தப் பொருள்களையும் சேர்த்து நாம் சூரியனுக்குப் படைக்கிறோம். யாதவர்கள் ஆண்டவனின் இந்தப் பிரசாதங்களைக் காளை மாடுகளுக்கும் பசுமாடுகளுக்கும் சமர்ப்பிக்கிறார்கள்.

சுபிட்சத்தையும் செழுமையையும் மங்களத்தையும் பிரதிபலிக்கும் இப்பொங்கல் கொண்டாட்டம், நமது வாழ்க்கையை ஆதரிக்கும் நல்ல பொருள்கள் எல்லாம் ஏராளமாகப் பெருக்கெடுத்து ஓடுவதை நம் எல்லாருக்கும் ஞாபகமூட்டுகிறது. இவைகள் எல்லாம் கருணாமூர்த்தியான பகவானின் பிரசாதங்கள் என்பதையும் எழுத்து வாசனையில்லாத மக்கள் உள்பட நம்மெல்லோருக்கும் ஞாபகமூட்டுகிறது. சங்க்ராந்தியன்று சூரியன் உத்தராயணத்தில் பிரவேசிக்கிறான். பரமாத்மாவைப் பக்தன் அடையும் மார்க்கமாக உத்தராயணத்தை பகவத்கீதையும் உபநிஷத்துக்களும் போற்றுகின்றன. இறைவன் திருவருளால் சுபிட்சமும் ஆத்மிக உயர்வும் பொங்கிப் பெருகட்டும். இன்றைய உலகுக்குச் சுபிட்சமும் ஆத்மிக உயர்வும்தான் மிக மிகத் தேவையாக இருக்கின்றன.





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 24



# அமுத மொழிக்கு அரிய விழா!

உலகத் தமிழ் மாநாட்டுத் தொடக்கம் ஓர் அரிய பெரிய விழாவாக அமைந்துவிட்டது. தமிழின் பண்டைப் பெருமைக்கு மட்டுமின்றி இன்றைய தமிழ் மக்களின் பண்புக்கும் சான்றாக அமைந்தது ஆரம்ப விழா. உற்சாக மேலீட்டுடன் குழுமியிருந்த பத்து லட்சம் மக்கள் அன்று காட்டிய கண்ணியமும் கட்டுப்பாடும் பெருமைக்கு உரியனவாகும்.

விழாவைத் தொடங்கி வைத்த பாரத ராஷ்டிரபதி வெகு நுணுக்கமாகத் தமிழிலக்கியத்தின் சிறப்புக்களை எடுத்துரைத்து நம்மை வியப்பிலாழ்த்தி விட்டார். ஐக்கிய உணர்வில் தமிழகம் பாரதத்துக்கே வழிகாட்டியாகத் திகழ முடியும் என்ற அவரது நம்பிக்கை நம்மைப் பெருமைப்படுத்துகிறது. 'ஐக்கியத்துக்கும், பாரத நாட்டின் நல்வாழ்வுக்கும் தமிழகம் உறுதியாகப் பாடுபடும். ஆயினும், தனக்கு உரித்தான உரிமைகளை மறுத்தால் தமிழகம் பொறுக்காது' என்று திரு அண்ணாதுரை கூறியது அனைவரும் ஒப்ப வேண்டியதாகும்.

ஆழ்ந்த சிந்தனையுடன் அமைக்கப்பட்டுள்ள கண்காட்சி நமது பண்டையப் பெருமைக்கு உருத் தாங்குகிறது. 'ஆனால் பண்டையப் பெருமையைப் பேசுவதோடு நாம் நின்றுவிடக்கூடாது; தமிழகம் எப்படி இருந்தது என்பதை விட எப்படி இருக்கப் போகிறது என்பதே முக்கியம்' என்பதை ராஜாஜி தமக்கே உரிய முறையில் பளிச்சென்று வெளியிட்டுள்ளார். சமயத்திலும், இலக்கியத்திலும், இதர கலைகளிலும், ஆட்சி முறையிலும், மக்கட் பண்பிலும் தமிழகத்துக்குரிய நீண்ட நெடும் மரபு முறிந்து விடாமல் நாம் எதிர் காலத்திலும் காப்பதோடு, புதிய அரசியல்-சமூக அமைப்புக்கள், ஸையன்ஸுகள், நுட்பத் தொழிலியல் இவற்றிலும் நாம் முன்னேற வேண்டிய அவசியத்தை உணர வேண்டும். தனித்து, ஒதுங்கி நில்லாமல் உலகம்முழுவதிலுமிருந்து உயரிய விஷயங்களை எடுத்துக் கொண்டு தனதாக்கிக் கொண்டிருப்பதுதான் தமிழர் நாகரிகத்தின் தலைசிறந்த அம்சம். இதற்குரிய விரிந்து பரந்த மனப்பான்மையை நாம் மேன்மேலும் வளர்த்துக் கொள்வோமாக!

சத்தியபூர்வமாகத் தமிழகத்தின் சரித்திரம் உருவாக வேண்டிய அவசியத்தையும் ராஜாஜி வற்புறுத்தியுள்ளார். சாகஸ இலக்கியங்கள் நமது உணர்ச்சிகளைத் திருப்தி செய்கின்றன என்பதால் அவற்றையே சரித்திரமாக எடுத்துக் கொள்ளக்கூடாது. 'இது நம் விஷயம்' என்ற சொந்தச் சார்பு இல்லாமல் சத்தியத்தில் ஊன்றி நின்று தமிழகத்தின் வரலாற்றை உள்ளபடி கண்டறிய வேண்டும். இதற்கு உதவும் வகையில் பல நாடுகளைச் சேர்ந்த பேரறிஞர்கள் பற்பல பொருள்களில் கருத்தரங்கு நடத்தி வருகின்றனர்.

நமது கலைச் செல்வர்கள் தமிழ் விழாவையொட்டிச் சிறப்பு நிகழ்ச்சிகள் அளித்திருக்கிறார்கள். தமிழகத்தின் விருந்தோம்பும் பண்பும் இச்சமயத்தில் பாரறிய வெளியாகியுள்ளது.

இவற்றுக்கெல்லாம் மேலாகத் தமிழ் விழாவினால் விளைந்த ஒரு பெரும் பயன் நமது முன்னோர்கள் வகுத்துத் தந்த சமயச் சடங்குகள் எவ்வளவு சிறப்பானவை என்பதை உறுதியாக்கியிருப்பதே எனலாம். இப்போது பல தமிழ் அறிஞர்களுக்குச் சிலைகள் எழுப்பப்பட்டுள்ளன. இதில் நாம் தனித்ததொரு பெருமிதம் அடைந்திருக்கிறோம். அப்பெருமிதத்துக்கிடையே, உருவ வழிபாடு என்பதை அமைத்துத் தந்து எளிய முறையில் எளிய மக்களை உயர்நெறிக்கு இட்டுச் சென்ற முன்னோர்களை எண்ணி வணங்குகிறோம். அதே போல் தமிழகத்தின் பண்பாட்டுக் காட்சிகள் அலங்கார ஊர்திகளில் பவனி வந்தபோது இறைவனைப் பல கோலங்களில், பல வாகனங்களில் எழுந்தருளச் செய்து உற்சவம் நடத்தியவர்களை எண்ணிப் போற்றத் தோன்றியது. அவர்கள் காட்டிய வழி இந்த மண்ணோடு ஊறி விட்டது என்பது உலகத் தமிழ் மகாநாட்டில் உறுதியாகிவிட்டது.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



நேயர்களுக்கு உள்ளம் பொங்கிய பொங்கல் வாழ்த்துக்களை அளிக்கிறேன்.

'உள்ளம் பொங்கிய' என்று உபசாரத்துக்குச் சொல்லவில்லை. இம்மலரைப் பிரித்துப் பார்ப்பவர்கள் இதன் உண்மையை அறிய முடியும். உலக இலக்கியங்களில் மகாபாரதத்துக்கு இணையானது எது உண்டு? இன்று உலகப் பெருமக்களில் ராஜாஜிக்கு இணை எவர் உண்டு? இம்மலரிலிருந்து உலகப் பெரும் தலைவராகிய ராஜாஜியின் எழுத்திலே உலகப் பேரிலக்கியமாகிய மகாபாரதம் வெளிவருகிறது. இது உள்ளத்தைப் பொங்க வைக்கும் பாக்கியமே அல்லவா!

கல்கிப் பத்திரிகையில் 1943 முடிவிலிருந்து 1946 மத்தி வரை ராஜாஜி தொடர்ச்சியாக எழுதி வந்த 'வியாசர் விருந்தே' இப்போது 'மகாபாரதம்' என்ற தலைப்பில் மீண்டும் தொடராக வெளியிடப்படுகிறது. 'வியாசர் விருந்து' முடிந்து இருபத்தியோராண்டுகளுக்கு மேல் ஆகிறது. இந்த இடைக்காலத்தில் ஒரு புதிய தலைமுறையே தோன்றி வளர்ந்திருக்கிறது. இவர்களுக்கு 'மகாபாரதம்' புதிய கதையே. பாரதப் பண்புகளை விளக்கி ஆன்ம நலம் கூட்டும் மகாபாரதம், மக்கள் அனைவரையும் ஈர்க்கும் சுவை செறிந்த கதைகள் அடங்கிய நூலாதலால், இளம் மக்களைக் கவர்ந்து நன்னெறியில் செலுத்த இத்தொடர் பெருதவி புரியுமெனத் திண்ணமாக நம்புகிறேன். வியாசருக்கே ஒப்பான ராஜாஜி உன்னதமும் எளிமையும் ஒன்று சேர்ந்த நடையில் மகாபாரதத்தை அளிக்கும் போது, அதனால் இளைஞர்களுக்கு உத்தமப் பண்புகளும், உயர்ந்த இலக்கியச் சுவையும் கைகூடும் என்பது உறுதி. கதை தெரியாதவர்களுக்குச் சுவாரஸ்யமாக இருப்பது மட்டுமின்றி, தெரிந்தவர்களையோ மீண்டும் மீண்டும் பருகிக் களிக்கச் செய்வது மகாபாரதம். எனவே, முன்பே இக்கதையைப் படித்தவர்கள், புதிதாக இதனைப் படிக்கப் போகிறவர்கள் ஆகிய இரு சாராருமே உள்ளம் பொங்கி இதனை வரவேற்பர்.

இம்மலரில் நான் பெருமையுடன் தொடங்கும் மற்றொரு தொடர், கொத்தமங்கலம் சுப்பு அவர்களின் "பொன்னிவனத்துப் பூங்குயில்". கொத்தமங்கலம் சுப்பு அவர்களுக்கு அறிமுகம் தேவையே இல்லை. திரை உலகிலும், பத்திரிகை உலகிலும், நாட்டுக் கலையுலகிலும் தமக்கெனத் தனியிடம் கொண்டவர் அவர். அவர் எழுத்திலெல்லாம் தமிழ் மண்ணின் மணமும், தமிழ்ப் பண்பின் பெருமையும், தமிழ்க் கலையின் கன்னிமிகு எழிலும் பரிமளிக்கும். கற்பனை வளமும், எழுத்தாற்றலும் மிகுந்த கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் காவேரிக் கரையைப் பின்னணியாகக் கொண்டு, தஞ்சையில் ஆண்ட மராட்டிய மன்னர் வாழ்வுடன் பாமர வாழ்வையும் பின்னிப் பிணைத்துப் புனைந்துள்ள 'பொன்னிவனத்துப் பூங்குயில்' தமிழிலக்கியப் பூங்காவில் ஒரு பூங்குயிலாகவே இனிமை பாடும்.

பொங்கலையும், கரும்பையும் ருசித்து உண்ணும் சிறுவர்கள் ரசித்து மகிழ்வதற்காக 'ஓநாய்க் கோட்டை' என்ற சித்திரத்தொடர் இவ்விதழில் ஆரம்பமாகிறது. இத்துறையில் நல்ல அநுபவம் வாய்ந்த வாண்டுமாமாவும் ரமணியும் இத்தொடரை அளிக்கிறார்கள்.

'அல்டாப் அப்பாசாமி' 'விளையாட்டில் வீராங்கனைகள்' 'ஒருமைப்பாடு வீடு' 'சுவையான சர்ச்சைகள்' ஆகிய புதிய சுவாரஸ்யமான அம்சங்களும் இவ்விதழிலிருந்து தொடங்குகின்றன.

இரண்டாவது உலகத் தமிழ் மகாநாடு பற்றிய விசேஷக் கட்டுரையை கல்கி நேயர்களின் அபிமான எழுத்தாளரான திரு சோமு அடுத்த இதழில் எழுதுகிறார். அயல்நாட்டுத் தமிழறிஞர் பற்றிய பேட்டிக் கட்டுரையும் வெளியாகிறது.

இனியும் இதே போல் — அல்லது இதனினும் சிறப்பாக — 'கல்கி' இலக்கியப் பணி புரிவதற்கு விநாயகப் பெருமானின் திரு அருளை நாடுகிறேன்.

சதாசிவம்

அடுத்த இதழில் :

மந்திரி திரு மதியழகனின்

"இத்தாலிய நினைவுகள்"

விசேஷக் கட்டுரை

# பெர்க்லி-கல்கி
# இலக்கியப் பரிசுத் திட்டம்



அமரர் கல்கி அவர்கள் சரித்திரக் கதைகள், சமூகக் கதைகள், நகைச்சுவைக் கதைகள் ஆகியவற்றை எழுதுவதற்கு இளம் எழுத்தாளர்களுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்கியவர். அன்னாரது நினைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில், அமெரிக்காவில் இயங்கும் பெர்க்லி தமிழ்ச் சங்கத்தின் ஒத்துழைப்புடன் இந்தச் சிறுகதைப் போட்டியினை நடத்துகிறது கல்கி ஸ்தாபனம்.

- சமூகச் சிறுகதைகள், சரித்திரச் சிறுகதைகள், ஹாஸ்யச் சிறுகதைகள் என மூன்று வகையான கதைகளை எழுத்தாள அன்பர்களிடமிருந்து வரவேற்கிறோம்.
- சமூகச் சிறுகதைகளில் முதல் பரிசு ரூ. 1000; இரண்டாவது பரிசு ரூ. 500; மூன்றாவது பரிசு ரூ. 250.
- இதேபோல் சரித்திரச் சிறுகதைகளுக்கும் ஹாஸ்யச் சிறுகதைகளுக்கும் முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் தனித் தனியே உண்டு. ஆக மொத்தம் ரூ. 5250 பரிசுத் தொகையாகப் பகிர்ந்து அளிக்கப்படும்.
- ஒருவர் எத்தனை சிறுகதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- கல்கியில் ஐந்து அல்லது ஆறு பக்கங்களுக்குள் அடங்குகிற மாதிரி சிறுகதைகள் அமைந்திருப்பது நலம்.
- பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப் படுபவற்றுக்கு வழக்கமான சன்மானம் உண்டு.
- சிறுகதைகளின் உரிமைகள் அனைத்தும் சிறுகதைகளின் ஆசிரியர்களுக்கே உரியன. முதன் முதலாகக் கல்கியில் வெளியிடும் உரிமை ஒன்று மட்டுமே கல்கி ஸ்தாபனத்துக்கு உரியது.
- இலக்கியத் துறையில் பிரபலமானவர்கள் பஞ்சாயத்தார்களாக இருந்து பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பார்கள்.
- இந்தப் போட்டி சம்பந்தமான எவ்விஷயத்திலும் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.
- தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் போதுமான தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டும்.
- போட்டி சம்பந்தமாக எந்தவிதமான கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.
- உறையின் மீது பெர்க்லி — கல்கி இலக்கியப் பரிசுத் திட்டம் என்றும், ஹாஸ்யச் சிறுகதை, சமூகச் சிறுகதை, அல்லது சரித்திரச் சிறுகதை என்றும் குறிப்பிடுதல் அவசியம்.
- முடிவு தேதி ஜூலை 15, 1968.
- எழுத்தாள அன்பர்களின் முழு ஒத்துழைப்பையும் நாடுகிறோம்.





# மக்கள் பசு பறவை அனைத்துக்கும் ஒரு திருவிழா

**கா**யத்ரீயைப் பற்றி நான் எழுதியதைக் கண்டு அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் மகிழ்ச்சியடைந்து எழுதியிருக்கிறார்கள். ஆஸ்திகத்துக்கும் தர்மத்துக்கும் ஆதரவு ஏதேனும் வந்தால், தீக்ஷிதர் அவர்கள் பெருமகிழ்ச்சியடைகிறார்கள். அவர்கள் மகிழ்ச்சியடைவதைக் கண்டு நான் தைரியமடைகிறேன். நான் எழுதியதில் குற்றம் ஒன்றும் இல்லை, சாஸ்திரத்துக்கு விரோதமாக எதுவும் இல்லை என்று கண்டு கொண்டு தைரியமடைகிறேன்.

புலன்களுக்குக் கோசரமாகாத பரம்பொருளை நாம் பெயர்கள் மூலமாகவும், மூர்த்திகள் மூலமாகவும், மனத்தில் நிர்ணயித்துக் கொண்ட பல வடிவுகள் மூலமாகவும் தியானம் செய்து வழிபடுகிறோம். இவற்றையெல்லாம் நாம் தியானத்துக்கு உதவும்படியான லிங்கங்களாக அமைத்துக் கொண்டு ஆஸ்திக வழியில் வாழ்க்கை நடத்துகிறோம். நம்முடைய கோயில்களிலுள்ள மூர்த்திகள், லிங்கங்கள் எல்லாம் நம்முடைய பக்தியினாலும் மந்திர சக்தியினாலும் பரம்பொருளின் அவதாரங்கள் ஆகின்றன. வைஷ்ணவ மார்க்கத்தில் இவற்றை ஸ்திரமான 'அர்ச்சாவதார'ங்களாகச் சொல்லுவது முறை. மூர்த்தி பூஜை செய்யாத பிற மதஸ்தர்கள் இதை நன்றாகப் புரிந்து கொள்ளுவதில்லை. கல் என்றும், வெள்ளி என்றும், வெண்கலம் என்றும் சொல்லி அவற்றைக் குறை கூறுகிறார்கள். பக்தியினால் தெய்வம் ஆவாகனம் செய்யப் பெற்ற லிங்கங்களின் சக்தியைப் பிற மதங்களில் பெரும்பாலோர் சரியாக உணர மாட்டார்கள்.

சில மூர்த்திகளும் லிங்கங்களும் சுவயம்பூ; அல்லது தமிழில் ''தான் தோன்றி'' என்று பிரித்துச் சொல்வது வழக்கம். அதாவது மனிதனால் ஆக்கப்படாமல், இயற்கையிலேயே தோன்றிய லிங்கம் என்று பொருள். லிங்கம் என்பது புலனுக்குக் கோசரமாகாத பரம்பொருளுக்கு நம்மால் பிரதிநிதித்துவம் அடைந்த சின்னங்களை உணர்த்தும் சொல். இதுதான் லிங்கம் என்ற சொல்லின் சரியான பொருள். இந்தச் சொல்லைக் குறிப்பிட்ட ஒரு தேக அங்கத்தின் பெயர் என்று வைத்துக் கொண்டு ஆராய்ச்சிக்காரர்கள் தவறாக எழுதி வருகிறார்கள். பழைய உபநிஷதங்களில் லிங்கம் என்ற சொல், நான் மேலே சொன்ன பொதுவான பொருளிலேயே பல இடங்களில் பிரயோகப்பட்டு வருகிறது. மனத்தில் தியானத்தின் போது உண்டாகும் வடிவத்துக்குக்கூட லிங்கம் என்ற பெயர்

சக்கரவர்த்தி
ராஜகோபாலாச்சாரியார்



தான் உபநிஷதங்களில் சில இடங்களில் சொல்லப்படுகிறது.

பரம்பொருளுக்குச் சிறந்த ஒரு லிங்கமாகும் சூரிய ஜோதி. உண்மையில் இந்த லிங்கம் சிறந்த தான்தோன்றி லிங்கம். இந்த சுவயம்பூவான லிங்கத்தின் பெருமை, மக்களுக்கும் எல்லா ஜீவன்களுக்கும் தாவர உயிர்களுக்கும் அது உணவும் உயிரும் கொடுக்கும் ஜோதியாக விளங்குவதே. நாமெல்லாம் சூரியனின் காப்பும் காவலும் பெற்று வாழ்கிறோம் என்பதைப் பௌதிகம் படித்தவர்கள் அனைவரும் அறிவார்கள். ஆதித்தனைவிட உயர்ந்த பூஜாலிங்கம் நாம் சம்பாதிக்க முடியாது. ஒவ்வொரு காலையும் மாலையும் புது எழில் அடைந்து நம்முடைய கண்.ணுக்குக் கோசரமாகும் இந்த மூர்த்தியை உள்ளம் முழுதையும் செலுத்திப் பூஜை செய்வோமாக.

பொங்கல் விழா சூரியனைத் துதிக்கும் தமிழ் விழா. பசுக்களும் பறவைகளும் — காக்கை குருவி — அனைத்தும் ஒன்று என்று கொண்டாடும் திருவிழா!



# ராஜாஜியின் கருத்துக்கள்

எனக்குப் பல சமயங்களில் 'டாக்டர் ஆஃப் லாஸ்' (சட்டங்களில் அறிஞர்) என்ற கௌரவப் பட்டம் வழங்கப்பட்டிருக்கிறது. ஒரு சர்வகலாசாலையில் மட்டும் 'சட்டங்களில் அறிஞர்' என்று பன்மையில் இராமல் 'சட்டத்தில் அறிஞர்' (டாக்டர் ஆஃப் லா) என்று பட்டம் வழங்கப்பட்டது. தவறுதலாகப் பன்மை விட்டுப் போய்விட்டதா என்று நான் உப அத்தியட்சகரை வினவினேன். 'அவ்வாறல்ல' என்று அவர் கூறி, 'சட்டங்களுக்கெல்லாம் மேலான ஒரு சட்டத்தை'யே பட்டம் குறிப்பதாக விளக்கினார். மொழிப் பிரச்னை பற்றி விவாதிக்கும்போது சட்டங்களையும், அவற்றுக்கு மேற்பட்ட ஒரு சட்டத்துக்குமிடையே உள்ள மாறுபாட்டைக் கவனித்தல் வேண்டும்.

சட்டங்களுக்கு மேம்பட்ட ஒரு சட்டம் என்பதே தருமம் எனப்படுவது. நீதி என்பதும் இதுவே. இந்த ஒரு சட்டத்துக்கு இசைவாகவே பார்லிமெண்ட் சட்டங்கள் செய்ய வேண்டும். சட்டங்கள் செய்வதற்குப் பார்லிமெண்ட் எவ்வளவு அதிகாரம் பெற்றிருப்பினும் தருமத்துக்கு ஒவ்வாத சட்டங்களை அது செய்வதற்கில்லை. இந்த அடிப்படை விதியை ஆட்சி மொழி திருத்த மசோதா மீறிவிட்டது. இது மக்களிடையே தாரதம்மியங்களை உண்டாக்கி, அனைவர்க்குமுரிய சம உரிமையைப் பாதித்திருக்கிறது.

ஹிந்தி பெரும்பான்மை மக்களின் மொழி அல்ல என்பது இப்போது நன்கு தெரிந்துவிட்டது. அப்படியே பெரும்பான்மையினரின் மொழியாக இருந்தாலுங்கூடப் பலவந்தத்தினால் சிறுபான்மைமீது அதனைத் திணிப்பதற்கு உரிமை இல்லை. உண்மையில் ஹிந்தி சிறுபான்மையினருக்குள் மிகப் பெரிய ஒரு கூட்டத்தின் மொழி, அவ்வளவே. பல பிரதேசங்களில் பலவிதமான பெரும் பேதங்களுடன் வழங்கப்படும் மொழி அது. மிகவும் செப்பம் செய்த நிலையிலுங்கூட, நவீன அறிவை வழங்கும் நுட்பச் சொற்றொடர்களை உண்டாக்கச் சக்தியற்ற மொழி ஹிந்தி. இப்போது பலர் உட்கார்ந்து நிர்வாகத்துக்காகவும், கல்விக்காகவும் வார்த்தைகளை உற்பத்தி செய்வது சிரமம் மட்டுமல்ல, வியர்த்தமுமாகும். இதனால் நிர்வாகம், கல்வி, நீதித்துறை இவற்றின் செயற்போக்கின் வேகமும் தடைப்படும்.

இதேபோல் தமிழை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்று நானே முன்னொரு காலத்தில் மனப்பூர்வமாகவும் கடினமாகவும் பிரயாசைப் பட்டதனால் இதைச் சொல்கிறேன். கடைசியில் இந்த முயற்சி தேசிய சக்தியை விரயம் அடிப்பதாகும் என்ற முடிவுக்கு வந்தேன்.

பெரும்பான்மையினரின் மொழியாகவும் இல்லாமல், போதிய வளர்ச்சியும் பெறாமல் இருக்கும் ஹிந்திக்குத் தனியான அந்தஸ்து தருவது, ஒரு பிரதேச மொழி மற்றப் பிரதேச மொழிகளின்மீது படையெடுக்க உரிமை தருவதாகும்.

பிரிட்டிஷ் ஆட்சியில் ஆங்கிலத்தைப் புகுத்தியது இயற்கையான வழியில் அல்ல. ஆயினும் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக அம்மொழியை உபயோகித்ததனால், அது பரஸ்பரத் தொடர்புக்கு ஓர் உத்தமக் கருவியாகி, எல்லாப் பகுதிக் கல்விமான்களையும் ஒன்றாக இணைக்கிறது. விரிந்து வருகிற நமது நிர்வாகத் துறை, கல்வித் துறை, வியாபாரத் துறை இவற்றுக்கும் உபயோகமாக உள்ளது. ஆங்கிலம் புகுத்தப்பட்டது எவ்விதத்திலாயினும், அதன் வளர்ச்சி இயற்கையாக ஏற்பட்டிருக்கிறது. நன்கு வளர்ச்சி பெற்றதும், நீண்ட காலம் பயன் படுத்திக் கொள்ளப்பட்டதுமான அம்மொழியின் இடத்தில் ஒரு பிரதேச மொழியை அமர்த்த விரும்புகிறார்கள்.

ஆங்கில அறிவு பெறுவதில் நாட்டின் எல்லாப் பகுதிகளும் சம வாய்ப்புப் பெற்றிருந்தன. எனவே, இம்மொழி நீடிப்பால் எந்தப் பகுதியினருக்கும் ஏற்றத் தாழ்வு இல்லை. இப்போது ஒரு பிரதேச மொழிக்கு மட்டும் ஆங்கிலத்தின் ஸ்தானத்தைத் தந்தால், அரசியல் விழிப்பு பெற்றுள்ள நம் மக்கள் இந்தப் பாரபட்சத்தை ஏற்கமாட்டார்கள். ஆட்சிமொழிப் பிரச்னையோடு உத்தியோக வாய்ப்பு என்பதும் நெருக்கமாகப் பிணைந்துள்ளது என்பதை இங்கு கவனிக்க வேண்டும்.

சுதந்திரம் வந்து விட்டது என்பதால் பெரிய மனக் கிளர்ச்சி கொண்டிருந்த தருணத்தில் ஆட்சி மொழிப் பகுதியை அரசியல் சாஸன சபை நிறைவேற்றி விட்டது. மொழி, மதம் இவற்றின் அடிப்படையில் அது வரை நம்மிடை காட்டப்பெற்ற வேறுபாடுகளை எளிதில் கடந்துவிடலாம் என்று எண்ணிய சமயம் அது. அந்தச் சூழ்நிலையில், குறிப்பிட்ட ஒரு காலத்துக்குப்பின் ஹிந்தி ஆட்சி மொழியாகும் என்ற சாஸனப் பகுதி வரையப்பட்டது. ஆனால் அந்த முடிவை நாடு ஏற்பதற்கு ஏற்ற வகையில் அதைத் தயார் செய்யுமுன்னரே, குறிப்பிட்ட காலம் முடிந்துவிட்டது. இதனால்தான் பிரச்னை எழுந்திருக்கிறது. பிரச்னையைத் தீர்ப்பதற்காக இரு பிரதமர்கள் தந்த வாக்குறுதியை நிறைவேற்றுமுகமாக, சாஸனப் பகுதியை மாற்றுகிற வகையில் ஆட்சிமொழி மசோதா கொண்டு வரப்பட்டது. ஆனால் உண்மையில் இம்மசோதா ஓர் ஏமாற்று வித்தையாகி இருக்கிறது. ஹிந்தியிலும் மற்றப் பிரதேச மொழிகளிலும் யூனியன் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் பரீட்சைகளை எழுதலாமாயின், இந்திய நிர்வாகத் துறையே பல ராஜ்ய நிர்வாகத் துறைகளாகப் பிளந்து போகும்.

பிரச்னையை எதிர்கொண்டு தீர்த்து வைக்காமல் அதிலிருந்து தப்பியோடுகிற காரியத்தையே மசோதா செய்திருக்கிறது. ஆனால் அதன் சிக்கலான அமைப்பினால் இந்த உண்மை மூடி மறைக்கப்பட்டிருக்கிறது. உண்மையாகவே நாட்டில் சமத்துவத்தையும் ஐக்கியத்தையும் காக்க மத்திய அரசாங்கம் அக்கறை கொண்டிருப்பின் ஆட்சி மொழி குறித்த சாஸனப் பகுதியின் அமலைத் தற்போதைக்கு நிறுத்தி வைத்திருக்க வேண்டும். அப்பகுதியாகிய சாஸனத்தின் பதினேழாம் பகுதி ஜீவாதார உரிமையின் கீழ் வருவதல்ல. எனவே, அதன் அமலை

நிகழ்காலத்துக்கு நிறுத்துவதால் சாஸனத்தை மீறியதாக ஆகாது. ஹிந்தி மக்கள் தமது மொழியைப் பிறர் மீது திணிப்பது, தமது ஜீவாதார உரிமைகளில் ஒன்று என்று கருதமாட்டார்கள் என நம்புகிறேன்.

அடிப்படையில் ஹிந்தியர், ஹிந்தி பேசாதோர் இரு சாராருமே ஒரே போல் நல்ல அம்சங்களும் கெட்ட அம்சங்களும் சேர்ந்தவர்தாம். ஒரு நாள் இல்லாவிடில் பிறிதொரு நாள் ஹிந்தியரும் பகுத்தறிவின் வழியை ஏற்பார்கள்.

அரசியல் சாஸனப் பகுதியில் ஆங்கிலம் நீடிக்கும் என்று திருத்தம் செய்வதோ, அல்லது சாஸனப் பகுதியையே ரத்து செய்வதோதான் சட்டபூர்வமான தீர்வு. ஆட்சி மொழி விஷயம் சாஸனத்தில் அவசியமில்லை. ஸர் ஸாமுவேல் ஹோர் வகுத்த இந்திய சர்க்கார் சட்டத்தில் ஆட்சி மொழி பற்றிப் பிரஸ்தாபம் கிடையாது. இது நிர்வாகத் துறை அவ்வப்போது சமயத்துக் கேற்பச் செய்ய வேண்டிய காரியம். சாஸனத்தின் ?பதினேழாம் பகுதி அமல் நிறுத்தப்பட்டாலோ அல்லது அதைத் திருத்தினாலோ தான் நமக்கு நீதி கிடைக்கும். மற்றபடி செய்யும் ஏற்பாடுகள் யாவும் வாயில் போட்டவுடன் சாம்பலாகிவிடும் மாயக் கனி போலத்தான்.

எந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டாலும், ஆங்கில நீடிப்புக்கான நம் போராட்டத்தை நாம் தளராமல் இறுதிவரை நடத்த வேண்டும். தனி மனிதனாக நான் பல முறை போராடியிருக்கிறேன். இவ்விஷயத்தில், நம் தரப்பில்தான் நியாயம் உள்ளது என்ற பூரண மன உறுதியுடன் போராடுவேன்.

சுதந்திரப் போராட்டத்தில்கூட என் லட்சியத்தின் சத்தியத்தில் இவ்வளவு உறுதியுடன் நான் போராடவில்லை. சுயஆட்சியின் எதிர்காலம் எப்படியெல்லாம் அமையுமோ என்ற என் அவநம்பிக்கையை 1922லேயே என் சிறை டயரியில் வெளியிட்டிருக்கிறேன். ஆனால் இன்று ஆட்சி மொழிப் பிரச்னையில் அத்தகைய ஐயம் எதுவும் எனக்கில்லை.

* * *

கடைசியில் ஷேக் அப்துல்லா எல்லாக் கட்டுப்பாடுகளினின்றும் விடுவிக்கப்பட்டிருக்கிறார். என்றுமே ஒன்றைச் செய்யாதிருப்பதைவிட, காலம் கடந்தியாவது செய்வது சிலாக்கியம் என்ற அளவில் இது நல்ல சேதி. ஆனால் ஒரு காலத்தில் காச்மீரத்தின் பிரதமராயிருந்தவருக்கு — நேரு அவர்களின் பிரிய நண்பராக இருந்தவருக்கு — இத்தனை காலமாக ஜீவாதார உரிமைகளை மறுத்ததற்கு இந்திய அரசாங்கம் எப்படி ஈடு செய்யப் போகிறது? அவருக்குக் காச்மீரத்தில் உரிய அந்தஸ்தைத் தந்து, அவர் சமாதானம் ஏற்படுத்தவும் காச்மீர நிர்வாகம் கூடிய வரையில் ஊழலும் அதிருப்தியும்இன்றி நடைபெறவும் உதவச் செய்ய வேண்டும். அப்போதுதான் நான் திருப்தி அடைவேன்.

* * *

தமிழ் மொழியிடம் உலக அறிஞர்கள் காட்டும் ஈடுபாடு குறித்துத் தமிழ் பேசும் மக்கட் தொகை முழுவதுமே உணர்ச்சிவசப்பட்டு மகிழ்ச்சி அடைந்திருப்பது இயற்கை. சர்வ தேசத் தமிழாராய்ச்சி மாநாட்டை ஒட்டிச் சென்னை மாநகரமே உற்சவக் கோலம் பூண்டிருக்கிறது.

நீண்ட காலமாகப் பேச்சு வழக்கிலிருந்தும், தமது தனி உருவைக் காத்து வரும் இரு பெரும் மொழிகள் தமிழும் அரபு மொழியுமே என்று அறிகிறேன். தமிழின் இந்தத் தனிச் சிறப்புக்களைப் பற்றித் தமிழ் மக்களும், தமிழறிஞர்களும் பெருமை கொள்வது நியாயம். தமது மொழி ஆராய்ச்சி உலகம் முழுவதிலும் உள்ள அறிஞர்களைக் கவர்ந்திருப்பது பற்றித் தமிழர்கள் நிச்சயம் பெருமிதம் கொள்ளலாம்.

அதே சமயத்தில் தமிழறிஞர்கள் மற்ற நாட்டறிஞர்களின் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டும். மற்ற நாட்டறிஞர்கள் தமிழ் இலக்கியத்தில் ஈடுபாடு காட்டுவது போல், நாமும் மற்ற மொழிகளில் ஈடுபாடு கொள்ள வேண்டும். குறைந்தபட்சம், நமது அண்டை மொழிகளான கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு முதலியவற்றைப் பயில வேண்டும். தமிழ் மக்கள் தமது அண்டை ராஜ்ய மொழிகளைப் புறக்கணிப்பது பற்றி நான் வருந்துகிறேன். இந்த அம்சத்தில் தமிழர்களைக் குற்றவாளிகள் என்றே சொல்ல வேண்டும். எல்லா இந்திய மொழிகளிலும் பேச்சு வழக்கிலுள்ள பதங்களை உள்ளடக்கிய ஒரு விரிவான நல்ல அகராதியை நாம் இன்னும் உருவாக்கவில்லை. இப்படி ஓர் அகராதி உருவாயின் இவற்றில் எந்த ஒரு மொழியிலேனும் தேர்ச்சிபெற்றிருப்பவரால் பிற மொழிகளில் குறிப்புக்கள் பார்க்கச் சௌகரியமாக இருக்கும். அதோடு ஆழ்ந்த மொழி அறிவும் பெற முடியும். சென்னை சர்வகலாசாலை முதல் முக்கியத்துவம் தந்து மேற்கொள்ள வேண்டிய காரியங்களில் இது ஒன்று.

தமிழின் ஒரு பேதமே மலையாளம். இதே அளவுக்குத் தமிழுடன் நெருக்கமானது கன்னடம் என்பதை மக்கள் உணரவில்லை. கன்னடத்தின் லிபியைப் பார்த்து, அது தமிழைவிடத் தெலுங்குக்கு நெருங்கியது என்று தவறாக நினைக்கிறார்கள். சரித்திரக் காரணங்களுக்காக இந்த லிபியைக் கன்னட மக்கள் ஏற்றார்கள். ஆனால் சொல்லிலக்கண ரீதியில் இதனால் நாம் குழப்பமடைந்துவிடக் கூடாது. ஆரம்ப காலக் கிறிஸ்துவ மிஷனரிகள் உருவாக்கிய தெலுங்கு லிபியில் பெரும்பாலும் தமிழையே எழுதுவதுதான் கன்னடம்.

ஏராளமான அந்நிய தேச அறிஞர்கள் தமிழில் அக்கறை காட்டுவதனால் நம்மையே பாராட்டிக் கொள்ளும் நாம், நமது சகோதர மொழிகளுடனாவது பரிசயம் கொண்டு, மொழிகளிடையுள்ள தொடர்பை மக்களிடையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது கடமை. வெவ்வேறு மொழிக்காரர்கள் ஒருவரிடமொருவர் அலட்சியம் காட்டுவது மாறி, பரஸ்பரம் படிப்பினைகள் பெற்று முன்னேற வேண்டும்.

# உலக அரங்கில் தமிழ்

தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவி, வெளிநாட்டு அறிஞர்கள், ஆராய்ச்சியாளர் தமிழகத்தின் தலைநகரிலே சென்னையில் ஒன்றுசேருகிறார்கள் என்றால் தமிழுள்ளம் பூரித்து மகிழக் கேட்பானேன்? தமிழ்நாட்டுக் கலைகளின் சிறப்பை நவிலும் கண்காட்சியை ராஜாஜி அவர்கள் சர்வகலாசாலை பரீட்சை மண்டபத்தில் தொடங்கி வைத்து அருமையான உரையாற்றினார்கள். இந்தக் கண்காட்சி தொடக்க விழாவுக்குச் சென்னை சர்வகலாசாலை துணைவேந்தர் திரு ஏ. லக்ஷ்மணசுவாமி முதலியார் தலைமை வகித்தார். தமிழகத்தின் அருங்கலைப் பொக்கிஷங்கள் பலப்பல இந்தக் காட்சியில் இடம் பெற்றுள்ளன. தமிழ்க் கோயில்களில் தெய்வங்களுக்கு அணிவிக்கப்படும் ஆபரணங்களும், அபூர்வ மூலிகைகளும், தமிழர்களின் இலக்கியச் செல்வங்களைச் சித்திரிக்கும் ஓவியர்களின் வண்ண ஓவியங்களும் கண்காட்சியாகத் திகழ்கின்றன.

உலகத் தமிழ் விழாவை யொட்டிச் சென்னை நகரமே விழாக்கோலம் பூண்டு விளங்கியது. சென்னை மவுண்ட் ரோடு, தீவுத்திடலிலிருந்து புறப்பட்ட பிரும்மாண்டமான அலங்







கார பவனி கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்ந்தது. மாநகரத்தின் வீதிகளிலே வள்ளுவர், ஆண்டாள், கப்பலோட்டிய தமிழர் முதலிய பல தமிழ் வளர்த்த மாமேதைகளின் உருவங்களும், ஆராய்ச்சிமணி, ஆனை கட்டிப் போர் அடித்தல், அண்ணலும் நோக்கினன் போன்ற இலக்கியக் காட்சிகளும் கலைத் தேர்களாகப் பவனிவரக் கண்டோம். இன்னிசை ஒலித்தது; வாத்தியங்கள் முழங்கின; கரகம், காவடி, பரதம் போன்ற நடனங்களும் ஓடுகின்ற தேர்களிலே நடைபெற்றன. லட்சக்கணக்கான மக்களோடு ஒருவராக இருந்து, பாரத ராஷ்டிரபதி ஜாகிர் ஹுசேன் தமிழகத்தின் பண்பாட்டையும் பெருமையையும் இலக்கியக் காட்சிகளையும் விளக்கும் அலங்கார வண்டிகளைப் பார்த்து மகிழ்ந்தார். அதோடு இரண்டாவது உலகத் தமிழ் மகாநாட்டை மெரினா கடற்கரையில் தொடங்கி வைத்து, தமிழின் சிறப்பையும் தமிழர்களின் மேன்மையையும் சாதனைகளையும் எடுத்துக் கூறினார். தெருவெல்லாம் தமிழ் முழக்கம், நகரின் பல பகுதிகளிலும் தமிழ் விழாச் சொற்பொழிவுகள், கலை நிகழ்ச்சிகள், கொண்டாட்டங்கள். உலக அரங்கில் தமிழின் சிறப்பு உயர்ந்ததோடு, தமிழகத்தின் புகழும் பாரில் பட்டொளி வீசிப் பறக்கக் காண்கிறோம்.

**படங்கள் :**

கண்டதில்லை கேட்டதில்லை சென்னை, இந்த மாதிரியான ஒரு ஊர்வலக் காட்சியை என்னுமளவுக்கு அலங்கார வாகனங்கள் ஒன்றன்பின் ஒன்றாய்ச் செல்கின்றன. சுமார் ஒரு மைல் நீளத்துக்கு அமைந்திருந்த ஊர்வலத்தை விழாவில் பங்கு பற்றப் பல நூறு மைல்கள் பயணம் செய்து வந்திருந்த லட்சோப லட்சம் மக்கள் கண்டு களிக்கின்றனர்.

ராஷ்டிரபதி அவர்களின் சொற்பொழிவை உன்னிப்பாகக் கவனித்துக் கேட்கிறார் முதன் மந்திரி.

கலைக் கண்காட்சியைத் திறந்து வைத்த ராஜாஜி அவர்களும் தலைமைதாங்கிய ஏ. எல். முதலியார் அவர்களும் கண்காட்சி மலரைப் பார்வையிடுகிறார்கள்.

சென்னைக் கடற்கரையில் தொடக்க விழாவின்போது கூடியிருந்த பெருந் திரளான மக்களில் ஒரு பகுதி.





# முன்மொழி

மகாபாரதக் கதையை அறியாதவர்கள் இந்த நாட்டு மக்களாகக் கருதப்பட மாட்டார்கள். எல்லாரும் அசல் பாரதக் கதையை முழுதும் படிக்க இயலாது. அதற்காக 'வியாசர் விருந்'தை எழுதினேன். படித்தது போதாது என்பது என் எண்ணம். லட்சக் கணக்காகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வியாசர் விருந்து விற்கப்படுகிறது. இப்போதும் முழு புஸ்தகம் வேண்டியவர்கள் பாரதி பதிப்பகத்தில் தமிழ் நூலும், பாரதீய வித்தியாபவன் புஸ்தகாலயத்தில் ஆங்கில மொழிபெயர்ப்பும் பெறலாம். மக்களை எப்படி இந்த இதிகாசத்தைப் படிக்கச் செய்வது என்று யோசித்து மறுபடியும் வாரம் வாரம் வியாசர் விருந்துக்கு கல்கியில் இடம் கொடுத்துப் பாருங்கள் என்று நான் சொன்னதை ஒப்புக்கொண்டு கல்கி காரியாலயத்தினர் பிரசுரிக்கிறார்கள். "மகாபாரதம்" என்ற தலைப்பில் பிரசுரிக்கப்படுகிறது. எல்லாரும் படியுங்கள். நம்முடைய இதிகாசங்களைப் படித்தால் பொய்யும் மோசமும் தூர விலகி நிற்கும். நல்வழியில் மனம் தைரியமாகச் செல்லும். தமிழர்களுக்கு என் ஆசீர்வாதம். பொய்யும் மோசமும் நாட்டை நசித்துவிடும் — நல்வழியே விமோசனத்துக்கு வழி.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# மகாபாரதம்

## ராஜாஜி

### கணபதி ராயசம்

பராசர மகரிஷியின் புத்திரர் புகழ் பெற்ற வியாச பகவான். வியாசர் வேதத்தைத் தொகுத்துக் கொடுத்தவர். இவரே மகாபாரதம் என்னும் புண்ணியக் கதையையும் உலகத்துக்குத் தந்தவர்.

பாரதத்தைத் தன் மனத்தில் யாத்த பின் இதை எவ்வாறு உலகத்துக்குத் தருவது என்று வியாசர் சிந்தித்தார். பிரம்மனைத் தியானித்தார். பிரம்மதேவன் பிரத்தியட்சமானதும் வியாசர் கைகூப்பித் தலைவணங்கி, ''பகவானே! சிலாக்கியமான நூல் ஒன்று என்னாலே மனத்தில் செய்யப்பட்டிருக்கிறது. இதை எழுதுகிறவர்கள் யாரும் பூமியில் இல்லையே!'' என்றார்.

பிரம்மதேவன் வியாசரை மிகப் புகழ்ந்து, ''ரிஷியே! உம்முடைய நூலை எழுதுவதற்காகக் கணபதியைத் தியானம் செய்யும்'' என்று சொல்லி விட்டு மறைந்தார். வியாச மகரிஷி விநாயகரைத் தியானிக்க அவரும் எழுந்தருளினார். அவரை வியாசர் முறைப்படி பூஜை செய்து, ''கணநாதரே! பாரதத்தை நான் சொல்லச் சொல்ல நீர் எழுத வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

விக்நேசுவரர், ''சரி, அப்படியே செய்கிறேன். ஆனால் எழுதும்போது என்னுடைய எழுதுகோல் நிற்காது. நிறுத்தாமல் சொல்லிக் கொண்டே போக வேண்டும். அப்படியானால்தான் நான் உமக்காக எழுத முடியும்'' என்றார்.

இந்தக் கடுமையான நிபந்தனையை வியாசர் ஒப்புக் கொண்டு, ''பொருளை அறிந்து கொண்டே நீர் எழுதிக் கொண்டு போக வேண்டும்'' என்று எதிர் நிபந்தனை ஒன்று கேட்டார்.

கணபதி நகைத்துவிட்டு இதற்குச் சம்மதித்தார். அதன் மேல் மகரிஷி பாரதம் பாட ஆரம்பித்தார். ஆங்காங்கு பொருள் விளங்காத முடிச்சுகளை அமைத்துச் சற்று நேரம் விக்நேசுவரர் தயங்கி நின்ற காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு வியாசர் அநேக சுலோகங்களை மனத்தில் கவனம் செய்து முடித்துக் கொள்வார். இவ்



வாறு பாரதம் வியாசரால் பாடப் பட்டுக் கணநாயகரால் எழுதப்பட்டது.

அந்தக் காலத்தில் அச்சுக் கிடையாது. கல்வி கற்றவர்களுடைய ஞாபக சக்தியே நூல்களுக்கு ஆலயமாக இருந்தது. வியாசர் தாம் செய்து எழுதுவித்த பாரதத்தை உடனே முதலில் தம்முடைய புத்திரரான சுகமுனிவருக்குச் சொல்லி வைத்தார். பிறகு தம் சிஷ்யர்கள் பலருக்கும் சொல்லி வைத்தார். இல்லாவிடில் நூல் கெட்டுப்போய்விடலாம் அல்லவா?

தேவர்களுக்குப் பாரதம் சொன்னவர் நாரதர் என்றும், கந்தர்வர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் யக்ஷர்களுக்கும் சுகர் சொன்னார் என்றும் கதை. மனித லோகத்திற்காகப் பாரதத்தைச் சொன்னவர் வியாசருடைய முக்கிய சிஷ்யரும் தருமசீலரும் வித்துவானுமான வைசம்பாயனர் என்பது பிரசித்தம். பரீக்ஷித்து மகாராஜாவின் மகன் ஜனமேஜய ராஜா நடத்திய ஒரு பெரிய யாகத்தில் அவனால் ஏவப்பட்டு வைசம்பாயனர் பாரதத்தை விஸ்தாரமாகச் சொன்னார். வைசம்பாயனர் சொன்ன இந்தப் பாரதத்தைப் பிறகு பௌராணிகரான சூதர் நைமிசாரணியத்தில் சௌனக ரிஷியின் தலைமையில் ரிஷிகளையெல்லாம் சபையாகக் கூட்டி அவர்களுக்குச் சொன்னார்.

''தர்மார்த்தங்களை உபதேசிப்பதற்காக வியாச பகவான் பாடிய பாரதக் கதையை நான் கேட்டிருக்கிறேன். அதை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்'' என்று சூதர் சொன்னவுடன் தபோதனர்கள் அனைவரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''ஜனமேஜய ராஜாவின் யாகத்தில் வியாசர் உத்தரவின்படி வைசம்பாயனர் சொன்ன மகாபாரதக் கதையையும் உபகதைகளையும் நான் கேட்டு, பிறகு பல தீர்த்தங்களுக்கு யாத்திரை போய், பாரத யுத்தம் நடந்த போர்க்களத்தையும் பார்த்துவிட்டு உங்களைத் தரிசிக்க இங்கே வந்தேன்'' என்று ஆரம்பித்து மகாபாரதம் முழுவதையும் சொன்னார்.

ஃ ஃ ஃ

**ச**ந்தனு மகாராஜாவுக்குப் பின் சித்திராங்கதனும் அவனுக்குப்பின் விசித்திர வீரியனும் ஹஸ்தினாபுரத்தில் அரசாண்டார்கள். விசித்திர வீரியனுக்குத் திருதராஷ்டிரன், பாண்டு என்ற இரண்டு குமாரர்கள். மூத்தவன் பிறவிக் குருடனானபடியால் பாண்டுவுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. ராஜ்ய பாலனம் செய்து வந்த பாண்டு தான் செய்த ஒரு தவற்றுக்காக மனைவிகளுடன் வனத்துக்குத் தவம் செய்யப் போய் அங்கேயே பல நாட்கள் வசித்து வந்தான்.

வனத்திலிருக்கும்போது குந்தியும் மாத்ரியும் பஞ்ச பாண்டவர்களைப் பெற்றார்கள். பாண்டு காட்டிலேயே இறந்துவிட்டான். ரிஷிகள் பஞ்சபாண்டவர்களைப் பால்ய பருவம் முடியும்வரையில் பார்த்து வந்து, யுதிஷ்டிரனுக்குப் பதினாறு வயது ஆனதும் எல்லாரையும் ஹஸ்தினாபுரத்துக்கு அழைத்துக் கொண்டு போய்க் கிழவர் பீஷ்மரிடம் ஒப்புவித்தார்கள்.

பாண்டவர்கள் வேத வேதாந்தங்களையும் க்ஷத்திரியர்களுக்கு வேண்டிய கலைகளையும் வெகு சீக்கிரத்தில் கற்றுக்கொண்டு எல்லாரும் பாராட்டும் வகையில் நடந்து கொண்டார்கள். திருதராஷ்டிரன் மக்களான கௌரவர்களுக்கு இவர்களைக் கண்டு பொறாமை உண்டாயிற்று. அவர்களுக்குப் பல வகைத் தீங்குகளைச் செய்யத் தொடங்கினர்.

கடைசியாக, குலத்துக்குத் தலைவரான பீஷ்மர் எல்லாருக்கும் சமாதானம் சொல்லி, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஒப்பந்தம் செய்து வைத்தார். அதன்பின் பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்திலும் கௌரவர் ஹஸ்தினாபுரத்திலுமாகத் தனியாக இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இப்படியிருந்து வந்தபோது அந்தக் காலத்து க்ஷத்திரிய வழக்கத்தின்படி கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஒரு சூதாட்ட விழா நடந்தது. அதில் கௌரவர்களுக்காக ஆடின சகுனி, யுதிஷ்டிரரைத் தோல்வியடையச் செய்து அதன் பயனாகப் பதின்மூன்று வருஷம் பாண்டவர்கள் வனவாசம் செய்யும்படி நேர்ந்தது. அப்படியே அவர்கள் ராஜ்யத்தை விட்டு, திரௌபதியையும் அழைத்துக்கொண்டு வனம் சென்றார்கள்.

பன்னிரண்டு வருஷங்கள் அரணியத்திலும் பதின்மூன்றாவது வருஷம் மறைவாகவும், சூதாட்ட நிபந்தனைப்படி கழித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். அப்போதும் அவர்கள் சொத்தை அபகரித்துக் கொண்டிருந்த துரியோதனன் அதைத் திருப்பிக் கொடுக்கச் சம்மதிக்கவில்லை. அதன்





பேரில் யுத்தம் நடந்தது. துரியோதனுதிகளைக் கொன்று சாம்ராஜ்யத்தை அடைந்தார்கள்.

இதற்கு மேல் பாண்டவர்கள் 36 வருஷம் ராஜ்ய பரிபாலனம் செய்தார்கள். பிறகு, பேரன் பரீக்ஷித்துக்குப் பட்டம் சூட்டிவிட்டுப் பாண்டவர்களும் திரௌபதியும் மரவுரி தரித்து வனம் சென்றார்கள்.

இதுவே பாரதக் கதையின் சுருக்கம். நம்முடைய நாட்டின் பழம் பெரும் காப்பியமாகிய இந்த அற்புத நூலில் பாண்டவர்கள் சரித்திரமல்லாமல் எத்தனையோ உப கதைகளும் இருக்கின்றன. எண்ணற்ற முத்துக்களும் ரத்தினங்களும் கிடக்கும் மகாசமுத்திரத்தைப் போன்றது மகாபாரதம். இதுவும் ராமாயணமும் நம்முடைய நாட்டின் தருமத்துக்கும் பண்பாட்டுக்கும் வற்றாத ஊற்றுகள். அவற்றை மக்கள் படித்தும் கேட்டும் வரும் வரையில் நம்முடைய நாட்டின் பண்பாட்டுக்குச் சேதமில்லை.

# தேவ விரதன்

"நீ யாராயிருந்தாலும் எனக்குப் பாரியையாகக் கடவாய்!"

குமரியுடல் தரித்து, மானிட லோகத்தில் நின்ற கங்காநதியின் அழகைக் கண்டு மோகித்த சந்தனு மகாராஜா இவ்வாறு சொன்னான்.

"என்னுடைய ராஜ்யமும் எனக்குள்ள தனமும், என் உயிரும் எல்லாம் உன்னைச் சேர்ந்தவை. உன்னை யாசிக்கிறேன்" என்று வற்புறுத்தினான்.

"பூபதியே, நான் உன் மகிஷியாவேன்! ஆனால் நீயாவது வேறு யாராவது என்னைப் பற்றி, நீ என்ன குலம் என்று எந்தச் சமயத்திலும் கேட்கக் கூடாது. நல்லதோ கெட்டதோ நான் எதைச் செய்தாலும் தடுக்கக் கூடாது. என் மேல் எந்தக் காரணத்தைக் கொண்டும் கோபிக்கக் கூடாது. பிரியமற்ற மொழிகளையும் சொல்லக் கூடாது. அவ்வாறு நடந்தால் உடனே உன்னை விட்டுவிட்டுப் போய்விட வேண்டியவளாவேன். இது உனக்குச் சம்மதமா?" என்று கேட்டாள் கங்கை.

"அப்படியே!" என்று காதலின் வேகத்தால் அரசன் சத்தியம் செய்து ஒப்புக் கொண்டான்.

கங்காதேவியினுடைய வினயமும், ஒழுக்கமும், உபசாரமும், கூட இருக்கும் போதும் இல்லாத போதும் ஒரே மாதிரியாகத் தன்னிடம் அவள் காட்டிய அன்பும், அரசனுடைய இதயத்தைக் கவர்ந்தன. காலத்தின் ஓட்டம் அறியாமல் சந்தனு ராஜாவும் கங்கையும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி வாழ்ந்தார்கள்.

கங்காதேவி பல குழந்தைகளைப் பெற்றாள். ஆனால் சூரிய தேஜஸ் கொண்ட அந்தக் குழந்தைகள் ஒவ்வொன்றையும், பிறந்ததும் கொண்டு போய்ப் பிரவாகத்தில் போட்டுவிட்டுச் சிரித்துக் கொண்டு கங்காதேவி அரசனிடம் திரும்பி வருவாள்.

இந்த அருவருப்பான நடவடிக்கையைப் பார்த்துச் சந்தனுவுக்கு வியப்பும் துக்கமும் மேலிட்டுப் பொங்கும். ஆயினும் தான் கொடுத்த வாக்குறுதியை எண்ணி ஒன்றும் சொல்

லாமல் பொறுத்துக் கொண்டிருந்தான். இவள் யார், எங்கிருந்து வந்தவள், பேய் பிசாசுகளைப் போல் நடந்து கொள்கிறாளே என்று அடிக்கடி தனக்குள் எண்ணுவான். ஆனால் வாய் திறக்கவில்லை.

ஏழு குழந்தைகளை இவ்வாறு கொன்றாள். எட்டாவது குழந்தை பிறந்தது. அதையும் அவள் கங்கையில் கொண்டு போய்ப் போடப் போனபோது சந்தனுவின் மனம் பொறுக்கவில்லை.

''நில், நில்! ஏன் இந்தப் பாபகர்மத்தைச் செய்கிறாய்? பெற்ற பிள்ளைகளை ஏன் இவ்வாறு காரணமின்றிக் கொல்கிறாய்? மிகவும் இழிவான இந்தக் காரியம் உனக்குத் தகாது'' என்று தடுத்தான்.

உடனே அவள், ''மகாராஜாவே! பிரதிக்ஞையை மறந்து விட்டாய். புத்திரனிடம் விருப்பம் கொண்டவனே! இனி உனக்கு நான் வேண்டிய தில்லை. போகிறேன். இந்த மகனைக் கொல்லவில்லை. நான் யார் என்பதை இப்போது அறிந்து கொள். ரிஷிகளும் முனிவர்களும் போற்றிவரும் கங்கா நதியின் தேவதையாவேன். வசிஷ்டர் சாபத்தால் அஷ்ட வசுக்கள் மானிட உலகத்தில் பிறக்க வேண்டியதாயிற்று. ஆதலால் அவர்களைப் பெற்றேன். மனித உலகத்தில் அவதரிக்க நேரிட்ட அவர்களுக்கு நான் தாயாராக இருக்கவேண்டும் என்று அவர்கள் வேண்டிக் கொண்டபடி நான் அவர்களை உன்னிடம் பெற்றேன். மானிட உலகத்தில் சிறப்பு வாய்ந்த உன்னைத் தகப்பனாக அவர்கள் பெற்றதும் நல்லதே. அஷ்ட வசுக்களை மக்களாகப் பெற்ற நீயும் உயர்ந்த லோகங்களை அடைவாய். இந்தக் கடைசிக் குழந்தையை நான் கொஞ்ச காலம் வளர்த்து உன்னிடம் ஒப்புவிப்பேன். என்னால் கொடுக்கப்பட்ட தனமாக நீ இந்தப் புத்திரனைப் பெறுவாய்'' என்று அரசனுக்குச் சொல்லிவிட்டு மறைந்தாள். அந்தக் குழந்தையே பீஷ்மர், பாண்டவ கௌரவ குலங்களுக்குப் பிதாமகர்.

ஃ ஃ ஃ

ஒரு நாள் அஷ்ட வசுக்கள் தம் மனைவிமார்களுடன் வசிஷ்டர் ஆசிரமமிருந்த மலைச்சாரலுக்கு வந்து, அங்கே குன்றுகளிலும் வனங்களிலும் சஞ்சரித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களில் ஒருவன் வசிஷ்டருடைய பசு நந்தினி, அங்கே மேய்ந்து கொண்டிருந்ததைப் பார்த்து அதன் அழகையும் திவ்விய மங்களாகாரத்தையும் கண்டு அதிசயித்து, தன்னுடன் இருந்த வசுக்களின் தேவிமார்களுக்குக் காட்டினான். அவர்கள் எல்லாரும் ஒருவருக்கு மேல் ஒருவராக வசிஷ்டருடைய பசுவின் அழகைக் கண்டு வியந்து பேசிக் கொண்டிருக்க, அவர்களில் ஒருத்தி, இந்தப் பசு தனக்கு வேண்டும் என்று தன் புருஷனைக் கேட்டுக் கொண்டாள்.

''தேவர்களாகிய நமக்குப் பசுவின் பால் என்னத்திற்கு?'' என்றான் வசு. ''இது வசிஷ்ட முனிவருடையது. இந்தத் தபோவனத்திற்கு அவர் உடையவர். இதன் பாலைக் குடித்த மனிதர்கள் பாக்கியம் பெறுவார்கள். தேவர்களாகிய நாம் அதனால் அடைய வேண்டிய நன்மை ஒன்றுமில்லை. வசிஷ்ட ரிஷியின் கோபத்துக்கு ஆளாவோம்'' என்று அந்த வசு, தன் மனைவியின் கோரிக்கையை மறுக்கப் பார்த்தான்.

''மனுஷ்ய லோகத்தில் எனக்கு ஒரு பிரியமான தோழி இருக்கிறாள். அவளுக்காக நான் இதைக் கேட்கிறேன். வசிஷ்டர் வனத்துக்குத் திரும்பி வருவதற்குள் பசுவைக் கொண்டு போவோம். நீ எனக்காக இதைச் செய்தே தீர வேண்டும். எனக்கு இதை விட மேலான பிரியம் ஏதுமில்லை'' என்று அவள் தன் புருஷனை வற்புறுத்தினாள். முடிவில் அவனும் இசைந்தான். எல்லா வசுக்களும் சேர்ந்து பசுவையும் கன்றையும் கொண்டு போய் விட்டார்கள்.

வசிஷ்டர் ஆசிரமம் திரும்பி வந்து தம் நித்திய கருமங்களுக்கு இன்றியமையாத பசுவும் கன்றும் இல்லாததைக் கண்டு நடந்ததைத் தெரிந்து கொண்டார். அதன் மேல் கோபம் கொண்டு வசுக்களைச் சபித்தார். அவர்கள் மனித உலகத்தில் பிறக்க வேண்டும் என்று தபோதனர் எண்ணினார். எண்ணியதும் அந்தச் சாபம் வசுக்களை எட்டியது.

உடனே அவர்கள் வசிஷ்டருடைய ஆசிரமத்துக்கு ஓடி வந்து ரிஷியைக் கெஞ்சினார்கள்.

''சாபத்தை நிறுத்த முடியாது. பசுவைக் கொண்டு போனவனான பிரபாஸன் நீண்ட காலம் பூவுலகில் புகழ் பெற்று வசிப்பான். மற்றவர்கள் பூமியில் பிறந்தவுடன் விடுதலை அடைந்து விடுவார்கள். நான் சொன்ன சொல்லைப் பொய்யாக்க முடியாது. இவ்வளவுதான் செய்ய முடியும்'' என்று

வசிஷ்டர் சொல்லி விட்டார். அதன் பிறகு, கோபத்தால் ஓரளவு அழிந்து போன தவத்தில் வசிஷ்டர் மனம் செலுத்தினார். தவம் செய்த ரிஷிகள் தங்கள் சக்திகளைக் கொண்டு சாபம் கொடுக்க முடியும். ஆனால் அவ்வாறு தங்கள் சக்தியை உபயோகித்தால் தவம் நஷ்டமாகும்.

வசுக்கள் இவ்வளவாவது நல்ல கதி பெற்றோமே என்று திரும்பினார்கள். அதன் மேல் கங்கையிடம் சென்று, ''நீதான் எங்களுக்குத் தாயாக வர வேண்டும். எங்களுக்காக நீ பூவுலகம் போய் ஒரு நல்ல புருஷனையும் அடைந்து எங்களுக்குச் சீக்கிரத்தில் விடுதலை தர வேண்டும். பிறக்கப் பிறக்க எங்களை உடனே ஜலத்தில் போட்டுவிடு'' என்று கேட்டுக் கொண்டார்கள். கங்கையும் அவ்வாறே ஒப்புக் கொண்டு மானிட உலகத்தில் அதற்காகச் சந்தனுவைப் புருஷனாக அடைந்தாள்.

ஃ ஃ ஃ

**க**ங்காதேவி எட்டாவது குழந்தையை எடுத்துக் கொண்டு சந்தனுவை விட்டு நீங்கியபின், பெண்களிடம் சுகம் பெறும் எண்ணத்தை நீக்கிக் கொண்டு அரசன் வைராக்கியமாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான்.

ஒரு நாள் கங்கா தீரத்தண்டை போனபோது தேவேந்திரனைப் போன்ற அழகும் உடல் கட்டும் பெற்ற ஒரு வாலிபன் அஸ்திரப் பிரயோகம் செய்து கங்காப் பிரவாகத்தைத் தடுத்துக் கொண்டிருந்ததைக் கண்டு அங்கேயே நின்றான். பிறகு தன் குழந்தைக்கு இவ்வாறு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்த கங்காதேவியே பிரத்தியட்சமானாள். குமாரனை அரசனிடம் ஒப்புவித்தாள்.

''அரசனே! என்னிடத்தில் நீ அடைந்த எட்டாவது புத்திரனும், இதுவரையில் என்னால் வளர்க்கப் பட்டவனுமான தேவவிரதன் இவன்; எல்லா அஸ்திரங்களும் படித்துவிட்டான். வசிஷ்டரிடம் வேதமும் வேதாந்தங்களும் ஓதியிருக்கிறான். சுக்கிராச்சாரியார் அறிந்த சாஸ்திரங்கள் எல்லாம் இவன் கற்றிருக்கிறான். யுத்தத்தில் பரசுராமருக்குச் சமானமானவன். வில்லாளியும், வீரனும், ராஜநீதிகளை அறிந்தவனுமான உன் மகனை அழைத்துப் போ!'' என்று அரசனுக்குச் சொல்லி மகனையும் ஆசிர்வதித்துத் தகப்பனிடம் ஒப்புவித்துவிட்டு, கங்கை மறைந்தாள்.

**(தொடரும்)**

**படித்துப் பாருங்கள்**

# கை விளக்கு

**ஆ**த்ம ஞானத்தில் திளைத்து, அநுபவ ஞானத்தில் உயர்ந்து, வேதாந்தக் கருத்தின் நுணுக்கங்களை உணர்ந்து ஞானப் பழமாக விளங்கும் பாரத ரத்னமாகிய ராஜாஜி அவர்கள் உபநிடதப் பலகணியைத் திறந்து வைத்து, அதன் மூலம் நம்மவர்க்கெல்லாம் 'கண்ணன் காட்டிய வழி'யைப் பல்லாண்டுகளுக்கு முன்னமே காட்டி விட்டார். மிகவும் எளிய சொற்களை வைத்துக் கொண்டுஉயர்ந்த விஷயங்களை மிகவும் சுலபமாக எல்லாரும் விளங்கிக் கொள்ளும் விதத்தில் எழுதுவதில் ராஜாஜிக்கு நிகர் ராஜாஜிதான்.

பகவத் கீதை என்றால் ஏதோ பெரியவர்களுக்கென்றே ஏற்பட்டுவிட்ட ஞான நூல் என்ற அச்சத்தைப் போக்கி, நாமும் பெரியவர்களாகி வயது முதிர்ந்த பிறகு படித்துக் கொள்ளலாம் என்ற அசிரத்தையை அகற்றி எல்லோரையும் படிக்கத் தூண்டும் விதத்தில் ராஜாஜியின் 'கைவிளக்கு' அமைந்திருக்கிறது. 'கைவிளக்கை' உபயோகிக்கப் பெரியவர்கள்தான் முன்வர வேண்டும் என்ற நிபந்தனை ஏதேனும் உண்டா ?

எத்தனை எத்தனை வியாக்கியானங்கள் எழுதப்பட்டும் இன்னும் கீதையை விளங்கிக் கொள்வது சிரமமாகத்தான் இருந்தது. ''கைவிளக்கு'' கையில் இருந்தால் அந்தச் சிரமம் துளிக்கூடத் தெரியாது. சுலோகங்களின் எண்ணைக் கொடுத்து அதனடியில் சாராம்சமான விளக்கம் தரப்பட்டிருக்கிறது. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது 'கைவிளக்கு''.

திருவாய் மொழி, திருக்குறள், உபநிஷத்து ஆகியவற்றின் கருத்துச் செறிந்த உதாரணங்கள் மிகப் பொருத்தமாகக் கையாளப் பட்டிருக்கின்றன.

இச்சிறு நூலில், கடினமான அத்தியாயப் பிரிவுகளுக்குத் தேவையான முன்னுரை மிகத் தெளிவான முறையில் தரப்பட்டிருக்கிறது.

''இதற்கு 'கைவிளக்கு' என்கிற பெயர் தந்திருக்கிறேன்; கஷ்டமும் இருட்டும் மலிந்து நிற்கும் உலக வாழ்க்கையில், இது ஒரு கைவிளக்காக, காற்றில் அணையாத விளக்காக உதவும் என்கிற நம்பிக்கையுடன்'' என்ற ஆசிரியரின் முன்னுரை வாக்கியம் முற்றிலும் உண்மையானது.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17; விலை: ரூ. 1-15.




வைகுண்ட
ஏகாதசியையும்,
திருவாதிரையையும்
ஒட்டி இவ்விதழ்
வெளியாகிறது.




தில்லை கீழகோபுரம்

ஸ்ரீரங்கம் நான்முகன் வாசல்

ஸ்ரீரங்கத்துக்கும் சிதம்பரத்துக்கும்தான் எத்தகைய அரிய ஒற்றுமை? ஸ்ரீ வைஷ்ணவர்கள் 'கோயில்' என்று சொன்னால் அது ஸ்ரீரங்கத்தைத்தான் குறிப்பிடும். சிவநேசர்கள் 'கோயில்' என்று கூறினால் அது சிதம்பரத்தையே குறிப்பிடும். ஸ்ரீரங்கத்தைப் பூலோக வைகுண்டம் என்பர்; சிதம்பரமோ பூலோக கைலாசம். அரங்கம் என்பது நடன மேடையைக் குறிக்கும். அம்பலமும் ஆனந்தக் கூத்துக்கான ஆகாய மேடைதான். அரங்கநாதன், சிதம்பரநாதன் இருவருமே பொன்வேய்ந்த விமானத்தின்கீழ் வதிகிறார்கள். இவ்விருவருக்குமே 'ராஜன்' என்ற சப்தம் பொருந்துகிறது. ஒருவன் ரங்கராஜன்; மற்றவன் நடராஜன். 'தெற்கிலிருந்து வரும் யமதர்மனிடமிருந்து அடியாரைக் காக்கிறேன்' என்று சொல்லாமல் சொல்வது போல் ரங்கராஜன், நடராஜன் இருவருமே தெற்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார்கள். அறிதுயில்மூர்த்தி பள்ளி கொள்ளும் ரங்க விமானமும், ஆனந்தக்கூத்தன் ஆடுகின்ற சிற்சபையும் சநாதன சமய சித்தாந்தங்களை விளக்குபவை. ஸ்ரீரங்கநாதனின் இருக்கையை அடுத்த காயத்ரி மண்டபத்தில் காயத்ரி மகாமந்திரத்தின் இருபத்துநான்கு அட்சரங்களும் இருபத்து நான்கு தூண்களாயின; ரங்க விமானமோ ஓம்காரமே உருவெடுத்தது; இவ்விமானத்தின் பத்து ஸ்தூபிகளே நான்கு வேதமும் ஆறு சாஸ்திரமும் என்றெல்லாம் சொல்வர். ஏழு பிராகாரங்களுக்கு மத்தியில் உள்ள ரங்கநாதப் பெருமான் சரீரத்தின் ஏழு தாதுக்களுக்குள் ஒளிரும் ஆன்மஸ்வரூபன் என்பர். ஸ்ரீமந் நாராயணனுக்குகந்த அஷ்டாக்ஷரத்தின் ஏழு அக்ஷரங்கள் பிராகாரங்களாகவும், மீதமுள்ள பிரணவம் விமானமாகவும் ஆயின என்றும் கூறுவர். இதேபோல் ஆடும் தெய்வத்தின் சந்நிதானத்தில் பஞ்சாட்சரங்களே ஐந்து படியாயின என்று சிவனடியார்கள் நவில்கிறார்கள். நடராஜன் எழுந்தருளும் சித்சபையை அடுத்த கனக சபையில் பதினெண் புராணங்களும் பதினெட்டுத் தூண்களானதாகவும், சித்சபையில் ஆகமங்களும் ஆறு சாஸ்திரங்களும் ஸ்தம்ப வரிசைகள் அமைக்க, சதுர்





ஸ்ரீரங்கம் ராய கோபுரத் தூண்கள்

வருமே தமிழிடம் தனியருள் சுரக்கும் தெய்வங்கள். பன்னிரு ஆழ்வார்களும் உள்ளியுணர்ந்தவன் அரங்கன். சைவ சமய குரவர் நால்வரும் உள்ளம் உருகிப் பாடிப் பரவியவன் சபாபதி. கம்பர் தமது இராமாயணத்தை இவ்விரு பதிகளிலுமே அரங்கேற்றியதாக அறிகிறோம். எளியோர்க் கிரங்கும் கருணை சபாபதிக்கும் ரங்கபதிக்கும் பொதுவான சிறப்பம்சம். பாணர் குலத்தைச் சேர்ந்த திருப்பாணாழ்வாரைத் தனது சந்நிதிக்குத் தருவித்து அருள்புரிந்தவன் அரங்கன். சேரி வாழ்ந்த செம்மல் நந்தனைத் தன் திருமுன் கொணர்ந்து அழியா ஆனந்தம் அளித்தவன் சபாநாயகன். ஆதிசங்கரருக்கும் இவ்விரு க்ஷேத்திரங்களில் தனித்ததோர் ஈடுபாடு இருந்ததால்தான் அவர் ஸ்ரீரங்கத்தில் தனாகர்ஷண யந்திரமும், சிதம்பரத்தில் அன்னாகர்ஷண யந்திரமும் ஸ்தாபித்ததாகச் சொல்லப்படுகிறது. மார்கழி மாதத்தில் சிறப்பாகத் திருவிழா நடைபெறுவதும் இவ்விரு தலங்களுக்கிடையே உள்ள மற்றோர் ஒற்றுமை. ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி உற்சவம் நடக்கும் அதே மார்கழியில் சிதம்பரத்திலே ஆர்த்ரா தரிசன உற்சவம் நடைபெறுகிறது.

இத்தனை ஒற்றுமைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு முக்கியமான வேற்றுமையும் தோன்றக் கூடும். ரங்கராஜனும் நடராஜனும் செய்கிற காரியங்கள் ஒன்றுக்கொன்று நேர்முரணாக அல்லவா உள்ளன! ஒருவன் படுத்து உறங்குகிறான். இன்னொருவனோ கூத்தாடுகிறான். அரங்கம் என்பது ஆடுவதற்கேற்ற இடம்; 'அரங்கேற்றம்' என்று இன்றும் சொல்கிறோமே! ஆடுவதற்கேற்ற அரங்கில் ஆட்ட



ஸ்ரீரங்கம் கோபுரங்களின் தோற்றம்

பொற்கூரையுடன் ஸ்ரீ பொன்னம்பலவனின் பொற்சபையாம் சிற்சபையின் தோற்றம்.



வேதங்களே நாலுபொன் தூண்களாக நடராஜ மூர்த்தியைச் சுற்றி அமைந்துள்ளன என்றும் அறிகிறோம். இடை, பிங்கலை என்ற நாடிகளுக்கு நடுவே உள்ள சுழுமுனை நாடியில் சுவாசத்தைச் செலுத்திப் பாம்பு வடிவாம் குண்டலினி சக்தியை எழுப்பும் யோகத்தை உணர்த்தவே, காவிரியின் இரு பிரிவுகளுக்கிடையே ஆதிசேஷப் பாம்பின்மீது பெருமாள் பள்ளி கொண்டிருக்கிறான் என்று சொல்வதுண்டு. மனித வாழ்வின் மொத்த சுவாசங்களின் எண்ணிக்கையே தில்லைப் பொன் விமானத்தின் ஓடுகளானதாகவும், பிராணேசனே அங்கு ஆடுவதாகவும் சிதம்பரத்தின் பெருமை அறிந்தோர் கூறுவர். இரண்டுமே வேத நிலைக்களனான க்ஷேத்திரங்கள். அரங்கன், அம்பலவன் இரு

மொழிந்து துயில்கிறான் அரங்கன். சிதம்பரமோ ஞானாகாசம் என்கிற வெறும் வெளி. அங்கு செயலே இருக்க முடியாது. சிதம்பரத்தானோ அங்கு கும்மாளத்துடன் நட்டம் பயில்கிறான். இது ஏன்? இதில் இன்னும் விநோதம் என்னவெனில் உலகத்தைப் பரிபாலிக்கும் பொறுப்பேற்றவன் பள்ளிகொண்டிருக்கிறான்; உயிர்களை ஒடுக்கிக்கொள்பவனே உற்சாகமாக ஆடுகிறான்.

இந்த விநோதத்தில் — வெளிப் பார்வைக்குத் தெரியும் பரஸ்பர விரோதத்தில் — தான் உண்மையான ஒற்றுமை இருக்கிறது. இக உலகு மறையும் போது ஆன்ம உலகு பிரகாசிக்கிறது. இகம் ஒடுங்குகையில் பரம் விளங்குகிறது. இகவுலகத்தில் ஈடுபட்டவனுக்கு எது இரவோ, அது ஆன்ம உலகில் வாழ்பவனுக்குப் பகல் என்பது கீதை. இக உலகப் பார்வையில் ஒருவனைத் தூங்குபவனாகக் கண்டால் அதுவே ஆன்ம சாம்ராஜ்யத்தில் அவனை விழிப்புள்ளவனாகக் காட்டும். ஒரு பார்வையில் எது தூக்கமோ, அதுவே இன்னொரு பார்வையில் ஆட்டம். இதைப் புரிந்து கொண்டால் ரங்கராஜனின் தூக்கமும் நடராஜனின் ஆட்டமும் ஒன்றேயான ஆத்மாநுபவத்தின் இரண்டு காட்சிகள்தான் என்பது புரியும். இகத்தைப் பரிபாலிப்பவன் தூங்கினால் இகமே தூங்கி, ஆன்மா விழிப்பும் எழுச்சியும் பெற்று விட்டது என்று பொருள். இகம் மறைந்த இடம் இக உலக உயிர்களை ஒடுக்குபவனின் சாம்ராஜ்யமே அல்லவா? அங்கு உயிர்களை ஒடுக்குபவன் ஆட வேண்டியதுதானே?



ஸ்ரீ நடராஜர் கோயிலின் ஆகாயத் தோற்றம். எதிர்ப்புறம் தெரிவது வடக்கு கோபுரம்

ஸ்ரீ ரங்கநாதன் எழுந்தருளிய கதை அற்புதமானது. பிரளயத்தின்போது பிரபஞ்சமெங்கணும் கனந்தகாரம் சூழ, அஞ்சி நடுங்கித் தவம் செய்த அயனுக்கு அபயமளிக்கப் பாற்கடலில் தோன்றியது ரங்க விமானம். அதனுள் திருமால் பள்ளி கொண்டிருந்தான். விமானத்தையும் விஷ்ணு மூர்த்தியையும் சத்திய லோகம் எடுத்துச் சென்று பூஜித்துவந்தான் பிரம்மன்.

சூரியகுலத் தோன்றலாகிய இக்ஷ்வாகு ரங்க விமானத்தையும் ரங்கனையும் பற்றிக் கேள்வியுற்று அதனை சத்திய லோகத்திலிருந்து அயோத்தி கொண்டு வர ஆர்வம் கொண்டான். ஒப்பற்ற தவம் புரிந்து எம்பிரானின் இதயத்தைக் கரைத்தான். பகவான் பணித்தபடி பிரம்மதேவன் ஸ்ரீரங்கநாதனையும் விமானத்தையும்

சிதம்பரம் தெற்கு, மேற்கு கோபுரங்களுடன் சிவகங்கைத் தீர்த்தம்



இக்ஷ்வாகுவுக்கு அளித்தான். இக்ஷ்வாகு வமி சத்தவர் வழி வழியாக ரங்கனை ஆராதித்து வந்தனர். நாராயணனின் அவதாரமாகிய ஸ்ரீ ராமனும் ரங்கநாதனுக்கு ஆராதனை செய்தார். இதனால்தான் அரங்கத்து அரவணையானுக்குப் 'பெரிய பெருமாள்' என்ற பெயரும் ஏற்பட்டது. தியாகிகளில் தலைசிறந்த ராமபிரான், தான் அன்போடு வழிபட்ட ரங்கநாத விக்கிரகத்தையும், விமானத்தையும் விபீஷணனுக்கு அன்பளிப்பாக வழங்கினான். இதே போதில் சோழ மன்னன் தர்ம வர்மாவும் ரங்கநாதனைப் பெறத் தவமிருந்து வந்தான். விபீஷணன் விஷ்ணு மூர்த்தியுடன் இலங்கை செல்கையில் விநாயகனின் விளையாட்டால் விக்கிரகமும் விமானமும் காவிரியின் இரு கரங்களிடையே செழித்ததொரு தீவிலே தங்கிவிட்டன. அத்தீவே ஸ்ரீரங்கமாயிற்று. சோழ மன்னனின் உளம் குளிர்ந்தது. விபீஷணனின் உள்ளமும் குளிர இலங்கை நோக்கி சயனித்தான் பெருமான்.



ஸ்ரீரங்கம் மூலஸ்தானத் தங்க விமானம்

குடதிசை முடியை வைத்து
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டி
தென்திசை இலங்கை நோக்கி

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியிருப்பது பிரசித்தம்.

ஊருக்குப் புதிதாக வந்த அரங்கன் ஊரையே நாளடைவில் உட்கொண்டுவிட்டான். 'மதிள் இலங்கைத் திசை நோக்கி மலர்க் கண் வைத்த' மாயனின் ஆலயத்தைச் சுற்றிலும் மதிள் மதிளாக எழுந்தன. இப்படி எழும்பிய ஏழு பிராகாரங்களுக்குள்தான் இன்று ஸ்ரீரங்கம் என்கிற ஊரே உள்ளது.

தர்மவர்மாவின் நாளிலிருந்து தமிழ் மன்னர்கள் கல் கொண்டும், தமிழக அடியார்கள் சொல் கொண்டும் அரங்கனுக்குத் திருப்பணி செய்து வந்திருக்கிறார்கள்.

தமிழ் மன்னர்கள் மட்டுமின்றி, விஜய நகர மன்னர்களும் அரிய முறையில் ஆலயத்தை விரித்தும், புதுக்கியும் இருக்கிறார்கள். அவர்கள் செய்த பணியைவிடச் செய்து முடிக்காத ஒரு பணியை விசேஷமாகச் சொல்ல வேண்டும். ஸ்ரீரங்கத்தின் தலைவாயிலாக ஒரு மகத்தான, ஆனால் முற்றுப் பெறாத கோபுரத்தை இன்று காண்கிறோம். இந்தக் கோபுரம் முற்றுப் பெற்றிருந்தால் முந்நூறடிக்கு மேல் உயர்ந்து நின்று உலக அதிசயங்களில் ஒன்றாகவே ஆகியிருக்குமாம்.

ஆழ்வாராதிகள், நாதமுனிகள், ஆளவந்தார், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகிய ஆசாரிய புருஷர்களும், பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், தியாகையர், முத்துஸ்வாமி தீக்ஷிதர் உட்பட்ட பிற்கால பக்த கவிகளும் அரங்கன் மீது அன்பில் ஊறிய அநுபவ வாக்குகளை அள்ளிப் பொழிகிறார்கள்.

கொண்டல் வண்ணனைக்
கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன்
என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன்
அணியரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்
மற்றொன்றினைக் காணாவே

என்று தமது உணர்ச்சிப் பெருக்குக்கு உரை தந்தார் திருப்பாணாழ்வார். அரங்கனைப் பாடும் சுவையை விட்டு இந்திரலோகமாளும் பெருமையையும் வேண்டேன் என்றார் தொண்டரடிப் பொடி.

ஆண்டாளுக்கு அரங்கனிடம் உள்ள ஆழ்ந்த பிரேமையோ அற்புதமானது. அழகிய மணவாளன் என்று பெயர் கொண்ட பெருமானை மெய்யாகவே மணந்து அவனில் அப்படியே கரைந்தவள் அல்லவா அவள்? 'என்னரங்கத்து இன்அமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழு கமலப் பூவழகர்' என்று மணாளனின் அழகைச் சுவைத்தவள் அவள்.

ஸ்ரீரங்கத்திலேயே தமது இறுதி நாட்களைக் கழித்த உடையவராகிய ராமானுஜர், இக்கோயிலின் அதியற்புதமான விழாக்களையும், பூஜாக்கிரமங்களையும் தாமே அமைத்துத் தந்தார் என்பர்.

தேவர்களுக்கு வைகறைப் பொழுதாகிய மார்கழி மாதத்தில், முக்தி நெறியில் மக்களை எழுப்பி, உத்தராயண மார்க்கத்தில் அவர்களை அழைத்துச் செல்வதை உணர்த்தவே வைகுண்ட ஏகாதசியன்று உத்தரவாசல் வழியாகப் பெருமான் எழுந்தருளுகிறார். பெருமான் எழுந்தருளும் ஆயிரக்கால் மண்டபம் பரமபதத்தையே குறிக்கும் என்பர். முக்தி அநுபவம் உண்டாகும் ஆயிர இதழ்க் கமலமாகிய சகஸ்ராரத்தையே ஆயிரக்கால் மண்டபம் குறிக்கிறது எனலாம்.

வைகுண்ட ஏகாதசி உற்சவத்தில் ஆரியத்தையும் செந்தமிழையும் ஒருங்கே ஆதரிக்கிறார் பெருமான். வேத விண்ணப்பம் என்பது இவ்விழாவின் ஓர் அம்சம். அதே போல் இராப் பத்து என்ற பெயரில் திருவாய்மொழித் திருநாளும், பகல் பத்து

என்ற பெயரில் திருமொழித் திருநாளும் இவ்வுற்சவத்தில் நடைபெறுகின்றன.

வைகுண்ட ஏகாதசியில் வைகுண்டநாதனை ஸ்மரிப்பது புண்ணியம். சலிக்காமல் அலையெறியும் காவிரியின் நடுவே சலனமின்றிப் பள்ளி கொண்ட பரமன், அலைபாயும் எண்ணச் சூழலுக்கும் புறப் பொருள்களுக்குமிடையே அசையாது நிற்கும் ஆன்மாவுக்கே ஒரு மூர்த்தி. உலகம் யாவும் ஒரு கனவு எனில், இந்தக் கனவைக் காணும் ஒருவன் இருக்க வேண்டும். அவன் உறங்கவும் வேண்டும். கனவின் சிறு சுடர்களாகிய நாம், கனவு காணும் பெருங் கனவில் நம்மை முழுக்கிக் கொள்வோம்.

**வை**குண்டத்திலிருந்து கைலாசத்துக்குப் போகலாம். பூலோக கைலாசமாகிய சிதம்பரத்தில் ஸ்ரீமந் ஆனந்த நடராஜ மூர்த்தி எழுந்தருளிய வரலாற்றைப் பார்க்கலாம்.

தாருகா வனத்து முனிவர்களுக்கு ஆணவம் அதிகரித்தது. அதைக் குலைப்பதற்காகச் சிவபெருமான் பிட்சாடனனாக வந்து ரிஷி பத்தினிகளின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டான். அவனை எரிப்பதற்காக முனிவர்கள் தீயை அனுப்பினர். தீக்கு வெம்மை தந்த தேவாதி தேவன் அதனைக் கையில் ஏந்திக் கொண்டான். முனிவர்கள் புலியை ஏவினார்கள். அகம்பாவத்தைக் கிழிக்கும் இறைவன் புலியைக் கிழித்து ஆடையாக அணிந்தான். முனிவர்கள் கொடிய நாகத்தை ஏவினார்கள். குண்டலினியை அடக்கி ஆளும் பிரபு அந்தப் பாம்பை ஆபரணமாய் அணிந்தான். அதன் பின் அபஸ்மார புருஷனை அனுப்பினர் முனிவர். (அபஸ்மாரம் என்றால் 'கெட்ட எண்ணங்கள்' என்றும், 'வலிப்பு நோய்' என்றும் பொருள்படும்.) எண்ணமற்ற நிலையை அருளுபவனும், பவ நோயைத் தீர்ப்பவனுமான பரமன் அபஸ்மாரத்தைத் தனது பாதத்தால் அழுத்தினான். கெட்ட எண்ணம் அழிந்தவுடன் முனிவர்களுக்கு நல்லறிவு பிறந்தது. ஆனந்த நிருத்தமிட்டான் இறைவன். அந்த ஆட்டத்தைத் தாங்க விகவத்தின் இதய ஸ்தானமாகிய சிதம்பர க்ஷேத்திரத்தினால்தான் முடியும் என்பதால் சிதம்பரத்துக்கு எழுந்தருளினான்.

பெருமான் தில்லைச் சிதம்பரத்துக்கு வருவதற்கு வேறு காரணங்களும் இருந்தன. தில்லை வனத்தில் காளி உக்கிரமாக லீலை புரிந்து கொண்டிருந்தாள். அவளை அடக்க வேண்டித் தில்லைக்குச் சென்ற பெருமான் அவளை நடனப் போட்டிக்கு அழைத்தான். ஊர்த்துவ தாண்டவமாகப் பெருமான் பாதத்தை உயரத் தூக்க, காளி தோற்றாள். தில்லையின் எல்லைக்குச் சென்று விட்டாள். தில்லையில் நாயகனாக எம்பெருமான் இடம் கொண்டான்.

நடராஜ தரிசனம் பெற வேண்டும் என்றே தில்லையில் தவமிருந்த பதஞ்சலி, வியாக்ரபாதர்களின் மனோரதமும் அதனால் நிறைவேறியது. தை மாதத்தில் குரு பூசத்திலே திருச்சிற்றம் பலத்தில் ஆடினான் எம்பெருமான். அது சாதாரண ஆட்டம் அல்ல. படைத்தல், காத்தல், அழித்தல், படைப்பு-காப்பு - அழிப்புகளுக்கு அப்பாற்பட்ட ஆன்மாவை இம்மூன்றுக்கும் உள்ளாவதுபோலக் காட்டும் மாயையாகிய மறைப்பு. இறுதியில் இம்மறைப்பை அழித்துச் சீவனைச் சிவனாக்கும் அநுக்கிரகம் என்ற ஐந்தொழிலைக் குறிப்பிடும் ஆட்டம் அது. நடராஜனின் கையிலுள்ள டமருகம் படைப்பைக் குறிப்பது. அதனின்று எழுந்த ஒலிதான் பிரபஞ்சத்தை உண்டாக்குகிறது. அபய ஹஸ்தம் காத்தலைக் காட்டுகிறது. அக்கினி அழித்தலைக் குறிப்பது. அபஸ்மாரத்தின் மீது வலப் பாதம் பதிந்து மறைப்பினைக் காட்டுகிறார் பெருமான். குஞ்சிதபாதமாகத் தூக்கிய வளைந்த இடது திருப்பாதம்தான் அநுக்கிரகம். இடது பாதம் அம்பாளைச் சேர்ந்தது. அதைத் தூக்கிக் காட்டி 'இதைப் பிடித்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லாமல் சொல்கிறார் சுவாமி. அதைப் பிடித்துக் கொண்டு விட்டால் அதுதான் முக்தி.

தத்துவ ரீதியில் இப்படி ஐந்தொழில் புரியும் ஆனந்தத் தாண்டவக் கோலத்தைக் கவித்துவ ரீதியில் வேறு விதமாகவும் பெரியோர்கள் ரசித்திருக்கின்றனர். உயிர்களைத் தம் பால் டமருக ஒலியால் திருப்பி, அபய ஹஸ்தம் சாதிக்கும் பெருமான், அஞ்சேல் என்ற தமது வாக்கை அக்கினி சாட்சியாக நிரூபிக்கவே தீக்கொழுந்தைத் தாங்கியிருக்கிறார் என்று ஒரு கவி நயம்பட நவில்கிறார்.

ஆகா! சந்நிதி என்றால் நடராஜன் சந்நிதி தான் சந்நிதி. ''எந்நேரமும் உன் சந்நிதியில் நான் இருக்க வேண்டும் ஐயா'' என்று பாடியது வெறும் வாய் வார்த்தையல்ல. நடராஜனை ஆடுபவனாகச் சொல்கிறார்கள். ஆனால் தில்லையில் தரிசிக்கும்போதோ அவன் ஆட்டுவிப்பவனாகவும் தெரிவான். ஆட்டம், ஆடுபவர், ஆட்டுவிப்பவர் என்ற நிலைகளைக் கடந்த மோனப் பெருவெளியினன் என்கிற சாந்தமும் தானே நெஞ்சில் குடிபுகும். அதனால்தான் திவ்விய உருவினனாகிய நடராஜனது க்ஷேத்திரத்தை உருவம் கடந்த ஆகாச க்ஷேத்திரமாக வைத்திருக்கிறார்கள்.

நடராஜனை நாயன்மார்களும், இராமலிங்க அடிகளும், கோபாலகிருஷ்ண பாரதியும் எப்படி யெல்லாம் அநுபவித்திருக்கிறார்கள்! 'சிற்றம்பலம் மேய செல்வன் கழலேத்தும் செல்வஞ் செல்வமே' என்றார் ஆளுடைய பிள்ளை. நடராஜனின் அபயஹஸ்தப் போக்கும், முகக் குறிப்பும், 'என்று வந்தாய்?' என்று பரிவுற விசாரிக்கும் பாங்கில் இருப்பதாக அநுபவித்தார் அப்பரடிகள். மலர் முழுதும் விரவியுள்ள மணம் போல் திருவாசகத்தில் எங்கு தொட்டாலும் தில்லையம்பலவனின் பெருமை துலங்கும். 'ஞானக் கரும்பின் தெளிவை, பாகை, நாடற்கரிய நலத்தை, நந்தாத் தேனை, பழச் சுவையாயினானை, சித்தம்புகுந்து தித்திக்க வல்ல கோனை, பிறப்பறுத்தாண்டு கொண்ட கூத்தனை, நாத்தழும்பேற வாழ்த்த' நம்மையெல்லாம் அழைக்கிறார் மணிவாசகர். நடராஜனுடன் வியாபாரம் செய்து, பேரம் நடத்தி, வெற்றி கண்டவரல்லவா அவர்? பெருமானிடம் தம்மைக் கொடுத்துவிட்ட மாணிக்கவாசகர் பிரதியாகப் பெருமானையே தாம் பெற்று விட்டார். 'நம் இருவரில் யார் சாமர்த்தியசாலி?' என்று இறைவனையே கேட்கிறார் ஞானக் கவிஞர்:

**தந்த துன்றன்னே: கொண்டதென் றன்னே:**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்?**
**அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்—**
**யாது நீ பெற்றதொன் றென்பால்?**

நடராஜ மூர்த்தியைப் போலவே சிதம்பரத்தில் விசேஷமானவை சந்திரமௌளீசுவர ஸ்படிக லிங்கமும், சிதம்பர ரகசியமும். நடராஜனுக்கு ஓர் ஆண்டையே ஒரு நாளாகக் கருதி, வருடத்துக்கு ஆறு முறைதான் அபிஷேகம் செய்வது வழக்கம். ஸ்படிக லிங்கத்துக்குத்தான் அன்றாட அபிஷேகங்களெல்லாம். இந்த லிங்கம் அநாதியாகப் பூஜிக்கப்பட்டு வருவதாக க்ஷேத்திர மான்மியங்கள் கூறும். ஆதி சங்கரர் கைலாசத்திலிருந்து பெற்று வந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களில் ஒன்றே இது என்பது சங்கர விஜயம். உருவம் நடராஜர்; உருவம் இருந்த போதிலும் அவயவங்கள் அற்ற ஸ்படிக லிங்கம் அருவுருவம். அருவம் தான் சிதம்பர ரஹஸ்யம். 'ரஹஸ்ய தரிசனம்' என்று திரையை விலக்கியவுடன் வில்வ தள மாலைகளைக் காண்போம். அந்த மாலைகளுக்கிடையே உள்ள வெளிதான் ரஹஸ்யம். ஆகாய க்ஷேத்திரமல்லவா? ஆகாயமாகிய அகண்ட வெளியை இப்படிக் குறிப்பால் உணர்த்துகிறார்கள். ஆகாயம் எங்கும் இருப்பது. ஒளிவு மறைவே இல்லாதது. அதை இங்கு ரகசியம் என்கிறார்கள். எதையேனும் ரைரங்கமாகச் செய்வதாயிருந்தால் 'அம்பலப்படுத்துவது' என்று சொல்வது வழக்கம். இந்த அம்பலத்திலோ ஆகாயமே இரகசியமாகி விடுகிறது. இதற்கு என்ன பொருள்? நாம் மிகவும் அறிந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கும் பொருள்களில்தான் நாம் அறியாத சூட்சமங்கள் உள்ளன.

நடராஜனுக்குத் திரு ஆதிரை அபிஷேகம் விசேஷம். ஏற்கனவே குளிர்ந்த கங்கையும், சில்லெனும் பாம்பும் அணிந்து, பனிமலை புதல்வியாகக் குளிர்ந்த உள்ளம் படைத்த தேவியை இடம் கொண்ட பெருமானுக்கு மார்கழிக் குளிரில் விடிய விடிய சீதள சந்தனாபிஷேகம் செய்வதைப் பார்த்த அப்பய தீக்ஷிதரவர்கள் "இத்தனை குளிரைத் தாங்கிக் கொள்ள உனக்கு எப்படிச் சக்தி வந்தது? என் இதயத்தில் நீ வசித்து அதன் வெக்காட்டையெல்லாம் ஏற்பதனால்தான்" என்றுபாடினர்.

நம் ஒவ்வொருவர் உள்ளும் இதய வெளியில் இருக்கும் ஆகாயம் சிற்றம்பலம். தஹராகாசம் என்று இதை உபநிஷதம் கூறும். பிரபஞ்சத்தின் வெளிதான் பேரம்பலமாகிய ஆயிரக்கால் மண்டபம். சித்சபையிலிருந்து ஆயிரக்கால் மண்டபத்துக்கு எழுந்தருளி ஆதிரையன்று ஆனந்த நடேசன் தரிசனம் தருகிறான். பெரியபுராணம் பிறந்த தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் திருஆதிரையில் தரிசனம் காண முடியாவிடினும் மனத்திலேனும் ஸ்மரித்து, ஆனந்தக் களிப்பின் உருவான பிரானுக்குக் களி நிவேதித்து, உண்டு, களி கொள்வோம்.

நடராஜனை ஆராதிக்கும் உரிமை பெற்ற தீக்ஷிதர்களைப் பற்றியும் இங்கு சொல்ல வேண்டும். 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று இவர்களைத்தான் சிவநேசச் செல்வர்களில் முதலாவதாகத் தம்பிரான் தோழர் கூறினர்.

அரங்கத்துக்கும் அம்பலத்துக்கும் இன்னோர் ஒற்றுமையும் இப்போது ஏற்பட்டிருக்கிறது. இரு ஆலயங்களிலும் மகத்தான திருப்பணி நடைபெறுகிறது.

தில்லை ஆலயத்தின் சுற்று மதில்கள் தற்போது மிகவும் சிலமாகியுள்ளன. இவற்றைப் புதிப்பிப்பதற்காகத் திருமதில் திருப்பணிக் கமிட்டியார் தன் முயற்சி மேற்கொண்டுள்ளனர்.

ஸ்ரீரங்கத்திலோ 'யுனெஸ்கோ' என்ற ஐக்கிய நாட்டுக் கலாசாரக் கழகத்தின் ஆதரவில் 65 லட்ச ரூபாயில் மாபெரும் திருப்பணித் திட்டம் உருவாகி யுள்ளது. ஸர் ஏ. ராமசுவாமி முதலியார் தலைமையில் திருப்பணிக் கமிட்டி செயலாற்றுகிறது. ஐசுவரியம் என்ற பெயரையே தோற்றுவிக்கும் ஈசுவரனுக்கும் திருமகள் நாயகனுக்கும் காணிக்கை அளித்தால் பிரதியாகப் பன்மடங்கு பொருளும் அருளும் கிடைக்கும்.

(புகைப்படங்கள்: எம். கே. ரங்கஸ்வாமி அய்யங்கார்; மகாசிதானந்த தீக்ஷிதர்)

## நீச்சல் பாப்பா!

பச்சைக் குழந்தைகளுக்கு, நடக்கக் கற்றுக் கொள்வதற்கு முன்னால் நீச்சல் பழகக் கற்றுக் கொடுத்தால் எளிதில் நீச்சல் அடிக்கின்றன. ஜெர்மனியின் நீச்சல் நிபுணர் பார்மீஸ்டர் குழந்தைகளுக்கு நீச்சல் கற்றுக் கொடுக்க, தனி நீச்சல் குளம் கட்டியிருக்கிறார். தண்ணீரில் விளையாடுவது என்றால் குழந்தைகளுக்குக் குஷிதானே. எனவே இப்போது பல குழந்தைகள் இவரிடம் நீச்சல் கற்றுக் கொள்கின்றன. 8 மாதக் குழந்தைகள், ஒரு வார காலத்திற்குள் நீந்துகின்றன. குளத்தில் நீந்துவதின் மூலம் குழந்தைகளின் தசைகள் வலுப்படுகின்றன என்றும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

நீச்சல் நிபுணர் பார்மீஸ்டரையும் அவரிடம் நீந்தப் பழகும் பச்சிளம் பாலகர்களையும் இந்த இதழ் பொருளடக்கப் பகுதியில் சந்திக்கிறீர்கள்.

ஃ ஃ ஃ ஃ

கல்கி நேயர்களிடமிருந்து பொருளடக்கப் பகுதியில் பிரசுரிக்கச் சிறந்த புகைப்படங்களை வரவேற்கிறோம். போஸ்ட் கார்டு அளவினதாக இருக்க வேண்டும். பிரசுரிக்கப்படும் படங்களுக்குத் தகுதிக்கு ஏற்ப 15 முதல் 25 ரூபாய் வரை சன்மானம் உண்டு. படத்துக்கு ஏற்றவாறு அழகான வாசகமும் எழுதியனுப்பலாம். பிரசுரத்துக்கு ஏற்கப்படாத படங்களைத் திரும்பப் பெறப் போதுமான தபால் தலைகள் இணைத்து அனுப்ப வேண்டும். கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை.

எல்லோராலும் விரும்பப்படும்







அலுமினியம் பைகளில்
100 கிராம் எடையில்
எங்கும் கிடைக்கும்

தயாரிப்பாளர்கள் :

எம். கெ. கிருஷ்ண செட்டி,
தபால் பெட்டி எண். 1506,
கோயமுத்தூர்-18

CHARI.

# விளையாட்டில் வீராங்கனைகள்







**வீ**ட்டிலே தட்டு எறிந்தால் குடும்பச் சண்டை; விளையாட்டுப் பந்தயத்திலே தட்டு வீசி எறிந்தால் வீராங்கனை !

''ஸ்ரீமதி குஞ்சம்மா ஷோபன் தட்டு வீச்சு, குண்டு வீச்சு, கழிவீச்சு ஆகியவற்றில் வீராங்கனை. சென்னை நேரு ஸ்டேடியத்தில் நடைபெற விருக்கும் இருபத்திமூன்றாவது இந்திய தேசிய விளையாட்டுப் போட்டிகளில் பெண்கள் பந்தயங்களுக்குத் தமிழகத்தின் தலைவியாகச் செயல்படுகிறார் !'' என்று எழும்பூர் ரயில்வே தகவல் நிலையம் போட் மெயில் வேகத்தில் தன் தகவல் குமாஸ்தா குஞ்சம்மா ஷோபனைப் பற்றிக் கட்டியம் கூறியது.

''எக்மோர் என்குயரி கிளார்க், வெறும் குமாஸ்தா மட்டுமில்லை. தேசிய விளையாட்டு வீராங்கனையாக்கும். இரண்டு குழந்தைகளுக்குத் தாயான அவளுக்கு உத்தியோகமும் பார்த்துக் கொண்டு விளையாட்டுப் போட்டிகளிலும் ஈடுபட எப்படித்தான் பொழுது இருக்கோ ?'' — சக தகவல் குமாஸ்தா தோழியின் வியப்புக்குரிய கேள்விக்கணை !

''சென்னை ஒய். எம். ஸி. ஏ. கல்லூரியில் மூன்று மாதங்கள் பயிலும்போதே என் விளையாட்டுத் திறமைக்காக 'ரயில்வேயில் எனக்கு உத்தியோகம் தேடி வந்து விட்டது! 1960ம் ஆண்டில் தேசிய விளையாட்டுப் போட்டியில் குண்டு வீச்சில் (Shot Put) கிடைத்த பரிசோடு இந்த வேலைப் பரிசும் என்னை வந்தடைந்தது!'' என்று பெருமைப் பூரிப்போடு கூறினார் குஞ்சம்மா ஷோபன்.

*　　　*　　　*

**கு**ஞ்சம்மா கேரளத்தில் குழன்சேரி செயின்ட் மேரி உயர்நிலைப் பள்ளியிலும் செயின்ட் தாமஸ் கல்லூரியிலும் பயின்று பி. ஏ. பட்டதாரியானார். கல்லூரியில் பெற்ற விளையாட்டு அநுபவமே வேலை தேடித் தந்து விட்டது! அகில இந்திய ரயில்வே 1967ம் ஆண்டில் நடத்திய போட்டியில் குண்டு வீச்சிலும், தட்டு வீச்சிலும் முதன்மைப் பரிசு பெற்றிருக்கிறார்; ஹரியானாவில் நடைபெற்ற போட்டியில் தட்டுவீச்சில் இவருக்குப் புகழ் கிட்டியது.

வீராங்கனை பற்றி ஓர் ஆங்கில ஹாஸ்யம் உண்டு. எதிரும் புதிருமாக வந்த இரண்டு கார்கள் மோதிக்கொண்டன. இரு கார்களிலிருந்தும் இறங்கியவர்கள் இளைஞனும் யுவதியும். யுவதி தன் கார் நசுங்கியதைக் கண்டு அந்த இளைஞனின் கன்னத்தில் பளீரென்று அறைந்து, ''பாருங்கள்! விரைவில் நீங்கள் செய்த இந்தத் தவற்றுக்குச் சரியான தண்டனை கொடுக்கிறேன் !'' என்று கூவி விட்டுப் போனாளாம். அடுத்த மாதம் அந்த வீராங்கனை அந்த இளைஞனைக் கல்யாணம் செய்து கொண்டு உரிய தண்டனை கொடுத்து விட்டாளாம்! ஆனால் வீராங்கனை குஞ்சம்மாவுக்கோ அமைதியான முறையில் திருமணம் நடைபெற்றது. கணவர் ஷோபன் விமானப் படையில் பணியாற்றுகிறார். கிரிக்கெட் ஆட்டத்தில் அவருக்குப் பிரியம். விளையாட்டுத் துறையில் மனைவியின் திறமை ஆஸ்திரேலியாவில் அண்மையில் நடைபெற்ற முதல் டெஸ்ட் மாதிரி ஆகி விடக்கூடாதென்றும் மாறாக அவள் புகழ் வானளாவ உயர வேண்டும் என்றும் பொருத்தமாக ஆசைப்படுகிறார்.

தம் திறமை சோபிக்கக் காரணமானவர்களில் ரயில்வே 'கோச்' திரு கிருஷ்ணசாமியும் ஒருவர் என்று நன்றியுடன் நவில்கிறார் ஸ்ரீமதி ஷோபன். ''எனக்குப் பரிசுகள் வந்து குவிவதில் ஆசையில்லை. இன்னும் பல இளம் பெண்கள் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு முன்னுக்கு வரவேண்டும். அவர்கள் திறமையைக் கண்ட ஆனந்தத்தில் நான் ஓய்வெடுக்க வேண்டும்!'' என்கிறார்.

அவரது வாழ்க்கையிலேயே மிகுதியான மகிழ்ச்சியைக் கொடுத்த சம்பவம் அவரது புதல்வி தாம்பரம் கிரைஸ்ட்கிங் பள்ளியில் ஓட்டப் பந்தயத்தில் முதல் பரிசு பெற்றுவந்து அன்னையின் முன் பெருமிதத்துடன் நின்றது தான் !

— குண்டுமணி



வெள்ளித்திரை வைபவம்

# பூஜை வேளையில் தாஜா தேவை!

காந்தன்

ஒரு பெரிய கார் ஸ்டுடியோ புல் சதுக்கத்தை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு வந்து நின்றது. கப்பல் போன்ற அந்தக் காரின் கதவைத் திறந்துவிட்டு மரியாதையாக முன்னால் வளைந்து கொண்டு நின்றான் வெங்கு. அவன்தான் 'வெள்ளித் திரை வெங்கு'. திரைப்பட உலகில் அவனைத் தெரியாதவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். முதலாளிக்கு வெற்றிலைப் பெட்டியாகவும், டைரக்டருக்கு சிகரெட் கேஸாகவும், ஹீரோயினுக்குக் கூப்பிட்ட குரலுக்குக் கேட்கும் எடுபிடியாளாகவும், ஹீரோவுக்கு அந்தரங்கக் காரியதரிசியாகவும், ஸ்டுடியோவுக்குச் சம்பளம் இல்லாத ஆலோசகனாகவும் இருந்து கொண்டு அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாக விளங்கும் வெள்ளித் திரை வெங்கு படப்பிடிப்பு ஏற்பாடுகளில் தன்னை இன்றியமையாதவனாகச் செய்து கொண்டு விட்டவன்.

குமாரி நிருபமாதேவி காரிலிருந்து மின்னலெனத் துள்ளிக் குதித்தாள். அவளது அழகிய உடலை இறுகத் தழுவிப் பிடித்து அவள் அழகைப் பளிச்சென்று எடுத்துக் காட்டிய 'சிக்' உடை அங்கிருந்தவர்கள் அனைவரையும் கவர்ந்தது. அவளுக்குப் பின்னாலேயே அவள் தாயார் கையில் வெள்ளி கூஜா, பிளாஸ்குடன் இறங்கினாள்; எல்லாரையும் பார்த்து விட்டு நாணம் கொண்டவள்போல் புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். நிருபமா தேவியைப் பார்த்து மற்ற அனைவரையும் காட்டிலும் மிக அதிகமாக ஆச்சரியப்பட்டு வியந்து நின்றவர் படாதிபதிதான். காரணம், குறித்த நேரத்துக்கு இரண்டு மணி நேரம் தாமதமாக வழக்கமாக வந்து சேரும் நிருபமாதேவி இன்று முக்கால் மணி நேரம் மட்டுமே தாமதித்து வந்திருந்ததுதான்!

காரை விட்டு இறங்கிய குமாரி நிருபமா தேவி, 'ஹ ஹ்ஹ ஹஹ்ஹா' என்ற ஒரு செயற்கைச் சிரிப்பை லாகவமாகச் சிரித்து விட்டுப் பூங்கொடிபோல் ஒல்கி, ஒசிந்து, ஒயிலாக நின்று படாதிபதிக்கும், டைரக்டருக்கும் நாசூக்காகக் கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தாள். அது ஒரு சினிமாக் காட்சி போல் இருக்கவே டைரக்டர் 'ஷூட்' என்று காமிராமேனுக்கு உத்தரவு போடப் போனவர் கடைசி விநாடியில் விழித்துக் கொண்டு நாவைக் கடித்துக் கொண்டார். பிறகு, தம்மைச் சமாளித்துக் கொண்டு, "வெங்கு, நீ போய் 'எக்ஸ்ட்ரா'க்களையெல்லாம் அழைத்துக் கொண்டு வந்து செட்டில் நிறுத்து. சாஸ்திரிகளிடம் பூஜையை ஆரம்பிக்கச் சொல்லு. 'லைட்'டெல்லாம் தயாராயிருக்கா பாரு. நாதசுரக்காரனை ஊதச் சொல்லு. அப்படியே காமிராமேனுக்கும் ஒரு குரல் கொடு...." என்று ஒரே மூச்சில் சொல்லித் தீர்த்தார் டைரக்டர். பரபரவென்று விரைய வந்தான் வெங்கு. மறு நிமிஷம் நாதசுரம் ஒலிக்க ஆரம்பித்தது. தவில் ஓசையில் செட் அதிர்ந்தது. ஸ்டுடியோ முழுவதும் ஒரே சுறுசுறுப்பாயிருந்தது. கதாசிரியர், டைரக்டர், காமிராமேன், படாதிபதி யாவரும் செட்டில் குழுமியிருந்தனர்.

வெங்கு படாதிபதியிடம், "படத்தின் ஆரம்பம் பூஜை; முடிவு திருமணம். பூஜை முடிந்ததும் கல்யாணக் காட்சியை இன்று படம் பிடிக்கப் போகிறீர்களாமே! பேஷ், படம் முடிந்தாற்போலத்தான்!" என்றான்.

"ஏண்டா, கிண்டல் பண்ணறே? இதிலே விஷயம் என்னன்னு, பூஜை போட சாஸ்திரிகள் வந்திருக்கிறார். அவரை மேக்கப் போட்டுக்கச் சொன்னேன். கையோடே கல்யாணக் காட்சிக்கு அவரை மந்திரம் சொல்லச் சொல்லிப் படம் பிடிச்சுடலாமில்லியா? இன்னொரு நாளைக்கு அவரை வரச் சொல்லி இன்னொரு தடவை பணம் கொடுத்து அழ வேண்டாம் பார்!"

''சிக்கன நடவடிக்கையா? பேஷ்!'' என்றான் வெங்கு. 'அது அந்த அப்பாவிப் பிராமணன் தலையில்தானா விடிய வேண்டும்?' என்று எண்ணியவன், ''இன்னும் என்ன என்ன விஷயங்களில் சிக்கனம் ?'' என்றான்.

''அது பற்றி இன்னும் முடிவெடுக்க வில்லே!'' என்றார் படாதிபதி அகவாரசியமாக.

சிற்று நேரத்துக்கெல்லாம் படாதிபதி முகத்தில் கலவரக் குறியுடன், ''டைரக்டர் ஸார், இன்னொரு புதுப் படத்துக்குப் பூஜை போடறாங்களாம். நம்ம ஹீரோதான் அதிலே யும் ஹீரோவாம். அதனாலே அவர் அப்பவே புறப்பட்டுப் போய் விட்டாராம். மணமகன் இல்லாமல் எப்படித் திருமணக் காட்சியை எடுக்க முடியும்?'' என்றார்.

டைரக்டர் கூறினார் : ''டூ டோண்ட் வொர்ரி. நிருபமாவை வைத்து ஒரு நடனக் காட்சியைப் படமாக்கி விட்டால் போகி றது. 'ஸீக்வென்ஸ்' சொல்லிடறேன். அதாவது அவள் காதலன் லண்டனிலிருந்து வரப் போவதாகக் 'கேபிள்' வந்திருக்கிறது. அதைப் பார்த்த மகிழ்ச்சியில் அவள் காதலனை நினைத்துக் கொண்டு ஆடுகிறாள்!''

''ஓகே !''

''ஷேக் டான்ஸ்தானே; அதுதான் பொருத்தமாக இருக்கும். ஆனா கதை ரொம்பச் சோகமானது என்று யாரோ சொன்னார்களே!'' என்றான் வெங்கு.

''அதனாலே படத்திலே சந்தோஷப்படற துக்கே 'சான்ஸ்' இருக்கப்படாதா என்ன? துன்பங்களும், துயரங்களும் ஊளவோடு இருக்கணும், வெங்கு. ஒரே 'பேத்தாஸ்' ஆக இருந்தால் படம் எடுபட வேண்டுமே?'' என்றார் டைரக்டர்.

''வாஸ்தவம்தான், நாமதான் அன் னைக்கே படத்துக்குத் தேவையான 'ஸப் ஜெக்ட்டை'ச் 'சூஸ்' பண்ணி விட்டோமே! இனிமே திரைக்கதையை ஒருமாதிரி தயார் பண்ணிக் கொண்டு சமயோசிதமாக 'டய லாக்' போட்டுக்க வேண்டியதுதானே!'' என்றான் வெங்கு.

''ஆமாம். டைரக்டர் ஸார் ! திரைக் கதை யிலே அழுகையும், கண்ணீரும் அதிகமாகிவிடா மப் பாத்துக்கணும்'' என்றார் புரொட்யூசர்.

''நீங்க கொஞ்சம்கூடக் கவலைப்பட வேண்டாம். கதாநாயகியின் கவலே, கண்ணீர், விம்மல், வேதனை எல்லாம் படத் தின் இடைவேளை வரையில்தான். இடை வேளைக்குப் பிறகு ஒரே கும்மாளமும், குஷியும்தான். கதாநாயகி, ஜீன்ஸ் உடை, மினிஸாரி, மிடி உடை, 'டைட்ஸ்' முதலிய பல கவர்ச்சி உடைகளிலே தோன்றிப் பலவித நடனங்கள் ஆடுகிறாள். அந்தக் காட்சிகளையெல்லாம் 'ஒண்டர்புல்'லாகப் படமாக்கத் தீர்மானித்திருக்கிறேன்.....'' என்று டைரக்டர் கூறிக் கொண்டிருக்கும் போதே நிருபமாதேவி அவர் அருகில் வந்து குழைவாக நின்று, ''டைரக்டர் ஸார்! இன் னைக்கு ஷூட்டிங் இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லே; பூஜை மட்டும்தான் என்று நினைத்தேன்!'' என்றாள்.

அப்போது அவளுடைய பார்வை யதேச் சையாகப் பூஜைக்குத் தயாராக வைக்கப்பட் டிருந்த சுவாமி படங்கள் மீது விழுந்தது.

அடுத்த விநாடி அவளுடைய குழைவும், நெளிவும் எங்கோ ஓடி மறைந்து கொள்ளக் கோபத்துடன் தரையை உதைத்தாள். ''இன்ஸல்ட்! புரொட்யூசர் ஸார்! என்னே இப்படி அவமானப்படுத்துவீங்கன்னு நான் நினைக்கவேயில்லே. நான் நல்லா வாழணும் என்கிறதுக்காகத்தானே நேற்று என் அம்மா திருப்பதி போய் பாலாஜியைக் கும்பிட்டுக் கிட்டு ராத்திரி வந்து சேர்ந்தாங்க. அப்படி இருக்கறச்சே, நீங்க ஏழுமலையான் படத்தைப் பூஜைக்கு வைக்கவில்லே பார்த்தீங்களா?''

இதற்குள் நிருபமாவின் தாய், ''நல் லாத் தெரிஞ்சிருந்தும் வேணுமின்னேதான் இப்படி நம்மைச் சோதிக்கிறாங்க! ஷூட்டிங் கெல்லாம் பிறகு பார்த்துக்கலாம்'' என்று கூறி வெளியே நடந்தாள் வேகமாக. அதே வேகத்துடன் மகளும் வெளியேறி விடவே டைரக்டர் வேறு ஒன்றும் செய்யத் தோன்று மல் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தார்.

புரொட்யூசர் சர்மா, ''வெங்கு!'' என்று அழைத்தார்.

''இதோ ரெடி!'' என்றபடி வெற்றிலேப் பெட்டியை எடுத்து நீட்டினான் அவன். ''இது இருக்கட்டும்'' என்று வாங்கி வைத்துக் கொண்ட புரொட்யூஸர், ''உடனே மங்கேஷ் ஜுவல்லரீஸுக்குக் கார் எடுத்துக் கொண்டு போ. பெரிய சைஸில்— முப்பதுக்கு நாற்பதுக்குக் குறையக்கூடாது— வெள்ளியிலே வெங்கடாசலபதிக்கு ஆர்டர் கொடு. நாளைக்கோ அல்லது மறுநாளோ ரெடியாகிடணும். அதை எடுத்துக்கிட்டுத் தான் நம்ப நிருபமா வீட்டுக்குப் போகணும் நான் !'' என்றார்.

''சரி, சார் !'' என்ற வெள்ளித்திரை வெங்கு, ''பூஜை யாருக்கு நடக்கிறது இன்று? சுவாமிக்கா அல்லது நிருபமா வுக்கா ?'' என்று கேட்டான்.

''போடா, உனக்கு எப்பவுமே கிண்டல் தான்!'' என்று துரத்தி விட்டார் முதலாளி.

''அது பூஜா, இது தாஜா!'' என்று சொல் லிக்கொண்டே காரில் ஏறினான் வெங்கு.



பேராசிரியர் நீலகண்டன் சமீபத்தில் இடம் பெயர்ந்து குடி புகுந்திருக்கும் இடம் 'அபார்ட்மெண்ட் ஹவுஸ்' என்று ஆங்கிலத்தில் குறிப்பிடப்படும் நாகரிக அமைப்பைச் சேர்ந்தது. மாடியிலும் கீழுமாக நான்கு குடித்தனங்கள் இருக்கலாம். ஆனால் ஒருவருக்கொருவர் சம்பந்த மில்லாமல் வாழலாம். இவர்கள் வீட்டுக் கூடத்தைத் தாண்டிக் குதித்து இவர்கள் வீட்டுக்குப் போயாக வேண்டுமென்றோ அவர்கள் வீட்டு முற்றத்தைத் தாண்டிக் குதித்து இவர்கள் வீட்டுக் குழாயடிக்கு வர வேண்டுமென்றோ ஒண்டுக் குடித்தன நியதிகள் எல்லாம் இங்கு கிடையாது. ஒரே அஸ்தி வாரத்தில் எழுந்த கட்டிடமாயிருந்தாலும் ஒவ்வொரு வீடும் தனித்தனி உலகம். இவைகளை இணைப்பது மாடிப் படிகள், பால்கனி, மொட்டை மாடி வராந்தா இவை நாலும் தான்.







# ஒருமைப்பாடு வீடு



கட்டிடத்தில் நாலில் ஒரு பகுதியைப் பேராசிரியர் நீலகண்டன் வாடகைக்கு எடுத்திருக்கிறார். எஞ்சியுள்ள மூன்று பகுதிகள் இந்தக் கட்டிடத்தில் இந்த விநாடி வரை காலியாகத்தான் இருக்கின்றன.

நீலகண்டன் போர்ஷனில் ஹால் போல் தோற்றமளிக்கும் பகுதி. நீலகண்டன் சுவரில் மாட்டப் பட்டிருக்கும் கண்ணாடிமுன் நின்று முகத்தில் சோப்பைக் குழைத்துக் கொண்டிருக்கிறார். பேராசிரியரின் பையன் வேணு செய்தித் தாளில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறான்.

## கோமதி சுவாமிநாதன்

பேராசிரியரின் பெண் நீலா ரேடியோவில் ஒலிபரப்பாகும் காலை நேர ஆங்கிலச் செய்திகளில் செவிகளைப் பதித்திருக்கிறாள்.

(பேராசிரியர் நீலகண்டன் ஐம்பது வயதைத் தாண்டி விட்டவர் என்பதையும் வேணு வழக்கறிஞர் தொழிலுக்கான பட்டத்தைப் பெற்ற பிரம்மச்சாரி என்பதையும், நீலா எம். ஏ. பட்டம்பெற்ற பிரம்மச்சாரிணி என்பதையும் வாசகர்கள் இப்போது தெரிந்து கொள்வது நல்லது.)

நீலகண்டன்: ஏன் வேணு! இந்த 'லாங்வேஜ் பில்'லைப் பற்றி என்ன நினைக்கிறே? *(சோப்பை அழுத்திப் பூசுகிறார்.)*

வேணு (திரும்பாமலே): நினைவாக மேஜை டிராயரிலேதான் போட்டேன்.

நீலகண்டன்: நீ படித்தே பார்க்கலியா?

வேணு (பத்திரிகையை விலக்காமலேயே): அதை வேறே படிச்சுப் பாடம் பண்ணணுமா? ரொம்ப ராட்டன். உடனடியாக மாற்றணும்.

நீலா: உஷ்! இந்த நியூஸ் கேட்டு முடிக்கிறதுக்குள்ளேதானா நீங்க அத்தனை பாலிடிக்ஸையும் டிஸ்கஸ் பண்ணணும்? முக்கியமான கட்டத்திலே உங்கள் குரல் வேறே வந்து அமுக்குகிறதே!

வேணு: யாரு இங்கே பாலிடிக்ஸ் டிஸ்கஸ் பண்ணினார்கள்?

நீலகண்டன்: நாம்தான் பேசிக் கொண்டிருந்தோம்? நீதானே பெரிய எம். பி. மாதிரி ராட்டன்னு சொன்னே! படிக்காமே மேஜை டிராயரிலே போட்டேன்னே! அப்



புறம் மாற்றணும் என்கிறே! இப்படித்தான் கேஸ் கட்டுகளை ஒழுங்காகப் படிக்காமலே ஜட்ஜ் முன்னாலே இடைவடியாக அடிப்பியோ? மை டியர் சன்! உனக்குக் கவனம் போதாது! முன்னுக்கு வரவேண்டிய பையன்!

வேணு: மை ரெஸ்பெக்டட் ஃபாதர்! ஒரு சின்ன சந்தேகம். நீங்க எந்த பில்லைப் பத்திச் சொல்றீங்க?

நீலகண்டன்: லாங்வேஜ் பில்.

வேணு: ஐ ஆம் சாரி. நான் லாண்டரி பில்லைப் பத்திப் பேசறேன். நான் அதைப் படிக்கலே. வேட்டியை வேட்டீன்னுதான் எழுதியிருப்பான். பாண்டை பாண்டுன்னு தான் எழுதியிருப்பான். மேஜை டிராயரிலே இருக்கு. உள்ளே கிழித்துவிட்டு மேலே பிரமாதமாக இஸ்திரி போடுகிறான். வேறே லாண்டரிக்கு வாடிக்கை மாற்றணும்.

நீலா: மை காட்! எங்கேயோ மந்திரி சபையே மாறிப் போச்சுன்னு சொல்றான் நியூஸ்லே! அதைக் கேட்க விடாமே நீங்க லாண்டரியை மாற்றுங்கோ! நான் இப்போ என்ன பண்ணறது?

நீலகண்டன்: எல்லா ஸ்டேட் சீஃப் மினிஸ்டர்களுக்கும் தந்தி அடிச்சு விசாரி!... ரேடியோ நியூஸுக்குப் போய் உயிரை விடறு!.... தன்னாலே மத்தியான நியூஸிலே ரிபீட் பண்ணுவானே!... ஹா!...இதென்னடா பிளேடு! இரவிலுமில் டப்பா மூடியா மூஞ்சியைக் கிழிக்கிறது...

நீலா: பலதடவை நீங்க ரிபீட் பண்ணின பிளேடாக இருக்கும்!

(வானொலிப் பெட்டியில் செய்தி முடிந்து விட்டதற்கான அறிவிப்பு வருகிறது.)

நீலகண்டன்: ஓ! மணி எட்டேகால்!.... எனக்கு எத்தனையோ வேலை இருக்கு!... இந்தப் பிளேடு வேறே காலே வாரி விடுகிறது.

வேணு: உங்களோட ஒரு நாள் தாடி கிட்டேதான் அதற்குப் பயம்! மற்றவையெல்லாம் அதற்குத் தூசி மாத்திரம்!...

(பேராசிரியரின் மனைவி பார்வதி பக்கத்துக் கதவு வழியாக ஹாலுக்குள் வருகிறாள்.)

பார்வதி: நீங்க இன்னும் இங்கேயா இருக்கிறீர்கள்? வெந்நீர் மறுபடியும் பச்சைத் தண்ணியாகப் போயிருக்கும்.

நீலகண்டன்: நீ அதன் கிட்டே போய் நின்னு கொஞ்சம் சூடாகப் பேசு! தண்ணீரிலும் சூடு பிடித்து விடும்!

வேணு: நம்ப வீட்டுச் சமையற்கார அம்மா தினம் தவறாமல் ரசம் வைக்கிறாளே. அதிலே கொஞ்சம் கொண்டு போய் வெந்நீர் வாளியிலே ஊற்றறேன். சூடாக இருக்கும்.

நீலா (கோபத்துடன்): இன்கன்ஸிஸ்டெண்ட். இர்ரெலவண்ட். இம்மெட்டீரியல் அம்மா! நான் இந்த வார்த்தைகளை அப்ஜெக்ட் பண்றேன். நீ மனசிலே வைத்துக் கொள்ளாதே. நம்ப வீட்டு ரசம் நன்றாகவே இருக்கிறது. அது வெந்நீர் இல்லே. வேணு சம்பந்தமில்லாமல் உளறுகிறான்.

வேணு: ஓஹோஹோ! இந்த வீட்டிலே நான்தான் வக்கீல் தொழிலுக்குப் படிச்சவன்னு நினைத்துக் கொண்டிருந்தேன். நீலாவும் அதே தொழிலுக்குப் படித்திருக்கிறாள் போலிருக்கு. எனக்குத் தெரியாமல் போச்சே!

நீலகண்டன்: அவள் 'பெரிமேஸன்' மர்ம நாவல்கள் நிறையப் படித்திருக்கிறாள். எம். ஏ. வகுப்பிலே அவள் விசேஷ பாடமாக 'ஹிஸ்டரி'யை ஸ்பெஷலைஸ் பண்ணினாளென்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். அவள் ஸ்பெஷலைஸ் பண்ணினதெல்லாம் 'மிஸ்டரி' தான். ஏன்ஷியண்ட் ஹிஸ்டரியை விட ஏர்ள் ஸ்டான்லி கார்டனரைப் பற்றியும் எட்கார் வாலஸைப் பற்றியும்தான் அவளுக்கு அதிகம் தெரியும்.

நீலா: போங்கப்பா! நான் ஒரு முக்கிய பிரச்னையைப் பற்றிப் பேச ஆரம்பித்தவுடன் நீங்க என்னவோ சம்பந்தமில்லாத 'சப்ளிமெண்டரி' விவகாரங்களை எழுப்புகிறீர்களே?... இந்த வீட்டில் சமையல் அயிட்டமாகத் தயாராகும் ரசம் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

நீலகண்டன்: இந்த மாதிரி சர்ச்சைக்குரிய விவகாரங்களில் என்னால் சட்டென்று பதில் சொல்லிவிட முடியாது. (குரலைத் தாழ்த்தி) ஏன் பார்வதி! நம் வீட்டில் ரசம் என்று ஓர் அயிட்டம் தயாராகிறதா என்ன?

பார்வதி: நாசமாய்ப் போச்சு! தினம் அதைத்தானே அதிகமாக ஊற்றச் சொல்லிச் சாப்பிடுவீர்கள்! மறந்துபோச்சா?

நீலகண்டன் (முகத்தை டவலால் துடைத்துக்கொண்டே) ரைட்! ரைட்! எனக்கு எத்தனையோ ஞாபகங்கள்!... அந்தந்தக் காரியங்களில் நிலைக்க வேண்டிய ஞாபகம் எப்பவுமே அடுத்தாற்போல் செய்ய வேண்டிய காரியங்களிலே போய்த் தாவிக் குதிக்கும்! அநேகமாகச் சாப்பிட உட்கார்ந்தவுடனே நினைவெல்லாம் பஸ்ஸிலே எப்படி நெருக்கடியைச் சமாளிப்பது என்பதிலே போய் நிற்கும். கொஞ்சம் அட்வான்ஸ்ட் திங்கிங்! அவ்வளவுதான்!... பார்வதி! நான் குளிக்கப் போகிறேன்!...

வேணு (நீலகண்டன் முகத்தை உற்றுப் பார்த்து): ஃபாதர்! ஒரு சின்னச் சந்தேகம்.

நீலகண்டன்: சந்தேகம் என்கிற விஷயத்தில் சின்னது பெரிது என்பதற்கு அர்த்தமே இல்லை. நோ ரிடெய்ல் பிஸினெஸ்! ஹோல் சேல்தான்!

வேணு: ரைட்! உங்களுடைய ஒரு நாள் குறுந்தாடி ஹோல் சேலாகவே உங்க முகத்தில் தங்கிவிட்டது. ரேசரில் பிளேட் மாட்டினீர்களா?

நீலகண்டன்: ஆஹா?...(முகத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டு) நிஜம்தான்! பிளேடை மாட்டலே!... ஆரம்பத்திலேயிருந்தே என்னவோ ஒரே கன்ஃபியூஷன்!

வேணு: ஆமா! குழப்பந்தான். லாங்வேஜ் பில்லைப் பற்றித்தானே பேச்சை ஆரம்பிச்சீங்க!

நீலகண்டன்: எஸ்! எஸ்!... அந்தப் பில்லும் இந்தத் தாடி மாதிரித்தான் உறுத்துகிறது.

பார்வதி: நான் முக்கியமாக உங்களை ஒரு விஷயம் கேட்க வந்தேன்? நீங்க என்னவோ இந்தப் பசங்களோடே சேர்ந்து கூத்தடிக்கிறீர்கள்!

நீலகண்டன்: நான் உணர்ச்சியிலாவது இளமை பெறுவதை நீ விரும்பவில்லை. அப்படித்தானே?

பார்வதி: அரை நிஜார் மாட்டிண்டு கோலி விளையாடுங்கோ! நான் தடுக்கலே! இப்போ இந்தப் பிளாக்கிலே இன்னும் மூணு போர்ஷன் இருக்கே! யாராவது தெரிஞ்சவாளுக்குத் தகவல் கொடுங்களேன்! பழகினவா பக்கத்திலே இருந்தா கொஞ்சம் கலகலப்பாக இருக்குமே!

வேணு: ஏனப்பா! உங்க சிநேகிதர் ராமசாமி வீடு தேடிண்டிருந்தாரே! சொல்றது தானே?

நீலகண்டன்: டேஞ்சர்! டேஞ்சர்! அவன் குடித்தனம் வந்துட்டா அட்மாஸ்பியர் மாத்திரம் கலகலப்பாக இருக்காது! இந்தப் பிளாக்கே கலகலத்துப் போகும். அவன் பெண் பரத நாட்டியம் ஆடிப் பழக ஆரம்பிச்சிருக்காளாம்!

நீலா: தங்கமாய்ப் போச்சு! கீழ்நாட்டுக் கலைகளைப் பற்றிய என்னுடைய ஆராய்ச்சிக்கு ரொம்பவும் உதவும்!

வேணு: ஆமா! ஆமா! கொரிலாப் பிரதேச மக்கள் மாத்திரம் திகிலுடன் இருப்பானேன், நாமும் அப்படி இருப்போம்னு பார்க்கிறாய்!... வீடு அதிரும்.

(கதவைத் தட்டும் மணி ஓசை கேட்கிறது.)

வேணு: யாரது? போஸ்ட்மேன் வர நேரமில்லையே!

(போய்க் கதவைத் திறக்கிறான். பஞ்ச கச்ச ஜிப்பா தாரி ஒருவர் நிற்கிறார்.)

வந்தவர் (நீலகண்டனைப் பார்த்து): நமஸ்தே பாபுஜி!

நீலகண்டன்: குட்மார்னிங்! கமான்! வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?

வந்தவர் (ஆங்கிலத்தில்): என் பேர் ராமானந்த சாட்டர்ஜி! இந்தப் பக்கத்து போர்ஷனுக்குக் குடி வர இருப்பவன். அறிமுகப்படுத்திக் கொள்ளலாமென்று வந்தேன்.

(கரங்களை நீட்டுகிறார். நீலகண்டன் கை குலுக்குகிறார். மற்றவர்கள் புது நபரை விநோதமாகப் பார்க்கிறார்கள்.) (தொடரும்)

# பொங்கட்டும் பொங்கல்

நெல்லை ஆ. கணபதி

''நாடெங்கும் தைமுதல்நாள் பொங்கட்டும் பொங்கல்;
நம்நிலைதான் மேலுயரப் பொங்கட்டும் பொங்கல்;
காடெங்கும் வளம்பெருகப் பொங்கட்டும் பொங்கல்;
கழனிகளில் பயிர்செழிக்கப் பொங்கட்டும் பொங்கல்;

ஏடெங்கும் புகழ்பாடப் பொங்கட்டும் பொங்கல்;
ஏறியுள்ள விலைகுறையப் பொங்கட்டும் பொங்கல்;
வீடெங்கும் மகிழ்ச்சிபொங்கப் பொங்கட்டும் பொங்கல்;
விளக்கேற்றி வழிபடுவோம்; பொங்கட்டும் பொங்கல்.



**சுவையான சர்ச்சைகள்**

# ஔவைச் சிலைக்கு ஆதாரம் என்ன?

இம்மாதம் சென்னையில் நிகழும் இரண்டாவது உலகத் தமிழ் மகாநாட்டினை யொட்டி சென்னை நகரில் திருவள்ளுவர், ஔவையார், கம்பர், கண்ணகி முதலியோருக்குச் சிலைகள் அமைப்பது குறித்துப் பொது மக்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவி வருகின்றன. முதல் உலகத் தமிழ் மகாநாட்டில் கலந்துகொண்டவரும், இந்த இரண்டாவது மகாநாட்டின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்றுக் கொண்டவர்களில் ஒருவருமான திருமதி ஜெயா அருணாசலம் அவர்களின் கருத்தினைச் சிலைகள் அமைப்பது குறித்துக் கேட்டோம். அவர் கூறும் கருத்து : ★ ● ★



**ம**கா கவி பாரதியார், வ. உ. சிதம்பரம் பிள்ளை, பாரதிதாசன் ஆகியோர் அண்மையில் வாழ்ந்தவர்கள். பாரத நாட்டின் விடுதலைக்குப் பாடுபட்டவர்களும், தமிழ் மொழிக்குத் தொண்டாற்றியவர்களுமான இப்பெருமக்களுடன் நேரடித் தொடர்பு கொண்டு, நெருங்கிப் பழகியவர்கள் பலர் நம்மிடையே இன்றும் இருக்கிறார்கள். பாரதி, பாரதிதாசன், வ. உ. சி. ஆகியோரின் புகைப்படங்களும் உள்ளன. இவர்களுக்கு உருவச் சிலைகள் அமைத்தால் அவை ஆதாரபூர்வமாகத் திகழும். ஆனால், திருவள்ளுவரையும், கம்பரையும், ஔவையாரையும் நேரில் கண்டவர்கள் யார்? அவர்களின் உருவ அமைப்பு இப்படித்தான் இருக்கும் என்று யாரால் திட்டவட்டமாகக் கூற இயலும்? எந்த ஆதாரத்தைக் கொண்டு அவர்களின் உருவத்தைச் சிலையில் வடிப்பது? 'பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த கவிகளின் உருவத்தினை எந்த அடிப்படையில் என்ன ஆதாரத்தைக் கொண்டு இப்படிச் சிலை வடித்தீர்கள்?' என்று பிற நாடுகளிலிருந்து வருவோர் கேட்டால் என்ன பதில் கூற முடியும்? வெறும் ஊகம்தான் என்பதைத் தவிர வேறு என்ன மறுமொழி கூற முடியும்?

மெரினாவில் உள்ள காந்திஜி சிலை காந்திஜியைப் போல் இல்லை என்று கூறும் முதலமைச்சர் ஔவைச் சிலை ஔவையாரைப்போலவே இருக்கிறது என்று உறுதியாகக்கூற முடியுமா?

இராமனையும், சீதையையும் கல்லிலும், உலோகங்களிலும் சிலை வடித்து வழிபடுவதைக் கேலி செய்பவர்கள், யாருமே கண்டிராத கண்ணகிக்கும் ஔவையாருக்கும் சிலைகள் வடிக்க முன்வந்தது வியப்புக்கு உரியதுதான். இளங்கோவின் கற்பனைப் பாத்திரம்தானே கண்ணகி? பாரதப் பெண்ணின் இலட்சிய வடிவம். வருங்காலத்தில் இதே கண்ணகியின் உருவச் சிலைக்கு மக்கள் பொங்கலிட்டு வழிபட முன்வந்தாலும் வியப்பேதும் இல்லையே? விக்கிரக வழிபாடு பகுத்தறிவு வாதத்துக்கு ஒவ்வாது என்று கூறியவர்கள் இதற்கு என்னதான் சமாதானம் கூறுவார்களோ?

அமெரிக்காவில் உள்ள மியாமி கடற்கரையில் லட்சக் கணக்கான மக்கள் பொழுதுபோக்கக் கூடுகின்றனர். ஆனால் கடற்கரையில் இயற்கை எழில் கெட்டுப்போகாமல் பாதுகாப்பதில் அரசினரைப் போலவே பொதுமக்களும் சிரத்தை காண்பித்து வருவதை நேரில் கண்டேன். ஆனால், உலகத்துச் சிறந்த கடற்கரைகளுள் முக்கிய ஸ்தானம் வகிக்கும் மெரினாவின் இயற்கை எழில் இந்தச் சிலைகளால் உருக்குலைந்து போவதற்கு அரசாங்கம் அனுமதித்திருக்கிறது என்றுதான் கூறத் தோன்றுகிறது.

பிற நாடுகளில் குறிப்பாக ருஷ்யாவில் பிரபல நாவலாசிரியர்கள், நாடகாசிரியர்கள், கவிஞர்களின் பெயர்களைத் தாங்கி நிற்கும் வீதிகளும், சதுக்கங்களும் பல உள. ஏன், கல்கத்தா நகரிலேயே புகழ் பெற்ற வங்காளி எழுத்தாளர்களின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அவர்களின் பெயர்களோடு திகழும் வீதிகளும் பூங்காக்களும் உள்ளனவே? தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளர்கள் பெயரால் வீதியோ, பூங்காவோ, சதுக்கமோ ஏன் இருக்கக் கூடாது?

முடிவாக ஒன்று கூறுகிறேன். லட்சக் கணக்கில் செலவு செய்து இச்சிலைகளை வடிப்பதற்குப் பதில் தமிழ் வளர்ச்சிக்கு இத் தொகையைப் பயன்படுத்தினால் நல்ல பலன் தரும் என்பது உறுதி. உதாரணமாக வட இந்தியாவில் தமிழரல்லாதவர் தமிழ் மொழி கற்க உதவும் வகையில் தமிழ்ப் பள்ளிகளை நிறுவினால் நிரந்தரமான பலனளிக்கும். நாட்டின் ஒருமைப்பாட்டினை வளர்க்க இம்முயற்சி பெரிதும் உதவும் என்று கருதுகிறேன்.

ஃ ஃ ஃ

**சு**மார் 100 குழந்தைகள் படிக்கும் வித்யா பாரதி பள்ளியின் நிர்வாகியான திருமதி ஜெயா அருணாசலம் பகல்பொழுது முழுவதையும் பள்ளியிலேயே கழிக்கிறார். விடுமுறைக் காலங்களில் திண்டுக்கல் அருகிலுள்ள தம் கணவரின் பண்ணையை மேற்பார்வை பார்ப்பது வழக்கம். கரும்பு, திராட்சைத் தோட்டங்களைக் கவனிப்பதுஒர் இனிய அநுபவமல்லவா?

—பேட்டி கண்டவர்: 'பாணன'

அடுத்த இதழில் இரு ஆசைத்தம்பி இதற்குப் பதில் கூறுகிறார்.





ஜனவரி முதல் தேதியிலிருந்து எங்கள் வீட்டில் சில மாறுதல்கள் பண்ணுவதாக உத்தேசித்திருக்கிறோம். இதுவரை ''அப்பா'' என்று என்னை அழைத்துக் கொண்டிருந்த என் குழந்தைகள் இனி என்னை மாய்ஜீ (அம்மா என்னும் சொல்லின் ஹிந்தி உருவம்) என்று அழைக்கும். ''அம்மா'' என்று அழைத்துக் கொண்டிருந்த என் மனைவியை இனி அவர்கள் ''அப்பா'' என்று அழைப்பார்கள். இப்பொழுது எங்களுக்குப் புதிய பெயர்கள் வந்து விட்டதால், இனி புதிய பெயர்களைக்கொண்டே இன்னும் பண்ண உத்தேசித்திருக்கும் மாறுதல்களைக் கூறுகிறேன்.



தினம் காலையில் ஒன்பது மணிக்குக் காரியாலயம் கிளம்பிக் கொண்டிருந்த மாய்ஜீ இனி மத்தியானம் மூன்று மணிக்குத்தான் கிளம்புவார். வாரம் முழுவதும் சமையல் செய்து போட்டுக் கொண்டிருந்த அப்பா இனி வாரம் இரண்டு நாள் விருந்துச் சாப்பாடு போடுவார்.

''என்ன, ஒரே குழப்பமாக இருக்கிறதே!'' என்று கேட்கிறீர்களா? ஏன், குழப்புவதற்கு எனக்கு உரிமை கிடையாதா? விஷயங்களைக் குழப்புவது நமது சர்க்காரின் ஏகபோக உரிமையா, என்ன? வங்காளத்தில் நடத்திய குழப்பம் போதாது என்று மொழி விஷயமாகக் குழப்பம் நடத்தி யிருக்கிறார்கள். அவர்கள் கொண்டு வந்த சட்டத்தை எதிர்த்து வடக்கத்திய மாணவர்களும் கிளர்ச்சி நடத்தி யிருக்கிறார்கள், தெற்கத்திய மாணவர்களும் கிளர்ச்சி நடத்தி யிருக்கிறார்கள். அந்தச் சட்டம் எத்தனை குழப்பமானது என்று பார்த்துக் கொள்ளுங்களேன்!



இப்பொழுது இவர்களைப் பார்த்துக் கொண்டு ரயில்வேக்காரர்களும் எக்ஸ்பிரஸ் வேகத்தில் குழப்ப ஆரம்பித்துவிட்டார்கள். இதுவரை ஜி. டி. எக்ஸ்பிரஸ் என்று அழைக்கப்பட்ட வண்டி இனி தக்ஷிண எக்ஸ்பிரஸ் (சதர்ன் எக்ஸ்பிரஸின் ஹிந்தி உருவம்) என்று அழைக்கப்படுமாம். சதர்ன் எக்ஸ்பிரஸ் என்று இதுவரை அழைக்கப்பட்ட வண்டி இனி ஜி. டி. எக்ஸ்பிரஸ் என்று அழைக்கப்படும்.

மக்களைக் குழப்புவதுதான் இவர்களின் முக்கிய நோக்கம் என்றால் ஏன் இத்துடன் நிறுத்திக் கொண்டார்கள்? இன்னும் எத்தனையோ வழிகள் உள்ளனவே!

தொன்றுதொட்டு இருந்து வரும் பெயர்களை யெல்லாம் மாற்றிமக்களை நன்றாய்க் குழப்பித் தவிக்க விடலாம்.

கீழ்க்கண்ட மாறுதல்களையும் ஜனவரி முதல் தேதியிலிருந்து செய்யலாமே!

ஜனவரி முதல் தேதியிலிருந்து இதுவரை முதல் வகுப்பு என்று அழைக்கப்பட்ட பெட்டிகள் இனி மூன்றும்வகுப்பு என்று அழைக்கப்படும். மூன்றும் வகுப்பு என்று அழைக்கப்பட்ட பெட்டிகள் இனி முதல் வகுப்பு என்று அழைக்கப்படும். (மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் தாங்கள் முதல் வகுப்பில் சென்று கொண்டிருப்பதாகச் சந்தோஷப்படலாம்!) புதிய முதல் வகுப்புக்களுக்கு இருபது நாட்களுக்கு முன்னிருந்தே இடம் பதிவு செய்யப்படும். புதிய மூன்றும் வகுப்புக்களுக்குப் பத்து நாட்களுக்கு முன்னிருந்துதான் பதிவு செய்யப்படும்.

ஜனவரி முதல் தேதியிலிருந்து வண்டியின் டிரைவர், கார்டு என்று அழைக்கப்படுவார்; கார்டுடிரைவர் என்று அழைக்கப்படுவார். ஸ்டேஷன் மாஸ்டர் டிக்கெட் பரிசோதகர் என்றும், டிக்கெட் பரிசோதகர்ஸ்டேஷன் மாஸ்டர் என்றும் அழைக்கப்படுவார்.

இப்படிக் குழப்பிக் கொண்டே போகலாம். என்னைக் கேட்டால் மத்திய அரசாங்கம், மொழிப் பிரச்னையைத் தீர்க்கஇதிலிருந்து ஒரு வழி கண்டு பிடிக்கலாம். வடக்கத்தியர்கள் ஹிந்திதான் வேண்டும் என்று கூறுகிறார்கள். தெற்கத்தியர்கள் ஆங்கிலம்தான் வேண்டும் என்று கூறுகிறார்கள். ஆகவே, ஜனவரி முதல் தேதியிலிருந்து ஹிந்தி மொழியின்பெயர் ஆங்கிலம் என்று மாற்றப்படும், ஆங்கில மொழியின் பெயர் 'ஹிந்தி' என்று மாற்றப்படும் என்று அறிவித்து விட்டார்களானுல், தெற்கத்தியர்கள் ஹிந்திதான் வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பார்கள், வடக்கத்தியர்கள் ஆங்கிலம்தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பார்கள்.

எப்படி என் யோசனை?

என் கடைசிப் பையன் அரை மணி நேரமாக என்னை எழுத வொட்டாமல், 'மாய்ஜி', 'மாய்ஜி!' என்று கத்திக் கொண்டிருக்கிறுன்.

"உங்க அம்மா எங்கேடா போய்த் தொலைந்தாள்? எதற்காக அவளைக் கூப்பிடுகிறுய்?" என்று கேட்டேன்.

"நான் என் தாயாரைக் கூப்பிடவில்லை மாய்ஜி! உங்களைத்தான் கூப்பிடுகிறேன். இன்று ஜனவரி முதல் தேதி!" என்றுன் பையன்!

**எ**ன்ன நடந்து விட்டது? நான் ஒரு வாரம் லீவில் போய் வருவதற்குள் அப்படி என்ன நிகழ்ந்து விட்டது இந்த ஆபீஸில்?

ஆபீஸினுள் நுழைந்தவன் ஒன்றும் புரியாமல் நின்றேன். பளிச் பளிச்சென்ற சலவை உடைகள்... சிரித்த முகங்கள்.... (துள்ளலுடன் கூடிய) உற்சாக நடைகள்...

கொடுவாள் மீசை, வலை பனியன்
தெரிய மெல்லிய ஜிப்பா.
கழுத்திலேயும்.
மணிக்கட்டிலேயும் கட்டிய
கைக்குட்டைகள்.
இவன்தானே.....



# கில்லர் கிச்சாமி

ராஜேந்திர குமார்

ஆட்டெண்டன்ஸில் கையெழுத்துப் போடும்போது கவனித்தேன். சிரிக்கவே தெரியாத சௌமியன் கூடச் சிரிக்கிறான். 'ஹலோ' என்கிறான். நானும் 'ஹலோ' என்றேன் பயத்துடன். அவன் சிரிப்பு அவ்வளவு ரசிக்கும்படியாக இருக்காது.

''மூட்டை வருகிறது'' என்று ராமன் சொன்னபோதுதான் நான் துள்ளினேன். ''மூட்டையா? இன்றைக்கா?'' என்றுகேட்டேன் உற்சாகத்துடன். மறுவினாடி நானும் ஆபீஸோடு இரண்டறக் கலந்து விட்டேன். சலவை உடை....சிரித்த முகம்... உற்சாக நடை (துள்ளலுடன் கூடியது).

'மூட்டை' என்றால் எங்கள் ஆபீஸ் பாஷையில் போனஸ் என்று அர்த்தம். அன்று மாலை கைநிறைய சலவை நோட்டுக்களாக எண்ணிக் கணக்கன் கண்ணன் கையில் வைத்தபோது ''விஷயம்தெரியாமல் போய்விட்டது கண்ணு! இல்லையானால் ஒரு கோணிப் பையாவது கொண்டு வந்திருப்பேன்'' என்று சொன்னேன். கையெழுத்துப் போட்ட ரசீதுடன் அவன் அப்பால் நகர்ந்ததும் வாசலுக்கு நழுவினேன். அங்கே கோடீசுவரனைக் கண்டதும் ரோட்டுக்கு நழுவினேன். வெளியே வந்துகொண்டிருந்த பழநியைக் கண்டதும் பஸ் ஸ்டாண்டுக்கே ஓடிவிட்டேன்.

வம்பு! இரண்டும் சேர்ந்துவிட்டால் ஒரே இண்டல்தான்!

பஸ் ஸ்டாண்டில் அரை மணி நேரம் காத்திருந்தவனுக்கு 'சே! இன்றைக்கும் என்ன பிச்சைக்கார புத்தி? ஜம்மென்று டாக்ஸியில் போனாலென்ன?' என்ற ஞானோதயம் வரவும், வந்து நின்ற டாக்ஸியில் ஏறிக் கொண்டேன்.

வீட்டை அடைந்ததும் அலட்சியமாக இரண்டு ரூபாய் நோட்டை டிரைவரிடம் வீசி எறிந்து விட்டு நடந்தவன், ''ஸார்! அஞ்சு ரூபாய் சில்லறை இல்லே ஸார்!'' என்றதும் விழித்துத் திரும்பினேன். நோட்டைக் கவனித்தேன். புதிதாக வந்திருக்கும் ஐந்து ரூபாய் நோட்டு. அளவில் பழைய இரண்டு ரூபாய் மாதிரியே இருந்தது.



''சத்'' என்ற முணுமுணுப்போடு இரண்டு ரூபாய்களாக எடுத்துத் தந்துவிட்டு உள்ளே போனேன்.

ஹாலில்... படுக்கை அறையில்... எங்கேயுமில்லாமல் போகவே நேரே சமையலறையில் என்னவளைக் கண்டுபிடித்தேன். நின்றேன். திகைத்தேன்.

அவள் அழுது கொண்டிருக்கிறாள். ஏன் அழுகிறாள்? யாருக்காக அழுகிறாள்? அடுப்பில் பீன்ஸ் பொரியல் தீய்வது கூடத் தெரியாமல் அப்படி என்ன அழுகை?

பொரியலை இறக்கி வைத்த அதே வேகத்தில் அவள் முகத்தை நிமிர்த்தினேன். ''என்ன ஆச்சு? ஏன் அழறே?''

''அழறேனா? இல்லையே'' என்றாள் மூக்கைப் பிழிந்தவாறு. ஒருகால் வெங்காயம் நறுக்குகிறாளோ என்று சுற்றுமுற்றும் பார்த்தேன். அதற்கான அடையாளம் எதுவும் காணப்படவில்லை. அவளைச் சட்டென்று பூரிக்க வைப்போமென்று எண்ணிப் போனஸ் கவரை அவள் கையில் கொடுத்தேன்.

கவருக்குள்ளேயே நோட்டுக்களை எண்ணியவள் சீறி விழுந்தாள். ''காலையில் உங்களை அனுப்பும்போதே நினைத்தேன். இப்படி ஏமாந்து போய் வருவீர்களென்று.''

''ஏமாந்தேனா?''

''பின்னே என்னவாம்? கொஞ்சமாக ரவையும், எண்ணெயும் பருப்பும்தானே வாங்கி வந்தோம்? அதெப்படி மளிகைக் கடையில் அறுபது ரூபாய் ஆகும்? உங்களைச்

சரியாக ஏமாற்றியிருக்கிறுர் அந்த மளிகைக் கடைச் செட்டியார்....''

மளிகைக் கடைப் பாக்கியைத் தருவதற்காக நூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்து அனுப்பி யிருந்தான் அவன். கொடுத்தது போக மீதி என் பார்வையிலேயே யிருந்தது. ''யார் சொன்னது அறுபது ரூபாய் என்று? இருபத்தேழு ரூபாயும் பதினுறு காசும்தான் ஆகிறது.''

''பின்னே ஏன் நாலே நாலு பத்து ரூபாய் மட்டும் கவரில் இருக்கிறது?''

''பத்து ரூபாய் நோட்டுக்களா?'' எனக்குத் தலையைச் சுற்றியது. ''அசடு, அசடு! சரியாகப் பார்!'' என்று நோட்டுக்களைக் கவரிலிருந்து உருவி எடுத்துத் தந்தேன். நான்கும் புதிதாக வந்திருக்கும் நூறு ரூபாய் நோட்டுக்கள் - பழைய பத்து ரூபாயை விடச் சிறியவையா யிருந்தன.

''போனஸ் வந்து விட்டதா?'' என்ற அவள் கேள்வி, 'பால்காரன் வந்துவிட்டானு' என்பதுபோலச் சாதாரணமாக இருந்தது. பணத்தைக் கொண்டு போய்ப் பீரோவில் வைத்து விட்டு வந்தாள். ''கைகால் அலம்புங்கள், சாப்பிடலாம்.''

அவள் முகம் கூம்பியே யிருந்தது. மகிழ்ச்சியின் சாயல் கூடக் கிடையாது. என்னதான் வந்துவிட்டது இவளுக்கு?

''என்னதான் வந்துவிட்டது உனக்கு?'' தலைவரைக்கும் போர்த்துக் கொண்டு படுத்திருந்தவளின் போர்வையை உருவி எடுத்துக் கேட்டேன். ''என் கர்ராக் — டபால் போனஸ் கொடுக்கிறுயாம்?''

எழுந்து உட்கார்ந்தவள் என் கழுத்தையே பார்த்தாள். பிறகு பரிதாபமாக என் கழுத்தை மெல்லத் தொட்டு வருடினுள். பிறகு முகத்தை மூடிக் கொண்டு விம்மி அழலானுள்.

பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு. அதைக் கடந்து போய் விட்டது என் நிலைமை. ''பல்லிலே போடுவேன். சொல்லிவிட்டுத் தான் அழேன்.''

அவள் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டவாறு எழுந்து போய் ஒரு கடிதத்



தைக் கொண்டு வந்து கொடுத்தான்: ''காலையில் வந்தது'' என்ற குறிப்புடன்.

இடுக்கிய கண்களோடு படிக்க ஆரம்பித்தவனின் கண்கள் சட்டென்று விரிந்தன. படித்து முடிப்பதற்குள் பாதாம் கொட்டை அளவுக்குக் கண்கள் விரிந்து கொண்டன.

''ஏய்! யார் இவன்?'' என்றேன் சட்டென்று.

''என் மாமா பிள்ளை. முரட்டுத் தடியன். பதினெட்டு வயசிலே ஊரை விட்டு ஓடிப் போனவன். எங்கெல்லாமோ தேடிப் பார்த்தோம். கிடைக்கவில்லை. அப்பாவுக்கு வருஷத்துக்கு ஒரு கடிதம் வரும். என்னை வேறு—யாருக்கும் கட்டிவைக்கக் கூடாதுன்னு எச்சரிக்கை பண்ணுவான்.''

''அது சரி, என்னமோ 'பைராம்கான் கதை தெரியுமா'ன்னு எழுதியிருக்கானே, அதற்கு என்ன அர்த்தம்?''

''நூர்ஜஹான் கதை தெரியாதா உங்களுக்கு? அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட பைராம்கானைக் கொன்றுவிட்டு அவளைக் கடத்திக் கொண்டு போனாரே ஷாஜஹான்?''



''பைராம்கான்?'' என்னையுமறியாமல் என் இடக்கை கழுத்தைத் தடவிக் கொண்டது.

'படார் படார்' என்று ஓசை கேட்டது. இதயம்தான் அப்படி அடித்துக் கொள்ளுகிறதோ என்று பயந்தவன், 'அட சட் ஜன்னல்' என்று தெளிந்தேன். தள்ளாடியபடியே நடந்து போய் ஜன்னல் கதவைச் சாத்திக் கொக்கி போட்டு மாட்டிவிட்டு வந்து கட்டிலில் விழுந்தேன்.

பதினாறும் தேதி! அடப் பாவி! என் உயிருக்கு இன்னும் இரண்டே நாட்கள்தானா கெடு? அழுகையாய் வந்தது எனக்கு.

மறு நாள்..

பஸ்ஸில் போகும்போதும் சரி, நடந்து போகும்போதும் டீக்கடைகளில் எங்கே முண்டாப் பனியனையும் கொடுவாள் மீசையையும் பார்த்தாலும் சரி, நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. தீபாவளி சமயத்தில் பட்டாசு கொளுத்தப்படும்போது ஒதுங்குவதுபோல் ஒதுங்கி நடந்தேன்.

ஆபீஸில் நுழையும்போது ராமன் மேஜைக்குப் பக்கத்தில் ஒரு கும்பல் கூடிச் சிரித்துக்கொண்டிருந்தது. ''டேய் இவனே, இதை வந்து பாரேன்'' என்று ராமன் நீட்டிய போட்டோவை வாங்கிப் பார்த்தவன், 'பே' என்றலறி, தழலைத் தொட்டுவிட்டதுபோல் போட்டோவைக் கீழே போட்டேன்.

போட்டோவில் கையில் கத்தியும், கொடுவாள் மீசையும், உருட்டும் விழிகளுமாக ஓர் உருவம் நின்றிருந்தது.

''டேய், டேய் ஏண்டா அலர்றே? என் தம்பிடா அது! 'கில்லர் கிச்சாமி' என்கிற நாடகத்திலே ஹீரோ'' என்ற ராமன் என்னிடம் உதவி கேட்டான். ''உனக்குத்தான் சினிமாக்காரங்களைத் தெரியுமே. சான்ஸ் வாங்கித் தருவாயா?''

''மண்ணாங்கட்டி. ஏற்கனவே நான் பயந்து போயிருக்கேன்'' என்று முணுமுணுத்தவாறே இடத்தில் போய் அமர்ந்தேன்.

''ஏன் மேன் என்னாச்சு?'' கிண்டலுடன் நெருங்கினான் கோமடீசுவரன். ''மாமியோட சண்டையா?''

யாரிடமாவது சொன்னால் தேவலாம் போலிருக்கவே, ஆரம்பம் முதல் ஒரு மூச்சு சொல்லி அழுதேன்.

''ஒன்று செய்யேன். பேசாமல் லீவு போட்டுவிட்டு வெளியூருக்கு எங்கேயாவது போய் விடேன்.''

''அதெப்படி? இப்பத்தானே ஒரு வாரம் லீவு எடுத்தேன். மறுபடியும் கேட்டால் தருவார்களா? அதுமட்டுமில்லாமல் எத்தனை நாட்கள்தான் ஊர் சுற்ற முடியும்? திரும்பி இங்கேதானே வந்தாகணும்?''

''கவலைப்படாதே! நான் கவனிக்கிறேன். நல்ல ஐடியா தரேன். கொஞ்சம் பொறு!'' என்று கோமடீசுவரன் சொன்னபோது 'அப்பாடா' என்றிருந்தது எனக்கு.

அன்று பதினாறும் தேதி! கழுத்துக்குக் கெடு வைத்த நாளாயிற்றே?

மத்தியான டிபனுக்காக ஹோட்டலுக்குப் போய்த் தயிர் வடைகளாக உள்ளே தள்ளிக் கொண்டு கவலையோடு இருந்தபோது காலியாயிருந்த பக்கத்து சீட்டுக்கு ஆள் வந்தது.

நிமிர்ந்த எனக்கு அச்சமாகி விட்டது. கொடுவாள் மீசை, வலை பனியன் தெரிய மெல்லிய ஜிப்பா, கழுத்திலேயும், மணிக்கட்டிலேயும் கட்டிய கைக்குட்டைகளுடன் அமர்ந்திருந்த அந்த வஸ்தாது என்னையே கவனிப்பது போலிருக்கவே, சங்கடத்துடன் நெளிந்தேன்.

''அப்புறம் என்ன ஸார்?'' என்று கேட்ட ஸர்வரிடம், ''காப்பி'' என்றவன், அவசரம் அவசரமாகத் திருத்திக் கொண்டு ''பட்டர் மில்க்'' என்றேன். காப்பியானால் ஆற்றிக் கொண்டிருக்க வேண்டுமே! மோரானால் பரவாயில்லை. ஒரே மடக்கில் தீர்த்துக்கட்டி விட்டு ஓடிவிடலாம்.

''ஸார்!''

யாரோ யாரையோ கூப்பிடுகிறார்கள் என்றெண்ணி எங்கேயோ பார்த்துக்கொண்டிருந்த என்னைத் தொட்டுத் திருப்பினான் அந்த ரௌடி. "ஆனந்த் தியேட்டர் எதிரேதானே வேலை பார்க்கிறீர்கள்?"

"இல்லை...ஆமாம்..." என்று உளறிக் கொட்டி, மோரை ஒரே மடக்கில் விழுங்கி விட்டு எழுந்து மாடி இறங்கி ஓடினேன். பின்னாலேயே அந்த ரௌடி "ஸார்! ஸார்!" என்று கூப்பிடுவது கேட்டுக் கொண்டேயிருந்தது.

பில் கொடுத்து விட்டு வெளியே வரும் போது அவன் படிக்கட்டில் நின்று "யோவ் ஐயா...வ்" என்று அழைத்துக் கொண்டிருந்தான்.

நான் ஏன் திரும்பிப் பார்க்கிறேன்?

மாலை ஐந்தரை மணிக்கெல்லாம் டாக்ஸியொன்றைப் பிடித்துக் கொண்டு நானும் கோமகவரனும், பழனியுமாகப் புறப்பட்டோம். வீடு பூட்டியிருந்தது. "எங்கே போய்விட்டாள்?" என்ற எனக்குச் சந்தேகம் வந்து விட்டது. "ஒருவேளை நான் இல்லாத நேரம் பார்த்து அந்தக் காலி வந்து பயமுறுத்தி இழுத்துப் போயிருப்பானோ?"

தலையைப் பின்னுக்குத் தள்ளியவாறு சிரித்தான் பழனி. "உளறாதே! மிரட்டி இழுத்துப் போகிறவன், பூட்டு பூட்டுகிற வரை காத்து நிற்பானா?"

இல்லாத ஆராய்ச்சியெல்லாம் நாங்கள் பண்ணிக் கொண்டிருந்தபோது பக்கத்து வீட்டிலிருந்து விசுக் விசுக்கென்று வந்த என்னவள், கலங்கிய கண்ணும், உறிஞ்சும் மூக்குமாகப் பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனாள்.

"சேச்சே! சுத்தப் பயங்கொள்ளி. அதுதான் ஒருத்தருக்கு மூணு பேர் இருக்கிறோமே! என்ன அப்படியொரு பயம் உனக்கு?" என்று இரைந்துவிட்டுக் கதவுத் தாழ்ப்பாள் சரியாகப் போடப் பட்டிருக்கிறதா என்று சரி பார்த்துக் கொண்டேன்.

"கோமகவரா! ஜன்னல் கதவுகளையும் மூடிவிடலாமா?" என்றேன் பீதியுடன்.

"சேச்சே! சுத்த பயந்தாங்கொள்ளி" — என்று கூறிப் பழனி சிரித்தான்.

"நான் ஒன்றும் பயப்படவில்லை" என்று வீம்புக்குச் சொல்லிக் கொண்டு உள்ளே போய்க் காப்பி போடச் சொல்லி விட்டு வந்தேன்.

அரட்டைக் கச்சேரி கொஞ்ச நேரம், சீட்டுக் கச்சேரி கொஞ்ச நேரம் என்று பொழுதைப் பத்து மணி வரையில் தள்ளி விட்டோம். "தூங்கலாமா?" என்று பழனி விட்ட கொட்டாவி கோமகவரனைத் தொத்திக்கொண்டது. பிறகு என்னையும் தொத்திக் கொண்டது.

நீண்டதொரு கொட்டாவியை வெளியேற்றியவாறு கண்ணைத் திறந்தவன் விறுக்கென்று நிமிர்ந்தேன். தூக்கிய கைகள் தூக்கியவாறிருக்க, திறந்த வாய் திறந்தேயிருக்க, 'ஙே' என்று விழித்தேன்.

ஜன்னல் வழியாகத் தெரிந்த அந்த முரட்டு உருவம் துப்பாக்கியின் பிடியை இறுக்கிற்று. "டாய்...யாரும் கூச்சல் போடக் கூடாது. போட்டீங்க, எல்லாரையும் பொசுக்கிப் பிடுவேன் பொசுக்கி. ஒய்ங்கா கதவைத் தொறங்க."

கதவைத் திறக்கப் போன கோமகவரனைத் தடுத்தேன். "வேண்டாம். திறக்காதே!"

"சும்மா இரு மேன். திறந்தா உன்னை மட்டுமே சுட்டுட்டுப் போயிடுவான். திறக்கா விட்டால் எல்லாரையுமில்லே சேர்த்துச் சுடுவான்?"

"பாவிகளா!" நான் அலறினேன். "இது தானா காப்பாற்றுகிற லட்சணம்?"

"நாங்கள் என்ன பண்ண?" பழனி கையை விரித்தான். "ஏதோ தனியாகச் சண்டை போட வருவான். ஆளுக்கு ஆள் நாலு போட்டு அனுப்பலாமென்று பார்த்தோம். அவனானால் துப்பாக்கி கொண்டு வந்து காட்டறானே. துப்பாக்கியைத் தட்டி விட்டுக் குஸ்தி போட நாங்களென்ன எம்.ஜி. ஆரா? ஜெயசங்கரா? நீ போய்க் கதவைத் திற கோமகவரா!" என்று சொன்னதையடுத்துக் கதவு திறக்க, உள்ளே நுழைந்தான் அந்த முரடன். அப்போதுதான் ஹாலுக்கு வந்த என்னவள் கூச்சல் போட வாயைத் திறக்க "உஸ்ஸ்" என்று மிரட்டினான் முரடன். "இங்கே யாரும் கூச்சல் போடக் கூடாது. இது டாக்டர் உத்தரவு" என்றான் விரலை ஆட்டிக் கொண்டே.

"டாக்டரா?" என்று நான் விழிக்க...

என்னவள் கூச்சல் போடவில்லை. 'டொம்' மென்று விழுந்து விட்டாள். "ஐயையோ" என்று பாயப் போன என் மார்பில் அவனுடைய துப்பாக்கி அழுத்தியது. "வாய்யா பைராம்கான்" என்று கடகடவென்று சிரிக்க ஆரம்பித்தான். அதற்குள் கதவு தட்டப் பட்டது.

"யாரதுன்னு பாரு. நான் போய் ஒளிஞ்சுக்கறேன்" என்ற முரடனின் துப்பாக்கி மேலும் என் கழுத்துக் குழியில் அழுந்தியது. "ஜாக்கிரதை! நான் ஒளிந்திருந்து உன் மனைவியையே துப்பாக்கியாலே குறி பார்த்துக்கொண்டிருப்பேன். என்னைப் பற்றி ஏதாவது உளறினையோ, அவ்வளவுதான்; உன் மனைவி குளோஸ்" என்றவாறு அறையினுள் நுழைந்து கொண்டான்.

திறந்த கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தவர் என் மாமா. வந்தவர் அரைகுறை ஆட்டத்தால் சிதறிக் கிடந்த சீட்டுக்களைப் பார்த்துச் சீறினார். "என்டா? வீட்டிலேயே ஜுமா போடுகிறயா? என்ன தைரியம் உனக்கு?"

"தைரியமாவது? பயந்து !போய் நிக்கறேன் மாமா!" என்று ஆரம்பித்து என்னையுமறியாமல் கொலை செய்ய வந்தவனைப் பற்றி விவரங்களைச் சொல்லி விட்டேன். பிறகு தான் கள்ளென்று உண்மை உறைக்கவே அவன் பக்கமாகத் திரும்பிப் பார்த்தேன். நல்ல வேளை! அவன் மேல் இன்னும் துப்பாக்கிக் குண்டுகள் பாயவில்லை.

"யாரு? அவன் மாமா பிள்ளையா? ரங்காவா? அவன்தான் நாலு மாசம் முந்தியே கொள்ளைக் கேஸிலே போலீஸ்கிட்டே மாட்டி ஷூட் பண்ணிக் கொன்னுட்டாங்

களே! மானம் கப்பல் ஏறக் கூடாதுன்னு பேப்பரிலே செய்தி வராம இருக்க நான் பட்ட பாடு கொஞ்சமா? அப்படி ஒரு பயங்கரம் நம்ப குடும்பத்திலே நிகழ்ந்தது என் பாதை உங்களுக்கெல்லாம் கூடச் சொல்லாமல் மறைச்சுடணும், மறந்துடணும்னு நெனைச்சேன். இன்னிக்கு ஞாபகப்படுத்திட்டே...''

''அது வேறு ஒரு மாமா பிள்ளையா யிருக்கும்.''

''என்ன இது உளறல்? அவனுக்கிருக்கிறதே ஒரே ஒரு மாமா தானே?''

''அப்ப இது வேறு பிள்ளையா யிருக்கும்!''

''என்ன இது உளறல்? அவருக்கிருந்தது ஒரே ஒரு பையன்தானே!''

''அப்போ... செத்துப் போனவன் அதெப்படி கடிதம் போடுவான்?''

''இதோ பாருங்களேன்'' என்று நான் எடுத்துத் தர, படித்துப் பார்த்த மாமனார் திருதிருவென்று விழித்தார். ஆனால் அதைப் பார்த்துக் கோமகவரன் சிரித்தான். ''தேதியைப் பாருங்க'' என்றான்.

தேதியைப் பார்க்க எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஐந்து மாதங்கள் முந்திய கடிதம் அது. ஊர்ஊராகச் சுற்றிப் பின் தாமதமாக வந்து சேர்ந்திருக்கிறது.

''நான் அப்பவே நோட் பண்ணிட்டேன்!'' கோமகவரன் சிரித்தான். ''உன்னைப் பயமுறுத்தி வேடிக்கை பார்க்க ஆசை. அதுதான் சும்மா இருந்தேன்!''

''அப்ப இங்கே வந்திருக்கிற ரௌடி யாரு?'' என்ற நான் மாமனார் முகத்தைப் பார்த்து விழித்தேன். மயங்கிய மகனை எழுப்பிக் கொண்டிருந்தார் அவர்.

''என்னைப் பார்த்தால் ரௌடி மாதிரியா தெரியுது உனக்கு?'' என்ற பிறகுதான் எனக்கு என் கேள்வி அவரையும் தாக்குவதை உணர்ந்தேன்.

''உங்களைச் சொல்லலை'' என்று சொல்லும்போதே, கொடுவாள் மீசையைக் கையில் எடுத்துக் கொண்டு சிரித்தவாறு வந்தான் அந்த ரௌடி.

''ஆளைத் தெரியல்லையா? உங்க பிரண்டு ராமன் தம்பி. 'கில்லர் கிச்சாமி' ஹீரோ ஸார். எப்படி ஸார் என் நடிப்பு? நீங்களே பயந்துட்டீங்க இல்லே? ஹி....ஹி... ... உங்களுக்குத்தான் சினிமா 'இன்ப்ளுயன்ஸ்' இருக்கே, ஏதாவது எனக்கு சான்ஸ் வாங்கித் தருவீங்களா?''

''சான்ஸா? பார்க்கலாம். முதலில் எல்லாருமாக இடத்தைக் காலி பண்ணுங்க. நான் நிம்மதியாத் தூங்கணும்'' என்று சோம்பல் முறிக்க ஆரம்பித்தேன்.

''இந்தா உன் பேனா. மத்தியானம் ஹோட்டலில் சாப்பிடும்போது அங்கேயே போட்டு விட்டாயாமே. யாரோ ஒரு முரடன் எடுத்துத் தந்தானாம். காஷியர் சொன்னார்.''

இதை எடுத்துத் தரத்தானா அந்தப் பாவி கூப்பிட்டான்? ஓடு ஓடு என்று ஓடி வந்து விட்டேனே! நிம்மதியுடன் கைகளை உயரத் தூக்கி, முறுக்கி, உடம்பை வளைத்து, வாயைத் திறந்து 'ஆவ்' என்று நீண்டதொரு கொட்டாவியை வெளியேற்றிவிட்டு 'அட சத்' என்று முடித்து, அவனைப் பார்க்க நடந்தேன்.

# சிவ நடனம்!

தியாகமணி

ஓமென மந்திரம் வானவர் வீதியில்
ஓங்கிக் கேட்டிடவே - அதை
ஆமென நந்தியும் ஆவலும் மீறிட
மத்தளம் கொட்டிடவே

பூமகள் செல்வியின் பூவிரல் யாழினை
பொலிவுடன் மீட்டிடவே - அருங்
கோமகள் சுந்தரி கயிலை புரந்தரி
கைகளும் கும்பிடவே

வேதம் முழங்கிட வேணி குலுங்கிட
வானம் அதிர்ந்திடவே - நன்
நாதம் வழங்கிடும் நாரதர் வாய்வழி
கானம் உதிர்ந்திடவே

பூத கணங்களின் பம்பை ஒலித்திட
பூவையர் ஆடிடவே - இதை
யாவும் அறிந்தவன் யோக நிரந்தரன்
மோனம் கலைந்திடவே

சூலம் அணைத்தவன் சூதை ஒழித்தவன்
சொக்கனும் ஆடுகிறான் - இந்
ஞாலம் மகிழ்ந்திட யாவும் செழித்திட
தாண்டவம் ஆடுகிறான்!

மனமும் தெளிந்திட மாயை அகன்றிட
மதுரையில் ஆடுகிறான் - நாம்
தினமும் வணங்கிட துயரம் ஒழிந்திட
தில்லையில் ஆடுகிறான்!

கண்கள் சிவந்திட கங்கை அசைந்திட
கயிலையில் ஆடுகிறான்! - தமிழ்ப்
பண்கள் முழங்கிட அங்கம் குலுங்கிட
பம்பையன் ஆடுகிறான்!

திங்கள் ஒளிர்ந்திட தோளும் அசைந்திட
தாண்டவம் ஆடுகிறான்! - அவன்
எங்கள் மனக்குறை என்றும் அகன்றிட
என்றென்றும் ஆடுகிறான்!



கோயிலுக்கு முன்புள்ள வீதியிலே ஒரு முத்துப் பல்லக்கு கோயிலை நோக்கி வந்து கொண்டிருந்தது. பல்லக்கைச் சூழ்ந்து மாபெரும் மக்கள் கூட்டம் பின்தொடர்ந்து கொண்டிருந்தது.

அந்தப் பல்லக்கிலே மனிதனால் செய்யப் பட்ட சுவாமி எதுவும் வரவில்லை. மனிதக் கடவுளான சுவாமியே வந்து கொண் டிருந்தார்.

பல்லக்கிலே உள்ள பட்டுத் தலையணையிலே சாய்ந்தபடி, காலை இளஞ் சூரியனைப் போன்ற இளந்துறவி அமர்ந்திருந்தார். இருபது இரு பத்தைந்து வயதுதான் இருக்கும் அந்தத் துறவிக்கு.

அழகிய பவழம் போன்ற திருமேனி. முழு மதி போன்ற முகம். அருள் சொரியும் கருணை விழிகள். ஆசி வழங்கும் வள்ளல் திருக் கரங்கள். வேதம் மணக்கும் திரு மலர்வாய்! சுருண்டு அடர்ந்து பின்னிய கற்றைச் சடை முடி, நெற்றியிலும், மேனியிலும் நிறைந்து விளங்கும் திருநீற்றுப் பொலிவு!

கழுத்தில் பிணைந்து தொங்கியபடி மார் பின் இதயத்தோடு ஒட்டிக் கொண்டு ரகசிய மாக உபதேசம் கேட்கும் பேறு பெற்ற உருத் திராட்ச மாலை! செந்நீ நிறமுள்ள காவியுடை! மரக் கட்டைப் பாதுகை அணிந்த மலர்ப் பாதங்கள்! ஐந்து புலன்களின் வழியாகவும் உண்டாகும் பந்த பாசங்களையும், ஆசை களையும் அறவே சுட்டெரித்து ஞானச் சுடர் விடும் தெய்வ மணித் தீபம் போன்ற முக ஒளி!

சுருக்கமாகக் கூறினால் நடமாடும் பேசுந் தெய்வம்! ஆம். பேசும் தெய்வம்தான்!

அந்தப் பேசுந் தெய்வமான இளந் துறவி யின் பல்லக்கைச் சூழ்ந்தபடி, பெரிய பெரிய பணக்காரர்களும், பதவியாளர்களும், நூறு வயதுக்கு மேற்பட்டவர்களும் கூட வாய் பொத்தி வணங்கித் தொழுதார்கள்.

வீதியென்றும் பாராமல் கீழே விழுந்து வணங்கினார்கள்.

ஆனால் அந்த இளந் துறவியோ எதிலும் நாட்டமுடையவராக இருக்கவில்லை. வாய் பேசாமல் வலக்கையை மட்டும் உயர்த்தி ஆசீர்வதித்தபடியே சென்றார்.

ஆனால் மக்களோ பொன்னையும் பொருளை யும், பூக்களையும் பூரிப்போடு துறவியின் பாதங்களிலே சொரிந்து மகிழ்த் தவங் கிடந்தனர். துறவியின் அருட் பார்வைக்காக அலை அலையாக மக்கள் பல்லக்கின் நாலா புறமும் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். பல் லக்கையும் தொடர்ந்தார்கள்.

அதனால் கோயி லின் முன்புறமுள்ள வீதியிலே மக்களின் கூட்டம் பெருகி விட்டது.

# மகனும் மகானும்



அந்தத் திண்ணையிலே அமர்ந்திருந்த தொண்டு கிழவர் ஒருவர் தடியை ஊன்றிக் கொண்டு அவசரம் அவசரமாக எழுந்தார். பாவம்! தள்ளாமையாலே தடுமாறினார். என்றாலும் ஆசைப் பெருக்கின் காரணமாகத் திண்ணையை விட்டு இறங்கித் தெருவுக்கும் செல்லத் துணிந்தார்.

அதே சமயத்தில் இளந் துறவியின் பல்லக்கு அந்த வயதான கிழவரின் தெருத் திண்ணை ஓரமாக நெருங்கி வந்துகொண்டிருந்தது. தன் வீட்டை நெருங்கிப் பல்லக்கு வரக் கண்டதும் பெரியவரின் ஆசை உணர்ச்சிகள் அணை உடைத்த வெள்ளம் போல் ஆகிவிட்டன !

''மகனே! மகனே ! என்னைப் பாரடா, கண்ணே ! பதினெட்டு ஆண்டுகளாக உன்னை விட்டுப் பிரிந்து, ஏங்கித் தவிக்கும் என்னைப் பாரடா கண்ணே! அன்பு குழைய, 'அப்பா!' என்று ஒரு முறை அமுத வாயாலே கூப்பிடடா. மகனே ! என் வீட்டிலே வந்து சிறிது இளைப்பாறிப் போகக் கூடாதா, என் செல்வமே!.......''



பின்னைப் பாசத்தால் பல்லக்கை நோக்கிக் கதறியபடி ஓடினார் – தள்ளாடியபடியே.

உண்மையறியாத ஒரு சிலர், அவரை ஏதோ பைத்தியக்காரர் என்று பரிகசித்தனர். உண்மை அறிந்தவர்களோ, அவரின் உருக்கமான நிலையைக் கண்டு சோகக் கண்ணீர் சொரிந்தனர். ஆனால்...?

**ப**ல்லக்கோ நிற்கவில்லை. துறவியும், தொண்டுக் கிழவரைப் பார்த்துப் பல்லக்கை நிறுத்தச் சொல்லவில்லை. மனம் நெகிழவில்லை. வழக்கத்தை விடச் சற்று வேகமாகவே பல்லக்குச் செல்லத் தொடங்கியது.

பல்லக்கின் வேகத்தைத் தொடர முடியாத வயதான கிழவர், ''மகனே! மகனே! பல்லக்கைக் கொஞ்சம் நிறுத்தடா, என் கண்ணே! பால் மணம் மாறாத உன் அருள் முகத்தைக் கிட்ட வந்து ஒரு முறை பார்த்தாவது திருப்தி அடைகிறேன்'' என்று பாசக்குரலுடன் கதறிக் கொண்டு பல்லக்கைப் பின்தொடர்ந்தார்.

ஆனால் துறவியோ துளிக்கூடச் சலனம் அடையவில்லை. அப்பா என்று அழைக்கவில்லை. எல்லாருக்கும் ஆசி வழங்கியதைப் போலவே தள்ளாத கிழவர் வரும் திசையை நோக்கி வலக் கையை உயர்த்தி ஆசி வழங்கினார். அவ்வளவுதான்! பல்லக்கு மேலே சென்று கொண்டே யிருந்தது.

மகனின் பாசம் தாங்காத வயதான தந்தை, ''மகனே! மகனே!'' என்று கூவி அரற்றியபடி மயங்கி வீழ்ந்தார்.

உடனே பக்கத்தில் இருந்தவர்கள் அவரைத் தூக்கிச் சென்று அவரது வீட்டுத் திண்ணையிலே வைத்து மூர்ச்சை தெளிவித்தார்கள் !

மூர்ச்சை தெளிந்ததும் பின்னைப் பாசத்தால் 'மகனே' என்று எழுந்து செல்லத் தொடங்கினார். ஆனால் அருகில் இருந்தவர்கள் அவரைப் பல்லக்கை நோக்கிச் செல்ல விடாமல் தடுத்து நிறுத்தினார்கள். நிறுத்தினதோடு மட்டுமா? இனி, ''மகனே!'' என்று அழைக்கக் கூடாது என்றும் சொன்னார்கள்.

அதைக் கேட்டதும் அந்த வயதான பெரியவர் மிருந்த சினமடைந்தார். 'பெற்று வளர்த்துப் பேணிய மகனை, மகனே என்று கூப்பிடக்கூடாது என்று தடையா? என்ன கொடுமை? நான் இவனைப் பெற்று வளர்க்காமல் இருந்திருந்தால்... இன்று இந்த மகான் எப்படி வந்திருக்க முடியும்?' என்று குமுறினார். அந்தக் குமுறல் அவரை முந்தைய நிகழ்ச்சிக்கு இழுத்துச் சென்றது.

**வே**தமூர்த்திக்கும் அங்கயற்கண்ணிக்கும் திருமணம் நடந்து முப்பது ஆண்டுகள் கடந்தும் அவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை. மறை

தமிழ்முடி

யாத செல்வம் இருந்தது. ஆனாலும் குழந்தைச் செல்வம் இல்லாததால்: அது அவர்களுக்குக் குறைவான செல்வமாகவே இருந்தது.

தங்களுக்குத் தெரிந்த — முடிந்த தான தருமங்களையெல்லாம் செய்து பார்த்தார்கள். குழந்தைச் செல்வம் கிடைக்கவில்லை.

அதனாலே வாழ்க்கையையே வெறுத்தார்கள். கணவனும், மனைவியும் உயிர் போகும் வரை உண்ணாவிரதம் இருப்பதென உறுதி பூண்டார்கள். குழந்தை இல்லாமல் வாழ்வதைவிட, உண்ணா நோன்பு இருந்து உயிர் விடுதலே மேலாகக் கருதினார்கள்.

இறைவன் திருவருளாலே வேதமூர்த்தியின் ஐம்பத்தாறுவது வயதிலே ஓர் ஆண் குழந்தை அங்கயற்கண்ணிக்குப் பிறந்தது. குழந்தை பிறந்ததனால் உண்டான மகிழ்ச்சிக்கு எப்படி அளவில்லையோ, அப்படியே துன்பத்துக்கும் அளவில்லாமல் போய்விட்டது. குழந்தையைப் பெற்றதும், அதன் குரலைத்தான் கேட்டாளோ என்னவோ, அதன் முகத்தைக்கூடப் பார்க்காமலே தெய்வமாகி விட்டாள் அங்கயற்கண்ணி!

வேதமூர்த்தியின் அந்த மன நிலையை விவரிக்க எப்படி இயலும்?

தாயற்ற குழந்தைக்குத் தானே தாயாகவும் விளங்கினார். குழந்தைக்குச் 'சிவக்கொழுந்து' என்று பெயரிட்டார். கண்ணை இமை காப்பதினும், கவனமாகச் சிவக்கொழுந்தைக் காத்துப் போற்றினார்.

ஐந்து வயதானதும் எல்லையில்லா மகிழ்ச்சி அடைந்தார். சிவக்கொழுந்தைப் பள்ளியிலே சேர்க்க முடிவு செய்தார். பெரிய மன்னர் வீட்டுப் பிள்ளையைச் சேர்ப்பதுபோலப் பள்ளியிலே சேர்க்க விரும்பினார். பெரும் பணம் செலவு செய்து மிக விமரிசையாக வித்தியாரம்பம் செய்யத்திட்டமிட்டிருந்தார்.

பள்ளியில் சேர்க்க ஓர் இரவுதான் பாக்கி இருந்தது. விடிந்தால் வித்தியாரம்பம்தான். ஆனால் நாம் நினைத்தபடியெல்லாம்தான் எதுவும் நடந்து விடுவதில்லையே! அப்படி நடந்து விட்டால், ஆண்டவனை நினைப்பவர்களே அருகிவிட மாட்டார்களா என்ன?

அன்று இரவு மணி இரண்டிருக்கும்!

சிவக்கொழுந்துக்குத் திடீரென்று ஜுர நோய் வந்துவிட்டது. அது எதனால் வந்தது? எப்படி வந்தது? என்று வேதமூர்த்திக்கு ஒன்றுமே விளங்கவில்லை. காய்ச்சல் நொடிக்கு நொடி அதிகரித்து மிக விரைவிலேயே பேச்சு மூச்சற்ற நிலைக்கு ஆளாக்கியது. வேதமூர்த்திக்கு இதயமே வெடித்துவிடும் போல இருந்தது.

தனக்குத் தெரிந்த பெரிய டாக்டர்களையெல்லாம் உடனடியாக வரவழைத்துச் சிகிச்சை செய்யும்படி வேண்டினார். ஆனால் அவர்களிலே ஒருவராவது சிவக்கொழுந்தின் நோயைத் தீர்க்க முடியும் என்று கூறவில்லை. கூறுவதற்கு அது என்ன நோய், எதனால் வந்தது என்று அவர்களுக்குத் தெரிந்தால் தானே ?

வேதமூர்த்தியின் வேதனையான சோதனை நிலையைக் கண்டு ஆற்றாத சிலர் அவருக்கு ஞானகுரு சுவாமிகளிடம் கூறுமாறு வேண்டினார்கள். ஆனால் வேதமூர்த்தி முதலில் அதை நம்பவில்லை. அங்கு செல்ல நம்பிக்கை ஏற்படவில்லை. என்றாலும், மற்றவர்கள் வற்புறுத்திக் கூறியதாலும், சிவக்கொழுந்து பிழைக்க வேண்டும் என்ற ஆசையாலும் ஞானகுரு சுவாமிகளைக் காண முடிவு செய்தார் !

பெருமருந்தூர் தவமடத்தின் தலைவர் ஞானகுரு சுவாமிகள். தலைவர் மட்டுமா ? மகாஞானி ! பெரிய மகான் ! தெய்வ அருள் பெற்ற தீர்க்கதரிசி ! தீரா நோய்களையும் தீர்க்கும் மகா சித்தர்!

அத்தகைய மகானிடம் சிவக்கொழுந்தைக் கொண்டு சென்று அடிபணிந்து வேண்டினார். விம்மி விம்மி அழுது புலம்பினார்.

''சுவாமி! எனது மகனைத் தாங்கள்தான் காப்பாற்றித் தந்தருள வேண்டும். தாய் முகம் அறியாத பிள்ளை சுவாமி!'' என்று கண்ணீர் உகுத்தார்.

வாடிப் போன கீரைத் தண்டைப் போலத் துவண்டு கிடந்த சிவக்கொழுந்தை அருள் விழிகளால் சிறிது உற்று நோக்கினார். பிறகு விழிகளை மூடிக் கொண்டு சிந்தித்தார்!

ஒரு கணம் கழித்துத் திருவிழி மலர்ந்தார்! பிறகு சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளினார்.

''அப்பனே ! எழுந்திரு! ஒருவருக்கு உயிரைக் கொடுப்பதோ, எடுப்பதோ நம்முடைய சக்திக்கு உட்பட்டதல்ல. அது ஆண்டவனின் சக்திக்கு உட்பட்டது. அதனாலே.......'' என்று மேலே கூறுவதற்குள் வேதமூர்த்தி வேதனை தாங்கமாட்டாமல் இடையிட்டுக் கெஞ்சினார்.

''சுவாமி! தாங்கள் அப்படியெல்லாம் கூறி என் குழந்தையின் உயிரைப் புறக்கணித்து விடாதீர்கள்! தேவரீர் கிருபை வைத்தால் செத்தவனையும் பிழைக்கும்படி செய்ய முடியும். ஆனால் என் பையனோ சாகும் நிலையிலே தவித்துக் கொண்டிருக்கிறான். அதனால் அவனை எப்படியாவது காப்பாற்றி அருள் செய்ய வேண்டும், தேவா!'' என்று பிரார்த்தித்துக் குழந்தை போல் அழுதார்.

ஞானகுரு சுவாமிகளின் கருணை மனம் கனிந்தது ! ''அப்பனே ! உன்னுடைய குழந்தை உயிர் பிழைக்க வேண்டும். அவ்வளவுதானே ?''

''ஆமாம், சுவாமி !''

''அப்படியானால் சிவக்கொழுந்தை இன்று நம்மிடத்திலேயே விட்டு விட்டுச் செல்லும்! நாளைக் காலையில் வாரும்! ஆண்டவன் அருள் கைகூடினால் பிள்ளை உயிர் பெற்றெழுவான்.''

''சுவாமி! எப்படியாவது பையனை உயிர் பிழைக்கும்படி செய்து தாருங்கள்!''

''பையனைப் பிழைக்கும்படி செய்தால் நமக்கு என்ன தருவீர்?''

''பையன் பிழைத்தால் போதும். தாங்கள் எது கேட்டாலும் தருவேன்.!''

''எது கேட்டாலும் நிச்சயம் தருவீரா?''

''நிச்சயம் தருவேன்! என் உயிரைக் கேட்டாலும் நிச்சயம் தருவேன் சுவாமி!''

''வாக்குத் தவற மாட்டீரே?''

''தவறமாட்டேன்! இதுசத்தியம்சுவாமி!''

''வாக்குத் தவறமாட்டீர்! ஆனால் பிறகு ஏன் வாக்குக் கொடுத்தோம் என்று வருத்தப்படுவீரோ.....?''

"சுவாமி! அடியேனைச் சோதிக்க வேண்டாம். சொன்ன வாக்கை என்னை விற்றேனும் காப்பாற்றுவேன்."

"மெத்த மகிழ்ச்சி. நாளைக் காலையிலே வந்து... பாரும்!" என்று விடை கொடுத்து விட்டுப் பூஜை அறைக்குள் சென்றார் சுவாமிகள்.

கண்ணை இழந்தவனைப்போல் மகனை ஞானகுரு சுவாமிகள் சந்நிதியிலே விட்டு விட்டு வெளியேறினார் வேதமூர்த்தி.

அன்று இரவு முழுதும் கண் உறக்கம் இல்லாமல் கண்ணீருடனே கதறித் துடித்தார் வேதமூர்த்தி. எப்பொழுது பொழுது விடியும் விடியும் என்று வேதனையுடன் எதிர் பார்த்திருந்தார்.

எப்படியோ பொழுது விடிந்தது. ஆனால் தனது வாழ்வு விடியுமா என்ற வினாவோடு ஞானகுரு சுவாமிகள் மடத்தை நோக்கி விரைந்தார்.

வேதமூர்த்தி செல்வதற்கும், ஞானகுரு சுவாமிகள் பூஜை முடித்து வெளியில் வருவதற்கும் சரியாக இருந்தது.

சுவாமிகளைக் கண்டதும் பள்ளம் கண்ட வெள்ளம் போலப் பாய்ந்தோடி, "சுவாமி, என் மகன் பிழைக்கும்படி அநுக்கிரகம் செய்து விட்டீர்களா? தேவா!" என்று அவர் திருவடிகளிலே வீழ்ந்து கண்ணீராலே மலர்ப் பாதங்களைக் கழுவினார்.

"அப்பனே! எழுந்திரு! உன் பையன் பிழைத்து விட்டான்! ஆனால் அவனை உலகிலே இனி உயிரோடு வாழ வைப்பது உம் கையில்தான் இருக்கிறது. அதாவது உமது தியாகத்திலேதான் இருக்கிறது.....!"

"சுவாமி! என் மகன் உயிர் வாழ்வது என் தியாகத்தினாலே இருக்கிறது என்றால்.....? அதன் தத்துவம் எளியவனாகிய எனக்கு விளங்கவில்லை, சுவாமி.....!"

"அப்படியா!" என்று புன்னகை செய்தபடி கூறினார்.

"சிவக்கொழுந்து நல்ல ஜாதக ராசி உடையவன். வருங்காலத்திலே இந்த உலக மக்களைச் சன்மார்க்கர்களாகச் செய்யும் ஞானச் சுடராகவும், கண்கண்ட நடமாடும் தெய்வமாகவும் திகழக்கூடியவன்.

"அதனாலே சிவக்கொழுந்தை உமது மகன் என்ற உரிமையால் அழைத்துப் போய்ப் பந்தபாசம் நிறைந்த இல்லறச் சிறையிலே ஈடுபடுத்த விரும்பாமல், உலகத் துன்பத்தை நீக்கப் பெருந் தொண்டாற்றும், பெரிய மகானாகும் துறவு வாழ்க்கையில் வாழ வழி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் உலகம் சன்மார்க்க நெறியிலே தழைத்தோங்கும்! உம் மகனும் ஞானத் தவச் செல்வராய், நிரஞ்சனியாய்த் திகழ்வான்.

"அதனால் சிவக்கொழுந்து எமது மடத்திலேயே வாழ வழி செய்ய வேண்டும்... அதாவது உலக நன்மைக்காக உமது பையனைத் தியாகம் செய்ய வேண்டும்."

சுவாமிகளின் மொழிகளைக் கேட்ட வேதமூர்த்தி அதிர்ச்சி அடைந்தார். இப்படி ஒரு கேள்வியைக் கேட்பார் என்று அவர் சற்றும் எதிர்பார்க்கவேயில்லை.

ஆயினும், சிவக்கொழுந்தை மடத்துக்கு— துறவியாகத் தியாகம் செய்துவிட மனம் அவ்வளவு எளிதிலே இடம் கொடுக்கவில்லை. அந்தக் குறிப்பால் உணர்ந்த சுவாமிகள் கொஞ்சம் ஞான விளக்கம் புரிந்தார்கள்.

"வேதமூர்த்தி! உமது பையனை ஒரு டாக்டரும் காப்பாற்ற முடியாது என்று கைவிட்ட பிறகு இங்கு நம்மிடம் வந்தீர்! நாமும் அவர்கள் மாதிரியே காப்பாற்ற முடியாதெனக் கூறியிருந்தால்.... சிவக் கொழுந்தின் நிலைமை என்ன ஆகியிருக்கும்? கொஞ்சம் சிந்தித்துப் பாரும்...!" என்று கோடி காட்டினார்.

அதைக் கேட்டதும் சுவாமிகளிடம் வேதமூர்த்திக்கு ஆவேசமான பக்திப்பெருக்கு உண்டாகிவிட்டது.

"சுவாமி! என் மகன் என்றும் நிரஞ்சனியாக — உலகம் வாழ அருளாட்சி புரியும் ஞானத் தவச் செல்வனாக வாழ வேண்டும் என்றே விரும்புகிறேன். அதற்காக நான் என்னை — பிள்ளைமீதுள்ள என் தந்தைப் பாசத்தைத் தியாகம் செய்யத் துணிந்துவிட்டேன். இது உறுதி!"

"வேதமூர்த்தி! சிவக்கொழுந்து இனி உம்முடைய பிள்ளை அல்ல. அவன் ஆண்டவனின் பிள்ளை. அவனை இனி மகன் என்ற பாசத்தோடு பார்க்கக் கூடாது, அழைக்கக் கூடாது. இன்று முதல் சிவக்கொழுந்து இந்த மடத்திலேயே தங்கி ஞான வாழ்வைத் தொடங்கி விடுவான். நீர் எப்பொழுதாவது ஒரிரு சமயங்களிலே மடத்துக்கு வந்து பார்க்கலாம்! ஆனால் மகன் என்ற உரிமையோடோ, முறைமையோடோ பார்க்க வரக் கூடாது.

"இதைச் சற்றும் மறக்கக் கூடாது. நல்ல காரியங்கள் ஒப்புரவு என்பன, தன்னலத்தைத் தியாகம் செய்வதால்தான் உண்டாகின்றன! அதனால் நீரும் உமது பிள்ளைப் பாசத்தைத் தியாகம் செய்யத்தான் வேண்டும். அது உம் கடமை!" என்று கூறி, திருநீறு, குங்குமம் முதலிய தெய்வப் பிரசாதம் வழங்கி விடை கொடுத்து அனுப்பினார் ஞானகுரு சுவாமிகள்!

அன்று சிவக்கொழுந்தைக் கட்டித் தழுவிக் கொண்டு, "மகனே!" என்று அழைத்து மகிழ்ந்தவர்தான். அதன் பிறகு, "மகனே!" என்று அழைத்து மகிழக் கொடுத்து வைக்கவில்லை வேதமூர்த்திக்கு.

சிவக்கொழுந்துக்குத் தந்தையின் நினைவு தோன்றாதபடி வளர்த்து வந்தார் ஞானகுரு சுவாமிகள். சிவக்கொழுந்துக்கு ஞானமார்க்கங்களையும், தத்துவ விளக்கங்களையும் போதித்தார். வேத மந்திரங்களையும் உபதேசித்தார். எனினும், எப்பொழுதாவது ஒரிரு சமயங்களிலே தந்தையின் நினைவு வரத்தான் செய்தது சிவக்கொழுந்துக்கு.

அந்த நினைவே அடியோடு வராமல் தடுக்க ஞான வைராக்கியத்தை ஊட்டி வளர்த்தார்.

துறவின் பெருமைகளையும், அவசியத்தையும் அழுத்தம் திருத்தமாக மனத்தில் பதியும்படி செய்தார்.

வேதமூர்த்தி என்னதான் மகனை மறக்க முயன்றாலும், சில சமயங்களிலே முடியாமல்

தோற்று விடுவார். அம்மாதிரி சமயங்களிலே, சிவக் கொழுந்தைக் காண ஞான குரு சாமிகள் மடத்தை நாடிச் சென்றுவிடுவார். அப்படி வேதமூர்த்தி வருவதை, ஞான குரு சுவாமிகள் விரும்பவில்லை.

பெருமருந்தூரிலேயே மேலும் தங்கி யிருந்தால் பிள்ளையைப் பார்க்க வேதமூர்த்தி அடிக்கடி வருவார் என்று கருதி, இமயமலைச் சாரலுக்குச் சிவக்கொழுந்தை அழைத்துச் சென்று அங்கேயே கொஞ்ச காலம் தங்கி, ஞானத் தவத்தைப் பெறும்படியும் பெருக்கும்படியும் செய்யத் திருவுளம் கொண்டார். அதன்படி ஒருநாள் இரவு திடுமென்று இமாலய மலைக்குச் சிவக்கொழுந்துடனும், மற்றும் சிலருடனும் பயணம் தொடங்கி விட்டார்.

அதன் பிறகு தம் மகனை நேருக்கு நேராகப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கவே இல்லை வேதமூர்த்திக்கு.

சுமார் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு சொந்த ஊரிலே நடந்த கும்பாபிஷேகத் திருநாளில்தான் பார்க்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. ஏற்பட்டும் பயன் என்ன?

இறந்தகால நினைவுகளிலிருந்து நிகழ்கால நினைவுக்கு மீண்டார்!

**வே**தமூர்த்தி மூர்ச்சை தெளிந்து எழுந்த பொழுது பல்லக்குக் கோயிலை நெருங்கிக் கொண்டிருந்தது. அதனால் மறுபடியும் பல்லக்கை நோக்கிப் புறப்பட்டார் தள்ளாத பெரியவரான வேதமூர்த்தி. அவரைச் சிலர் தடுத்து நிறுத்த முற்பட்டனர். அதனால் அவர் எரிமலையாகிக் கோபக் கனலைக் கக்கினார்!

''என் மகன் துறவியானது, இல்லை, துறவியாக ஆக்கியது இந்த உலக மக்களின் துயரங்கள் எல்லாம் தீர்ந்து இன்பம் பெறுவதற்காகவாம்!

ஆனால் பெற்று வளர்த்துப் பெருமையாகக் காத்த தந்தையைப் பேணிக் காக்காமல் பிரிவுத் துயரத்திலே தவிக்கும்படி விட்டு விட்டு, உலகத்துக்கு ஞான இன்பத்தை ஊட்டுவதுதான் உத்தமத் தனயனின் கடமையா?

அவனை இதற்கு முன் கண்டும், கேட்டும் அறியாத எத்தனையோ கோடானு கோடிப் பேர் கிட்டச் சென்றும், நின்றும் முகதரிசனமும், அருள்மொழி உபதேசமும் பெறுகின்றனர். ஆனால் அன்புத் தந்தையாகிய நான் அவன் அருகிலே கூடச் செல்லக் கூடாது, பேசக் கூடாது என்று தடை செய்கிறார்களே என்ன கொடுமை! எவ்வளவு பெரிய பாதகம்!''

அதற்கு மேல் பேச்சு வரவில்லை. கண்ணீர் மழையாகப் பெருகியது.

அப்பொழுது ஒரு துறவி அவருக்கு மிகவும் நயமாக ஆறுதலும் தேறுதலும் ஏற்படும் வண்ணம் அருளுபதேசம் செய்தார்.

''பெரியவரே! நீங்கள் கூறுவதிலே தவறில்லை. பிள்ளைப் பாசம் முற்றும் துறந்த முனிவராலும் துறக்க அரிய ஒன்று. அதனாலே நீங்கள் மகன் பிரிவால் எத்தகைய துயரத்தை அடைந்து வருகிறீர்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா என்ன?

ஆனாலும் ஒன்று....?

உங்கள் மகனை உலகுக்கு மகனாகத் தராமல், உங்களுக்கு மட்டுமே மகனாக வைத்திருந்தால் என்ன நடந்திருக்கும்? உங்கள் மகன் உங்களுடனேயே இருந்திருப்பான். அதனால் உங்கள் மகனின் உதவியும், பயனும் உங்களுக்கு மட்டுமே கிடைத்திருக்கும். உலகத்துக்கு ஒருசிறிதும் கிடைத்திருக்காது.

நீங்கள் ஒருவர் மட்டும் பிள்ளைப் பாசத்தை மறந்து அல்லது மறைத்துக் கொள்வதால் வேதனையும் சோதனையும் அடைய வேண்டியிருக்கிறது — நீங்கள் ஒருவர் மட்டுமே.

அப்படி நீங்கள் ஒருவர் மட்டுமே பிள்ளைப் பாசத்தால் துன்பம் அடைவதனாலே இந்த உலகம் முழுதும் இன்று பேரின்பம் அடைகிறது. ஞான மார்க்கத்திலே செல்கிறது.

''ஒருவர் துன்பம் உலகுக்கு இன்பம்'' என்பதுதானே ஞானத்தின் நிலை!

தன்னலம், மனிதனை வாழும்போதே செத்தவனாக்கி விடுகிறது. பிறர்நலம் மனிதனைச் சாகாமல் சிரஞ்சீவியாக்கிவிடுகிறது.

அதனாலே....?

உங்கள் ஒருவரின் இன்பத்துக்காக உலகமே நரக வேதனை அடைவதை விரும்புகிறீர்களா? அல்லது உங்கள் ஒருவரின் துன்பத்திலே உலகமே ஞான இன்பத்திலே வாழ்வதை விரும்புகிறீர்களா? இவற்றிலே எது தங்களுக்குச் சிறந்ததென்று தோன்றுகிறதோ, அதைச் செய்யுங்கள்'' என்றார்.

அந்த மொழியைக் கேட்டதும், பெரியவரின் நெஞ்சம் நெகிழ்ந்து விட்டது. பேச நா எழவில்லை. அப்பொழுது?....

"உம் மகன் நோயினாலே மாள நேர்ந்திருந்தால் என்ன செய்வீர்?" என்று ஞானகுருஸ்வாமிகள் முன்னொரு நாள் கேட்டது நினைவுக்கு வந்தது.

அவ்வளவுதான்!

அடுத்த நொடியே தம்மை மறந்தார்! தந்தைப் பாசத்தையும் தனயன் பாசத்தையும் சிந்தையிலிருந்து அகற்றிவிட உறுதி பூண்டார்.

**ப**ல்லக்கிலே சென்று கொண்டிருந்த இளந்துறவியைத் திண்ணையிலே நின்றபடியே இரு கரமும் ஒரு கரமாகக் குவித்து வணங்கினார். அப்பொழுது அவர் முகம் குத்து விளக்குப் போல் சுடர் விட்டது.

பெரியவரின் மன மாற்றத்தைக் கண்ட மக்கள் மகிழ்ச்சியால் வாழ்த்தினார்கள்.

ஆனால் யாரோ ஒருவர் மட்டும் பெரியவரின் செயலுக்கு அநுதாபப்பட்டுக் கூறினார்.

'பாவம் பெரியவர்! முத்தடைத்த சிப்பியாய்ச் சிறப்புற்றிருந்தவர் இப்பொழுது முத்துடைத்த சிப்பியாய் ஆகிவிட்டார்.'

ஆனால் பெரியவர் அதைக் கேட்டுத் தளரவில்லை. பதிலுக்கு மனம் மலர்ந்தார்.

"முத்து சிறப்படைய வேண்டுமானால் முத்தினாலாய பயனை மக்கள் அடைய வேண்டுமானால், சிப்பி முத்தைப் பிரிந்துதானே ஆகவேண்டும்? அதுதான் சிப்பியின் கடமை.

"அப்படியானால் ஆறறிவு படைத்த மனிதனாகிய நான் அகில உலகுக்கும் அருளை வாரி வழங்கும் அருள் வள்ளலை நாட்டின் பொதுச் சொத்தாய் வழங்காமல், 'என் மகன்' என்று தன்னலச் சிறையிலே பூட்டி வைப்பது எவ்வளவு சுயநலம்?" என்று நினைத்தார்.

உடனே புத்துணர்ச்சியோடு வேகமாக வீட்டுக்குள்ளே சென்றார். அங்கே இருந்த மகனின் படத்தை ஆசை தீரப் பார்த்து மகிழ்ந்தார். உணர்ச்சி பீறிட்டது. "மகனே!" என்று கூவ வாய் திறந்தார். ஆனால் வாய் மகனே என்று கூறவில்லை. "மகானே!" என்று வாழ்த்தியது.

மகனை மகானாக வழிபட்டு மகிழ்ந்தபடி வெளியே வந்தார்.

# தாமரை அரும்பு

வருபகை அழிக்கத் தாவும்
வேந்தன்கை வேலா? இல்லை
இருளதை விரட்டு தற்கே
எரிகின்ற சுடரா: இறையின்
அருளினைப் பெறுதற் கென்றே
அணங்கினர் குவித்த கையா?
அரும்பு செங்கமலப் பூவின்
அழகினை என்னென் பேனோ?

நீர்நாக அரவந் தானோ?
நிற்கின்ற வாழைப் பூவோ?
சீர்கவிதை பாடத் தூண்டும்
சேயிழைகூர் விழியே தானோ?
ஆர்க்கின்ற கடலுக் குள்ளே
அலைகின்ற சங்கோ? இல்லை
மூர்க்கரை அழிக்கப் பரமன்
முகத்துள்ள நெற்றிக் கண்ணோ?

தாமரை அரும்பு கண்டேன்
தன்கரங் குவித்து என்னைப்
பாமழை பொழியச் சொல்லும்
பாங்கினைக் கண்டேன்; நீயும்
தூமணம் பரப்பு நானும்
தீங்கவி படைப்பே னென்ன
போமையா எனது காதல்
பொற்கரன் வரட்டு மென்றாள்!

கருணாமணி

அப்பாசாமி அந்த ஊருக்கு வந்தாலும் வந்தான்; தெருப் பிள்ளைகளுக்கு அது ஒரு பெரும் தொல்லையாகப் போய்விட்டது. தினம் தினம் அப்பா அம்மாவிடத்தில் பாட்டுக் கேட்க வேண்டி வந்தால் அது யாருக்குத் தான் பிடிக்கும்?

காரணம், அப்பாசாமி கலகலப்பான சுபாவம் படைத்தவன். இது அயலார் வீடு, இது உற்றார் வீடு என்ற பாகுபாடின்றி அடுக்குள் வரை சென்று நல்லபடியாக நாலு வார்த்தைகள் பேசி யாருடைய மனத்திலும் இடம் பொருத்திக் கொள்ளும் கலை அவனுக்குக் கைவந்த ஒன்று. அது மட்டுமா? கைக் காரியத்தைப் பிடுங்கிச் செய்யும் பரோபகாரியாகவும் அவன் திகழ்ந்தான். எனவே, இந்தத் தொல்லை தாய்மார்களுக்கு இன்பத் தொல்லை; பிள்ளைமார்களுக்கோ துன்பத் தொல்லை!




"நீயும் இருக்கிறயே! அப்பாசாமி சமர்த்து உனக்கு வருமா? என் என்கிறதுக்கு மூன்றும் என்னெயா நிற்கிறான்! கடைக்குப் போய் அவன் சாமான் வாங்கிக் கொண்டு வருகிற அழகே தனி! ஒன்றுக்கும் உதவாக்கரையாக இருக்கும் நீயும் அணிப்பிள்ளை தென்னம் பிள்ளையும் ஒண்ணுதான்!" என்று ஊரார் தங்கள் குழந்தைகளையே மட்டம் தட்டிப் பேசுமளவுக்கு அப்பாசாமி உயர்ந்து விளங்கினான்.

இதில் சுயநலம் தலைகாட்டுவதாகத் தோன்றுகிறதோ? தங்கள் பிள்ளைகளை வேலை வாங்காமல், 'அயல்வீட்டு நெய்'யாக அவனைப் பயன்படுத்திக் கொள்வதாகத் தோன்றுகிறதோ? இப்படி ஐயப்பாடு தோன்றினாலும் அதற்கு அப்பாசாமி பொறுப்பில்லை. அவன் அவர்களை அப்படியெல்லாம் தன்னலக்காரர்களெனக் கணக்குப் போட்டு மண்டையை உடைத்துக் கொள்ளவில்லை. அவர்கள் தன்னிடம் காட்டும் அன்பினாலேயே அப்படிச் செய்கிறார்கள் என்று பூரணமாக நம்பி அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாவதையே குறிக்கோளாகக் கொண்டான்.

பலன், யாருமே கடைப் பற்று வரவு நோட்டை அவனிடம் தாராளமாகத் தூக்கிக் கொடுத்து நம்பிக்கையோடு தங்களுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் வாங்கி வரச் சொன்னார்கள்!

இப்படி இரண்டொரு மாதங்கள் அந்த ஊருக்கே அருமந்தப் பிள்ளையாக இருந்த அப்பாசாமி, "மாமி! எங்க அப்பா உடனே வரச் சொல்லிக் காகிதம் போட்டிருக்கிறார்! கொள்ளுப் பாட்டி அகத்தில் உட்கார்ந்து கொண்டு வெறும் தின்னைச் சோற்றுத் தடிராமனாக இருக்கக் கூடாது என்றும், உடனே புறப்பட்டு வந்தால் எங்கேயாவது கொண்டு வேலைக்கு வைப்பதாகவும் எழுதியிருக்கிறார்!" என்று ஒரு நாள் குண்டு ஒன்றைத் தூக்கிப் போட்டான்.

அந்த மாமிக்கு ஏக வருத்தம். தனக்கு ஒரு பெண் இருந்து அதைப் புக்ககத்துக்கு அனுப்புவதாக இருந்தால்கூட அவ்வளவு வருத்தப்பட்டிருக்க மாட்டாள். அவள் மட்டுமென்ன, ஊரே கண்ணீர் வடித்தது. ஒரு கை ஒடிந்து விட்டாற் போல; இறக்கை வெட்டுண்டாற்போல.

பஸ் ஏறிக் கும்பகோணம் போன அப்பாசாமி பெரிய துணிக் கடை ஒன்றினுள் நுழைந்தான். வெளியே வரும்போது புது மனிதனாகவே காட்சியளித்தான்.

பிரியாவிடை கொடுத்த கிராமத்தார்கள் அவனுக்கு அன்பளிப்பாக அவ்வளவு தொகை கொடுத்திருப்பார்களோ என்று கணக்குப் போட்டால் அது தப்புக் கணக்காக முடியும். அப்படியானால் நேர்க்கணக்கு என்னவென்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

"ஏண்டி! சந்தனக் கட்டை கிலோ பதினெட்டு ரூபாய்க்கு விற்கிறது. எதற்கடி ஒன்றரைக் கிலோ சந்தனக் கட்டை வாங்கினே?"

மாமாவின் இந்தக் கேள்விக்கு மாமி மலங்க மலங்க விழிக்கிறாள்.

"நான் சந்தனக் கட்டை வாங்கவே சொல்லலியே!"

"அப்போ.....?"

"என்ன? இந்த வீட்டிலே நீங்களும் நானும்தானே? என்னதான் கரைத்தாலும் இரண்டு சோப்புக்கு மேல் ஆகுமா? ஒன்றரை டஜன் வாங்கியிருக்கேளே, போன மாசம்?"

"என்ன? ஒன்றரை டஜனா? யார் சொன்னது? மூன்று கட்டிதானே வாங்கச் சொன்னேன்!"

"அப்போ?"

இப்படியாக ஊர் முழுதும், 'அப்போ, அப்போ?' என்கிறது; அப்பாசாமியை நினைக்கிறது. அப்பாசாமியா இப்படிச் செய்திருப்பான்? இப்படி அவநம்பிக்கைப்பட்டு என்ன பிரயோஜனம்? இப்படிச் செய்யாவிட்டால், அவனிடம் அவ்வளவு துணிமணிகள் வாங்கப் பணமேது?

சந்தனக் கட்டைகளும், சோப்புக் கட்டிகளும் இன்னோரன்ன சாமான்களும் கடைப் பற்று வரவுக் கணக்கில் உயர்ந்த விலைக்கு ஏறி, எந்த மகாராஜன் கையில் இறக்க விலைக்குப் போயிற்றோ, அது அப்பாசாமிக்குத்தான் வெளிச்சம்!

— குறும்பன்

# எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

கின்னத்தைக் கையில் தேக்கியபடி உமா தூரப் பார்வையுடன் உட்கார்ந்திருந்தாள். தெரு முனைப் பூங்காவில் வானொலியின் இசை அடங்கிவிட்டது. அடுத்துச் செய்திக் குரல் கேட்கும். மணி ஒன்பது.

ஒரு பெருமூச்சு அவளிடமிருந்து கழன்று மறைந்தது. மழை நீர் வாய்க்காலில் மிதந்து செல்லும் இலைகளைப்போல் நினைவில் நீந்தும் எண்ணத் துணுக்குகள். கால் கட்டை விரல் படியின் மேல் யோசனையாக வட்டமிட்டது.

வாசு வருவதற்கு இன்னும் ஒரு மணி நேரம் ஆகும். வந்ததும் நேரே மாடிக்குப் போய்விடுவான். "சாப்பிட்டு விட்டீர்களா?" என்று அவள் கேட்டால்தான் பதில் கிடைக்கும். அதன் பிறகு அவ்வளவு நேரம் காத்திருந்து ஆறிப்போன சமையலோடு, தன் நினைவுகளே தனக்குத் துணையாகச் சிறிது நேரம் துழாவிக் கொண்டிருப்பாள்.

முதலில் கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. வரவரப் பழகிப் போய்விட்டது. அவனுடைய பேச்சில், பார்வையில், பழக்கத்தில் உணர்ச்சிகளின் சூடு இராது. இப்போதெல்லாம் அவள் எதிர்பார்ப்பதும் இல்லை. ஒரு வருஷத்துப் பயிற்சி அது.

எங்கேயோ ஓர் ஆள் ஏதோ சமிக்ஞையாகக் கூவினான். அந்தக் குரலின் வெண்கல நாதம் விக்கி எழுந்து, ஆகாய வெளியில் படிப்படியாக விறுவிறுத்துக் கொண்டே ஓங்கி, பின் மெதுவாய் மறைந்தது. அவள் உள்ளே போக எழுந்திருந்தாள்.

மேஜை விளக்கை மட்டும் போட்டுவிட்டு அறை விளக்கை அணைத்துவிட்டாள். வாசல் கதவைத் தாழ்ப்பாள் போட்டாயிற்று.

மன எல்லைகளில் எண்ணங்கள் குறுகுலவதைப் போல, சிறு வட்டமாக, ஆனால் திண்மையாகப் பரவிய ஒளி வெள்ளம். வாரப் பத்திரிகையின் பக்கங்களை விரல் புரட்டிற்று.

வரிசை வரிசையாக மணமானவர்களின் படம். ஒரு கணம் அவள் பார்வை, தெரிந்த முகம் எதற்கேனும், அந்த வரிசையில் அலைந்து நின்றது. யாரும் இல்லை. ஆனாலும் மனத்துள் மதுரமாகக் கமழும் கற்பனைகள். அந்தப் படங்கள் ஒவ்வொன்றிலும், ஒவ்வொரு வித உடையிலும் தன்னையும் வாசுவையும் நிறுத்திப் பார்த்துக் கொண்டாள். இமை அருகில் நீர் உறுத்திக் கொண்டு நின்றது.

அவர்களுடைய திருமணத்துக்குப் பிறகு எடுத்த நிழற்படம் எங்கேயோ உள் அறையில், கண்காணாத இடத்தில் இருக்கிறது.

அவள் அப்பா வாங்கிக் குவித்திருந்த அற்புதமான அழகுடைய பல புடவைகள் இருந்தன. அவள் அவற்றில் ஒன்றை எடுத்து அணிந்து கொள்ளும்போது வாசு நிமிர்ந்து கூடப் பார்ப்பதில்லை. அது என்ன நிறம் என்றாவது அவன் பார்வையில் பட்டிருக்குமோ? இராது. அவளுடைய நிறம் என்ன என்பது அவனுக்குத் தெரியும். அப்புறம் புடவையின் நிறத்தில் அவனுக்கு என்ன அக்கறை? அவளுடைய அழகின் அளவை அவன் மதிப்பிட்டாயிற்று. அப்புறம் அலங்காரத்தை மதிப்பிடுவதால் என்ன லாபம்?

அவள் மட்டும் அப்புறம் தனியே உட்கார்ந்து, சொல்ல முடியாமல், சொல்லவும் தெரியாமல், ஆனால் தனக்குள்ளேயே புழுங்கும் ஏமாற்றத்தில் அமிழ்ந்து போயிருப்பாள். காற்றில்லாத வெம்மையாக, சில்லென்கல்லும் குளிராக அந்த வேதனை அவளை அலைக்கும்.

அன்று வாசுவைப் பார்ப்பதற்காக அவனுடன் வேலை பார்க்கும் நண்பர் யாரோ வந்திருந்தார். அவன் அவரை அழைத்துக் கொண்டு நேரே முன் பக்கத்து அறைக்குப் போய்விட்டான். அங்கிருந்து அறையைத் துடைத்துக் கொண்டிருந்த வேலை செய்யும் பெண் மூலம் காப்பி கொண்டுவரச் சொல்லிச் செய்தி மட்டும் வந்தது.

ஒரு 'டிரே'யில் தம்ளர்களை வைத்து மூடி எடுத்துக் கொண்டு அவளே போனாள். உள்ளே குலுங்கும் காப்பியைப் போல் அவள் மனத்திலும் ஓர் எதிர்பார்ப்பு ததும்பி நின்றது. வாசுவை நிமிர்ந்து பார்த்தாள். மேஜையின் மேல் அதை வைக்கச் சொல்லிப் பார்வை மட்டும் அடையாளம் காட்டிற்று; அவ்வளவு தான். அவன் நல்ல நிமிரவேயில்லை. அவன் அவளைப் பற்றி அறிமுகமாக ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.

அவள் மௌனமாகத் திரும்பிவிட்டாள்.

**அவள் கால்கள் அவளைச் சமையலறைக்குத்** தாங்கிச் சென்று அடுப்பெதிரே அமர்த்தி விட்டன. எவ்வளவு நேரமோ அடுப்பிலிருந்து நீல நிற அனற் கொழுந்து பரவி அவளைப் பார்த்துச் சிரிப்பது போல, பாத்திரத்தின் மூதுகில் இடித்து விளையாடிய வண்ணம் இருந்தது.

அவள் எழுந்து வந்து பார்த்தபோது அறைக் கதவு இலேசாக மூடியிருந்தது. அந்த நண்பருடன் வாசு வெளியே போய்விட்டான். அவளுக்குத் தகவல் கூட இல்லை. அறைக் கதவுக்கு வெளியே தட்டில் காலியான தம்ளர்கள். அவற்றின் அடியில் இன்னும் கரையாமல் தேங்கி நின்றுவிட்ட சர்க்கரையைப் போல், அவள் மனத்தில் இன்னும் கலந்து மறைந்துவிட முடியாமல் தவிக்கும் ஒரு வேதனை.

இரவில் அவன் தூங்கிய பிறகு, அவள் எழுந்து உட்கார்ந்து, அவன் முகத்தையே பார்த்த வண்ணம் இருப்பாள். வானத்து மேக வெளியில் மறையும் பகலவன் ஒளியில் குழம்பும் வர்ண வெள்ளம் போல், அவள் மனத்திலும் ஒரு பெருமிதம் தலைகாட்டும். வாசுவின் அழகிய முகத்தை, அந்தத் தரிசனத்தில் ஒன்றி இழைவது போல், அவள் பார்வை ஆர்வத்தோடு பருகி நிற்கும்.

உண்மைதான்; அந்த அழகுக்கு அவள் எப்படி ஈடு கொடுக்க முடியும்? தெருவில் இறங்கி அவர்கள் ஒன்றாகப் போக நேர்ந்தாலும் பார்ப்பவர்களுக்கு அவள்மீது பச்சாத்தாபம் நிறைந்த ஒரு பார்வைதானே விழ முடியும்?

ஆனாலும் அவளைப் புற அழகினால் மட்டும் மதிப்பிட விரும்பாத ஒரு கணவன் அவளுக்குக் கிடைத்திருக்கக் கூடும். அவளுடைய மற்ற குண அழகுகளை ரசிக்கக் கூடிய ஒரு கணவனை அவள் அடைந்திருக்கலாம். கைநழுவிப் போன அந்தச் சந்தர்ப்பத்துக்காக அவள் இப்போது ஏங்கவில்லை. கிடைத்தும் அடைய முடியாமல் விலகி நின்றுவிட்ட ஓர் ஏக்கம்தான் அவளை ஆட்டி வைத்தது.

சில பூக்கள் பகலில் பூக்கின்றன. விருப்பமாய் அவற்றைப் பறித்துத் தலையில் வைத்துக்கொண்டு, நான்கு பேர்கள் பார்த்து அனுபவிக்க நின்று மகிழ முடிகிறது. சில பூக்கள் இரவில்தான் பூக்கின்றன. அவற்றின் அழகும் இரவின் கருமையிலேயே இரகசியமாக இருந்துவிட வேண்டியதுதான். அவற்றின் மணத்தை மட்டுமே உணர முடிகிறது. ஆனால் விழித்துக் காத்திருந்து அந்த மணத்தை அனுபவிக்க நினைப்பவர் எவ்வளவு பேர்?

வாசற் கதவில் விரல் கணுவால் தட்டும் சத்தம் கேட்டது. எழுந்து கதவைத் திறந்தாள். வாசு உள்ளே வந்து அறை விளக்கைப் போட்டான். அறையில் பரவிய ஒளியைப் போல, அவர் திரும்பி விட்டதை அறிந்ததும், அவளையறியாமல் மனத்தில் ஓர் ஆறுதல் நிலவியது.

அவன் சாப்பிட்டாயிற்று. இதழ்களில் தாம்பூலச் சிவப்பு. அவள் கேட்கவில்லை. அவனும் பதில் சொல்லவில்லை. அவன் **பூட்ஸ் காலடிச் சத்தம் மேலே போய் மறைந்த பிறகு வாசற் கதவை மூடிக் கொண்டு உள்ளே போனாள். சாப்பிட வேண்டி இருக்க** வில்லை. ஆறின சோற்றைப்போல் எண்ணங்களும் விறைத்தன.

இரண்டு நாட்களுக்கு முன்பு மேஜை மேல் வைத்திருந்த அழைப்பைப் பார்த்த நினைவு வந்தது. அவனுடைய அலுவலக மேல் அதிகாரி மாற்றலாகிப் போகிறார். அன்று அதற்காக வழியனுப்பு விருந்து நடந்தது. அழைப்பு இருவருக்கும்தான். மேல் விலாச எழுத்துக்களைப் படிக்கும்போது அவள் மனம் புலம்பி அடங்கிற்று. அவன் அவளை அழைத்துக் கொண்டு போக மாட்டான். அவளை அறிமுகம் செய்து வைக்க வேண்டிய நிலையில் தன்னை வைத்துக் கொள்ள மாட்டான். அவளுக்குத் தெரியும்.

சாப்பிடாமல் பாத்திரங்களை மூடி, அறையைக் கழுவிவிட்டு விளக்கை அணைத்தாள். மனத்திலும் ஓர் இருள் மருட்டிக் கொண்டு வந்தது.

வாசு கண்களை மூடியபடி படுத்திருந்தான். இன்னும் தூங்கவில்லை. உமா அறைக்குள் வந்தது, கூஜாவில் அசையும் தம்ளரின் ஒலியில், அவள் கால் மெட்டியின் சத்தத்தில், அவனுக்குத் தெரிந்தது. ஆனாலும் கண்களைத் திறக்கவில்லை. தூங்குவது போல் அசையாமல் படுத்திருந்தான். இன்னும் ஐந்து நிமிஷங்கள். அப்புறம் விளக்கு அணைந்துவிடும். இந்தப் பாசாங்கு தேவையில்லை.

விளக்கு அணைந்து விட்டது. அவன் கண்ணைத் திறக்கவில்லை. இமையின் திரையில், விருந்தில் கண்ட காட்சி வண்ணமாக விரிந்தது. அவனோடு உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார் விடைபெறும் மிஸ்டர் கங்குலி. அவருடன் வந்திருந்த அவர் மனைவியும் நடுநடுவில் பேச்சில் கலந்துகொண்டாள். பணிவுடன் அவன் பதில் கூறினாலும் அவள் பக்கம் திரும்பும்போதே அந்த அழகில் அவன் கண்கள் கூசிற்று. அந்தப் பரிமளிப்பினாலோ என்னவோ, அவள் பேச்சில், பாவனைகளில், விவரிக்க முடியாத ஒரு தனி மெருகு தோன்றிற்று.

எழுந்து போகும்போது அவள் அவனிடம் கூறினாள்: ''உங்கள் மனைவியை அழைத்துக் கொண்டு நாங்கள் ஊருக்குப் போகு முன் ஒரு முறை வாருங்கள்!''

அவன் பதில் சொல்லவில்லை. மனத்துள் ஓர் ஏமாற்றம் நெளிந்து புரண்டது. அவனுக்கு அந்த அதிருஷ்டம் இல்லையே!

அவன் கல்லூரிப் படிப்பு சரியாச நிலைக்கு முன்பே அவன் தந்தை காலமாகி விட்டார். அப்புறம் அவன் படிப்பை எடுத்துக்கொண்டதே சுந்தரம்தான். அவனுடைய எதிர்காலத்தை அவரிடம் அவன் ஒப்படைத்து விட்டான். அவர்தான் அவனை இன்று இந்த நிலைக்கு உயர்த்தியவர். அவனால் அதை மறுக்க முடியாது.

செய் நன்றியை ஏன் ஒரு கடனாக ஆக்கி விடுகிறார்கள்? அந்த மென்மையான உணர்ச்சிக்கு இப்படி ஓர் எண்ணைக் கமையின் கனம் ஏன்? அவனிடம் அவர் என்ன எதிர்பார்த்திருந்தார் என்பது அவனுக்கு முதலில் தெரியவில்லை. **ஆனால் ஆறு மாதங்களுக்குள்**




# ஸ்ரீ விசாலம் சிட் பண்ட் லிமிடெட்

ஸ்தாபிதம் : 6 - 1 - 1947

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் : திருநெல்வேலி - 6 (போன் : 274)

மத்திய அலுவலகம் : 618, உஸ்மான் ரோடு, தி. நகர், மதராஸ்-17
(போன் : 442916)

**31 - 3 - 1967 அன்று அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 500,000**

**சீட்டில் ஈடுபடுத்திய தொகை : 230 லட்சம் - மொத்த ஆஸ்திகள் : 123 லட்சம்**

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனிகள் டிபார்ட்மெண்ட், 29-10.66ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBC-I/ED (s). பாரா 2 (i) (f)ன் லைப் கிளாஸ் (x)ன்படி காரண்டி செய்த லோன் வாங்கப்படுகின்றன.

| தவணை | வட்டி விகிதம் ரூ. 300-லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000க்கு மேல் |
|---|---|---|
| **ஒரு வருடம்** | **8½%** | **9%** |
| **இரண்டு வருடம்** | **9%** | **9½%** |

### தொழில் விபரம்

தினசரி, மாதம் மும்முறை, மாதம் ஒரு முறை உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல், ரூ. 10,000 வரை மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 26 ஆபீஸ்களில் நடத்தப்படுகின்றன.

### கம்பெனி நிர்வாகம்

மானேஜிங் டைரக்டர் :
ஸ்ரீ A. R. ராமஸ்வாமி

டைரக்டர்கள் :
ஸ்ரீ M. A. M. கோவிந்தன் செட்டியார்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி

மத்திய அலுவலக மானேஜர் :
ஸ்ரீ K. A. ராம், பி. ஏ., பி. எல்.

### கடந்த மூன்று வருடங்களின் ஆதாயமும், டிவிடெண்டு விவரமும் :

| வருடம் | வரி கொடுப்பதற்கு முன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்டு விகிதம் |
|---|---|---|---|
| 1964 - 65 | 41825 - 20 | 14295 - 70 | 12% |
| 1965 - 66 | 61908 - 72 | 25170 - 72 | 13% |
| 1966 - 67 | 79686 - 41 | 27686 - 41 | 16% |

### பொறுப்புகள் : 31-3-1967

| | | |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. | 1,02,966 |
| ரிசர்வ் நிதி | ரூ. | 31,458 |
| பிக்ஸட் டிபாஸிட்டுகள் | ரூ. | 7,80,364 |
| ஷேர் ஹோல்டர்ஸ் டிபாஸிட்டுகள் : | ரூ. | 1,00,500 |
| காரண்டீட் லோன்ஸ் | ரூ. | 1,69,275 |
| டெம்பொரரி லோன்ஸ் | ரூ. | 70,156 |
| சீட்டு, இதர பொறுப்பு வகைகள் | ரூ. | 1,10,83,428 |
| மொத்தம் : | ரூ. | 1,23,38,147 |

**ஒவ்வொரு மாதமும் M குரூப் சீட்டுகள் ரூ. 25,000 ஆரம்பிக்கப்படுகின்றன, மாதம் ரூ. 1,250 வீதம் 20 தவணைகள்.**

ஏலங்கள் வழக்கம்போல் எங்கள் **திருச்சி** கிளையில் நடைபெறும்.

தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ் ஷீட்டுகள் விரும்புவோர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அனுமதித்த தேதி
27 - 12 - 1967

A. R. ராமஸ்வாமி,
மானேஜிங் டைரக்டர்.

Paramount

மேற் படிப்புக்கு இங்கிலாந்துக்கு அவனை அனுப்ப முன்வந்தபோது, அவனுக்கு எல்லாம் தெரிந்து போயிற்று.

போகு முன் அவன் திருமணத்தை முடித்துக்கொண்டுதான் அனுப்ப வேண்டும் என்று சொல்லி விட்டார் சுந்தரம். அதுவரையில் அவன் உமாவைத் தலைநிமிர்ந்து பார்த்ததில்லை. வாழ்க்கையில் இப்படி ஒரு சந்தர்ப்பத்துக்கு அவன் தன்னைத் தயார் செய்து கொள்ளவும் இல்லை.

உயர்ந்த படிப்பு, நல்ல எதிர்காலம் இவை ஒருபுறம். சிறு வயதிலிருந்து வளர்த்து வந்த கனவுகள் மற்றொரு புறம். ஏதாவது ஒன்றுக்குத்தான் அவன் ஆசைப்பட முடியும். அவனுக்கு முதல் அறிமுகமாய் உமாவை அவன் முன் நிறுத்தியபோது, அவன் உள்ள எழுச்சியில் தொண்டையை அடைத்தது. அவனைச் சுற்றி ஒரு கனவுலகம் இடிந்து கொண்டிருந்தது. மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டான்.

அவனுடைய புத்திசாலித்தனத்தை எல்லோரும் பாராட்டினார்கள்.

திடுக்கென்று விழித்துக் கொண்டான். கனவு கலைந்த விழிப்பா? அல்லது குவிந்த நினைவுகளிலிருந்து விடுதலையா? பக்கத்தில் படுக்கை காலியாக இருந்தது. அறையில் ஆழ்ந்த இருளை மெல்லெனத் துடைக்கும் நீலநிற விடி விளக்கு. இலேசான ஊதா நிற ஒளியில் பார்க்கக் கண் பழகச் சிறிது நேரம் ஆயிற்று.

கதவு திறந்திருந்தது. வெளியே நிலா முற்றம். முன்னிலாக் காலம். மறைந்து கொண்டிருந்த நிலவொளியில் குறை வெளிச்சத்தில் அந்தத் திறந்த மாடி மெருகு அழிந்தாற்போலத் தெரிந்தது. உமா கைப்பிடிச் சுவர் ஓரம் நின்றிருந்தாள். தயங்கியபடி நிற்கும் தோற்றத்தில் மனத்தின் பரிதவிப்புத் தெரிந்தது. அவன் கதவருகே ஒரு கணம் தான் நின்றான். பிறகு திரும்ப வந்து படுத்துக் கொண்டு விட்டான். மனத்தில் ஓர் இம்சை நிறைந்து.

அவளுடைய தவிப்பை ஏன் அவனால் உணர முடியவில்லை? அவனுக்குத் தெரியும். அவளுடைய உழைப்பிலே, பணிவிடையிலே ஒன்றிலும் ஒட்டாத, உணர்ச்சியின் சூடே இல்லாத தன்மைதான் தெரிந்தது. அதை அடைவதில் அவனுக்கு ஒரு ருசியும் இல்லை. அவன் உணர்ச்சிகளைப் போலவே அவளுடையவைற்றிலும் ஒரு மேக மூட்டம். சந்தோஷமாய், கைகொட்டி, கலகலவென்று வாய்திறந்து பல் தெரியச் சிரித்து ஒருநாள்?...

உமா திரும்பி வந்து படுத்துக் கொண்டு விட்டாள். அவன் முகம் திரும்பவில்லை. இருவருக்கும் மனம் விழித்துக் கொண்டிருக்கிறது. கண் இமைகளைத் திறக்கத்தான் வலிமை இல்லை. இருவரும் அவரவர் எண்ணங்களை மனத்தில் தொகுத்தபடி, படுத்திருந்தனர். அந்தச் சிந்தனையின் முறுக்கைக் கலைப்பது போல் சில்லென்ற காற்று படமெடுத்து முகத்தில் மோதிற்று.

**அ**வன் அன்று வீடு திரும்பியபோது அவனுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. உமாவின் அத்தையின் கணவர் வந்திருந்தார்.



''பார்வதி! குட் நியூஸ்! எக்ஸ்பிரஸிலே என் அம்மா வரல்லே! அதனாலே நீ தப்பலி. ஈரம் என்று படுத்துப் புரள வேண்டாம்; எழுந்திரு!''

''எக்ஸ்பிரஸிலே வரலேன்னு, அடுத்தாப்பிலே பாஸஞ்சரிலே வந்து நிப்பாளே! அதுக்குள்ளே அவசரப்பட்டுண்டு வந்துட்டேளாக்கும்! அல்ப சந்தோஷின்னு நீங்கதான்!''

---

அவன் கேள்விப்பட்டிருக்கிறான். அவருக்கு வடக்கே எங்கேயோ வேலை. அபூர்வமாகத் தமிழ் நாட்டு மண்ணை மிதிப்பார். மிதித்த சுருக்கோடு கால் பதியாமல் திரும்பிப் போய் விடுவார். அவன் திருமணத்தின் போதும்கூட அவர் வரவில்லை.

எதிர்பாராமல் அவரை அப்படிச் சந்தித்ததும் கூட ஒரு திகைப்பாகத்தான் இருந்தது. அவனை அறியாமல் மனம் களித்தது; முகம் அதைக் காட்டாவிடினும் கூட. அவரிடம் சற்றுப் பேசிவிட்டு வெளியே போய்விட்டான். உமாவின் உறவினர் என்ற நினைவில் விளைந்த கசப்பா அது? அவ்வளவு தூரம் நினைவு கறுத்துப்போக என்ன நடந்து விட்டது?

அவர் என்ன நினைப்பாரோ என்ற அக்கறை இல்லை அவனுக்கு. அவர் வருகையும் கூட வேண்டா ஒன்றை நினைவுறுத்தியது போலத்தான் இருந்தது; ஆறிவரும் நுட்பமான காயத்தில் யாரோ இடித்து விட்டதைப் போல.

இரவு சாப்பிடும்போதும் அவன் சரியாகப் பேசவில்லை. அவர் ரேடியோவின் அருகில் வந்து உட்கார்ந்து, வெற்றிலை பாக்கை எடுத்தவாறு செய்திகள் கேட்டுக் கொண்டிருந்தார். அவன் படுக்கப் போய்விட்டான். தூக்கம் வராமல், கலகலவென்று பேசவும் பிடிக்காமல் அவன் புரண்டு கொண்டிருந்த போது, தோளை லேசாய்த் தொடும் உணர்ச்சி அவனை எழுப்பிற்று. உமா நின்று கொண்டிருந்தாள். ஏதோ சொல்லத் தவிக்கும் முக பாவம். அவன் பார்வை மட்டும் ஏறி இறங்கிற்று.

''உங்களிடம் ஒன்று சொல்லலாமா?''

''உம்.''

''நமக்குள்ளே எவ்வளவோ இருந்து விட்டுப் போகட்டும். பிறர் வரும்போது

மட்டும் — என்னிடம் அல்ல — அவர்களிடம் கொஞ்சம் மலர்ச்சியோடு இருங்களேன்.''

அவன் குரல் கெஞ்சிற்று. முகம் பரிதாபமாக விழுந்தது. அவள் ஒரு நிமிஷம் அங்கேயே அவன் பதிலுக்குக் காத்து நின்றாள். அவன் பேசவில்லை. அவள் கண்ணைத் துடைத்துக்கொண்டு உள்ளே போய்விட்டாள்.

அவன் எழுந்து உட்கார்ந்து கொண்டான். அவனால் தூங்க முடியவில்லை. மனத்தில் விதைகளாய் விழித்துக் கொண்டு நின்ற ஞாபகங்கள். அவனை அழுக்கிக் கொண்டிருந்த உணர்ச்சி மேலெழுந்து வரப் பார்க்கும் முயற்சி. ஏதோ யோசனையாக வெளியே எழுந்து வந்தான். அவர் வெளி முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்தார்.

''நீங்கள் இன்னும் தூங்கவில்லையா?''

அவன் குரலின் கனிவைக் கேட்டதும் அவர் முகம் ஒரு சிரிப்புடன் திரும்பிற்று.

**ம**றுநாள் மாலை அவர் கிளம்பி விட்டார். அவன் காரியாலயத்திலிருந்து சற்று முன்பாகவே திரும்பிவிட்டு, அவரைக் காரில் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டு போனான். புறப்படும்போது அவர் உமாவைத் திரும்பிப் பார்த்து, ''நீயும் ஸ்டேஷனுக்கு வருவது தானே?'' என்று கேட்டார்.

அவள் அதை எதிர்பார்க்கவில்லையோ என்னவோ! 'சுருக்'கென்ற பார்வை அவள் பார்க்கும் முன் தாழ்ந்தது. ''பரவாயில்லை. எனக்கு வேலை இருக்கிறது.''

கார் போய்க் கொண்டிருந்தது. அவனுடைய வேலையைப் பற்றி விசாரித்துக் கொண்டே வந்தவர், சட்டென்று நிறுத்தினார். அவருடைய குரல் அடங்கிற்று.

''வாசு, உன்னைப் பார்க்கும்போதும், பேசும்போதும் என் மனத்தில் உன்னிடம் மறைந்து போன என் மகனையே மீண்டும் பார்ப்பது போல் ஓர் உணர்ச்சிதான் ஏற்படுகிறது..''

அவன் முகம் திரும்பினான். ஏக்கம் நிறைந்த ஒரு பெருமூச்சு அவன் முகத்தில் அனல் எழுப்பிற்று.

''எஸ். உனக்குத் தெரிந்திருக்குமோ என்னவோ? சுந்தரம் உன்னை மனத்தில் தன் மருமகனாக நிச்சயம் செய்து கொள்வதற்கு முன், அந்த இடத்தில் அவன்தான் இருந்தான். எனக்குத் தெரியும்; அவன் யாரிடமும் சொன்னதில்லையானாலும்கூட. பெற்றோர்கள் சம்மதித்தால் உமாவைத்தான் மணந்து கொள்ள வேண்டும் என்ற ஒரு தீவிரமான ஆசை அவனுக்கு.

''எனக்குக் கூட அவ்வளவு தூரம் தோன்றியதில்லை. ஆனால் அப்புறம்தான் உணர்ந்து கொண்டேன். நான் மகனை மட்டும் இழக்கவில்லை. உமாவைப் போல் ஒரு பெண்ணை வீட்டு மருமகளாக அடையும் பாக்கியத்தையும் இழந்து விட்டேன் என்று—''

அவர் குரல் கம்மிற்று. கைக்குட்டையை எடுத்து நெற்றி வியர்வையைத் துடைப்பது போல் இமைகளையும் ஒற்றிக் கொண்டார்.

''வருத்தப்படாதீர்கள் ஸார்!''

''எனக்கு ஒரு வருத்தமும் இல்லை. உமா ஒரு உயர்ந்த மனப்பான்மை கொண்ட நல்ல கணவனையே அடைந்திருக்கிறாள். இந்தக் காலத்தில் வெளி அழகைக் கண்டு மயங்கும் வாலிபர்கள்தான் அதிகம். உன்னைப் போல அவளுடைய குண அழகுகளை உணரும் வாலிபர்கள் எவ்வளவு பேர்? அவளுடைய சாமர்த்தியம், அறிவு, பண்பு, இனிய சுபாவம், பேச்சின் பரிமளிப்பு, ஒவ்வொன்றையும் பார்க்கும்போது நீ அதை எவ்வளவு தூரம் பாராட்டிப் போற்றிப் பாதுகாக்கிறாய் என்று என்னால் தெரிந்து கொள்ள முடிகிறது. உமாவை அடைய நீ அதிருஷ்டசாலி என்றால், உன்னைக் கணவனாக அடைந்திருக்கும் அவளும் பாக்கியசாலிதான்!''

சட்டென்று அவர் முகம் ஆறுதல் கண்டது. அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார். சென்டிரல் ஸ்டேஷனின் வர்ண விளக்குகள் பார்வையில் நீந்துவன போல் தோன்றியது அவனுக்கு.

பிளாட்பாரத்துக்குப் போனது, சாமான்களை ஏற்றியது, அவரை உட்கார வைத்து வழியனுப்பியது, பேசிய மற்ற பேச்சுக்கள் எதுவும் அவன் மனத்தில் பதியவில்லை. மனம் மீண்டும் மீண்டும் வரும்போது கேட்டதையே எண்ணி முனகிக் கொண்டிருந்தது. உமாவை மனைவியாக அடைந்த அவன் அதிருஷ்டசாலி. அவளுடைய உயர்ந்த பண்புகளை உணர்ந்து ரசிக்கும் பெருந்தன்மை அவனுக்கு இருக்கிறது. அவனை அடைந்த உமா உண்மையில் பாக்கியசாலிதான்.

அவனும் நினைத்ததுண்டு அப்படி; தன்னை அடையும் பேறு அவளுக்குக் கிடைத்ததே என்று. ஆனால் அது தன் காலில் தானே பூட்டிப் போட்டுக் கொள்ளும் உணர்ச்சி. இப்போது அவன் அநுபவிப்பது வேறு. மனத்தில் அவன் முன் தன்னை நிறுத்தி விசாரித்துக்கொண்டிருந்தான் இப்போது.

அவளைப் பற்றி அவன் எப்போதும் யாரிடமும் சொல்லவில்லை. அவளுடைய உதாசீனத்தை அவன் உணராமல் இல்லை. வாழ்க்கையில் அவளைப் பொக்கிஷமாகக் கருதிப் போற்றி இருக்கக் கூடிய ஒருவனை அவள் கணவனாக அடைந்திருக்க முடியும். ஆனால் அது நேராமற் போய்விட்டது. ஆனாலும் அதை அவள் வெளியிட்டுக் கொண்டதில்லை; அவன் அவளை அலட்சியப்படுத்திய வேளையிலும்கூட. அந்த நினைப்புக்கு அவள் மதிப்புக் கொடுக்கவில்லை. மதிப்பு இல்லாவிடினும் அவன் காட்டும் உணர்ச்சியே மேலென்று மதித்துக் கொண்டிருக்கிறாள்; பூஜித்துக் கொண்டிருக்கிறாள்.

அவனும் கற்றுக் கொள்வான் அந்த மேலான பண்பை. அவளிடமே கேட்டுக் கொள்வான் அதைப் பற்றி. மெல்ல மெல்ல அந்த மனமாற்றத்தின் ரசவாதம் அவர்கள் வாழ்க்கையைப் பொன்மயமாக்கி விடும்; இன்பம் புகுத்திவிடும்; இனிமை மெருகிட்டு விடும்.

கார் நிற்கும் சத்தம் கேட்டதும் உமா கதவைத் திறந்தாள். அவளிடம் பேச்சை எப்படித் தொடங்கலாம் என்று மனத்துள் திட்டமிட்டபடியே மெதுவாய் வாசு கீழே இறங்கினான்.

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா • சித்திரம் : ரமணி







## முன்னுரை

சில வருஷங்களுக்குமுன் 'பவழத்தீவு' என்ற சித்திரக் கதை 'கல்கி'யில் வெளியாயிற்று. அதன் கதாநாயகர்களான காட்டுச் சிறுவன் கந்தனையும், நாடாளும் இளவரசன் ஆனந்தனையும் நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். மங்களதுர்க்கத்து இளவரசனான ஆனந்தன் தன் பெற்றோர்களைச் சிறை மீட்டுச் செல்லப் பவழத் தீவுக்கு வருகிறான். வழியில் கந்தன் என்ற காட்டுச் சிறுவனின் நட்புக் கிடைக்கிறது. அவன் உதவியோடு கொடியவர்களான சூலபாணி, தூமகேது ஆகியோரின் சூழ்ச்சிகளினின்று தப்பித் தந்தையுடன் தாயகம் திரும்புகிறான். கந்தன் நாட்டுக்கு வர விருப்பமின்றிக் காட்டிலேயே தங்கி விடுகிறான். இதுதான் பவழத் தீவின் கதை. அதன் தொடர்ச்சிதான் இனி நீங்கள் படிக்கப் போகும் ஓநாய்க் கோட்டையின் ஓட்டம்.

ஆனந்தனுக்கு இப்போது இருபத்தைந்து வயது. மங்கள துர்க்கத்தின் மன்னன். பவழத் தீவிலே மாண்டு போன துன்மந்திரி தூமகேதுவின் மகன் வஜ்ரகீர்த்தி. தன் தந்தையைக் கொன்ற ஆனந்தனைப் பழி தீர்க்கத் தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறான். எங்கே மங்கள துர்க்கத்திலா? அதுதான் இல்லை. கந்தர்வபுரியிலே. அது ஒரு பேரரசு. சிற்றரசான மங்கள துர்க்கம் அதன் ஆளுகைக்கு உட்பட்ட நாடு. கந்தர்வபுரியின் மாமன்னராக அப்போது விளங்கியவர் சிம்மவர்மன். ரொம்பக் கோழை. சிற்றரசன் ஆனந்தனின் வீரத்திலும் வல்லமையிலும் எரிச்சல் கொண்டவர். அதை ஊதி வளர்ப்பவனாக வஜ்ரகீர்த்தி அவர் அருகிலேயே இருந்தான். கந்தர்வபுரியையே கைப்பற்றத் திட்டமிட்டிருக்கிறான் ஆனந்தன் என்றெல்லாம் மாமன்னரின் மனத்திலே கிலியையும், பொறாமையையும் வளர்த்தி வந்தான் கீர்த்தி. ஆகவே, ஆனந்தனை ஒழிக்கக் கீர்த்தியின் வார்த்தைக்குச் செவிசாய்க்கலானார் கந்தர்வபுரியின் மாமன்னர் சிம்மவர்மர்.

ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை கந்தர்வபுரியிலே நடக்கும் களியாட்டங்களுக்கும், வீர விளையாட்டுகளுக்கும் அதன் ஆளுகைக்குட்பட்ட சிற்றரசர்களெல்லாம் மாநகரில் வந்து கூடுவது வழக்கம். அதன்படி ஆனந்தன், தன் அழகு மனைவி ரூபவதியுடன் பேரரசின் விருந்தாளியாக வந்திருந்தான். இந்தத் தருணத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளக் கீர்த்தி சூழ்ச்சிகள் புரியலானான் - மன்னரின் ஆதரவோடுதான்.

மறு நாள் விழா. முதல் நாள், தன்னை ஒரு பெரிய அபாயம் சூழ்ந்து வருகிறது என்பதை அறிவதற்கான வாய்ப்பு ஏதுமில்லை ஆனந்தனுக்கு. ஆனந்தன் தலைநகருக்கு வெளியே சென்று உலாவிவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான். இரவு வெகுநேரமாகி விட்டது.... அப்போது...


இரவு வெகு நேரமாகி விட்டது. ரூபமதி கவலைப் படுவாள்...


பிடி... விடாதே..!
என்ன இது..? ஏதோ சதி போலிருக்கிறது.


யார் நீங்கள்? என்னைத் தாக்க வேண்டிய காரணம்?
உன்னோடு பேசிக் — கொண்டிருக்க எங்களை அனுப்பவில்லை.


அப்படியா...? இதோ என் வாள் உங்களைப் பேச வைக்கும்.
ஆ... வ்...வ்–


அதே சமயம் மற்றொரு வாள் வீரன்..
ஆ...ஹா..!
உன்னைக் கொல்வதற்கு உத்தரவு வரவில்லை. உயிரோடு கொண்டு வருமாறுதான் கட்டளை.


சற்று நேரத்துக்குப் பின் — பாதாளக் கிடங்கில்....
நான் எங்கிருக்கிறேன்...?
அவனுக்கு நினைவு திரும்புகிறது... ம்.. சீக்கிரம்.. முகமூடியை மாட்டு..







கந்தர்வ புரியின் களியாட்ட விழாவிலே முக்கியமான நிகழ்ச்சி. இந்தாண்டு நால் மாதப் பாதாளச் சிறையிலே இருக்கும் துரோகிகள், உளவாளிகளை இரும்புக் கவச முகமூடியணிவித்துப் புதிய மைதானத்திலே நிறுத்தி வாட் போர், மற்போரில் புகழ் பெற்ற மல்லர்களோடு சண்டையிட விடுவார்கள். சண்டையிலே முகமூடி அணிந்தவர் வெற்றி பெற்றால் விடுதலை. தோற்றால் களத்திலேயே பலியாக வேண்டும். இவ் விளையாட்டிலே துரோகிக்கு வெற்றி கிட்ட வாய்ப்பே இருக்காது........







ஆனந்தனிடம் வாள் கொடுக்கப்பட்டது. மக்கள் வெள்ளம், வாயடைப்ப, விழிகளை இமைக்க மறந்து பார்த்துக் கொண்டிருந்தது..






ஆனந்தா! உன் அகந்தை அழியப்போகிறது. பெரிய வீரன் என்று எவ்வளவு இறுமாப்படா உனக்கு? உன் வலிமை கண்டு இனி நான் நடுங்க வேண்டியதில்லை.


வாழ்வு அல்லது சாவு என்ற நிலையிலான போராட்டம் இது.
அதோ துரோகி! அவனுக்கு வாள் எதற்கு? கொல்லுங்கள் அவனை...


இருவருக்கு மூவர். எத்தனை திறமைசாலியானாலும் எவ்வளவு நேரம்தான் சமாளிக்க முடியும்?


ஆனந்தனின் கை வாள் அவன் பிடியிலிருந்து தெறித்து விழும்படி — எதிரி தன் வாளை வீசுகிறான்.


துரோகியே! உன் வாழ்வு முடியப் போகிறது. இஷ்ட தெய்வத்தை வேண்டிக்-கொள்.


பாய்ந்து வந்த வீரனுடைய தாக்குதலினின்று லாகவமாக நகர்ந்து கொள்கிறான் ஆனந்தன். வாள்முனை முகமூடியை இறுக்கி இருக்கும் தோல் பட்டையைத் துண்டித்துக் கொண்டு சுவரில் பாய்கிறது...

தொடரும்...

## அமுல் அளிக்கும் புதுமை!

# அமுல்ஸ்ப்ரே

## புரதச் சத்துச் செறிந்த குழந்தை உணவு

### உடல் வளர்ச்சிக்கான புரதத்தை உங்கள் குழந்தைக்கு இதைவிட <u>அதிகமாகத்</u> தரும் பாலுணவு வேறில்லை!



**வளர்ச்சிக்குப் புரதம்:**

நாளுமடங்கு எடை ஏறும்படி, உங்கள் குழந்தை அதிவேகமாக வளருகிறது முதல் இரு ஆண்டுகளிலே. அதற்குப் பெருமளவிலும் ஆதாரம் புரத சத்து. கொழுகொழு வென்று உங்கள் மகவு திடமுடன் வளரத் தேவையான உடல் வளர்ச்சிப் புரதம் யாவுமே அடங்கியது அமுல்ஸ்ப்ரே!



**வைட்டமின்களும் வேறு பல நலன்களும் அடங்கியது!**

அவசியமான எல்லா வைட்டமின்களும் அடங்கப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, தவிர பாஸ்பரஸ், இரும்புத்தாதுக்கள் ஆகிய மூலாதாரப் பொருள்களும் உகந்த விகிதங்களிலே நிரவப்பெற்றது. நியாஸின், சோடியம் அயோடைடு, ஃபாலிக அமிலம் ஆகியவையும் இயல்பான வடிவில் இடம் பெற்றுள்ளன.




அமுல்ஸ்ப்ரே 500 கிராம் டப்பாக்களில் வருகிறது. (1 பவுண்டுக்கு 46 கிராம் அதிகம்).



**ஜீரணிக்க எளிது!**

அமுல் ஸ்ப்ரேயின் ஸ்ப்ரே—ட்ரை செய்முறை, ஒவ்வொரு சொட்டுப் பாலையும் சின்னஞ்சிறு நுட்பத் திவலைகளாக சிதர்த்து விடுகிறது (தாய்ப் பாலைப் போலவே). எனவே ஜீரணிக்க எளிதாகி விடுகிறது. அதன் சுவை மிகவும் பிடித்தமாகி, எடுத்த எடுப்பிலேயே ஏற்றுக் கொள்கிறது குழந்தை.



**நவீன ஸ்ப்ரே-ட்ரை செய்முறை**

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கையாளப்படும் ஸ்ப்ரே-ட்ரை முறை மூலம் ஆக்கம் பெறுகிறது அமுல்ஸ்ப்ரே. மிகக் குறைந்த சூட்டு நிலைகளிலே பாலைப் பவுடராக மாற்றவும் இம் மேலான முறை, பாலின் புரத வளமைக்கும் மேன்மைக்கும் உயரிய பாதுகாப்புத் தருகிறது.



**அற்புதமாகக் கரைந்திடும்!**

விழுது குழைக்கத் தேவையில்லை. முழு அளவு வெந்நீரிலே அமுல்ஸ்ப்ரே சேர்த்து, நன்கு கலக்கினால் போதும், பவுடர் முழுதும் கரைந்திடும். சிப்புள் துகள்களே அடைத்துக் கொள்ளாது.

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட். கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேட்டிவ் மில்க் ப்ரட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

ASP/AS-2/67

நுண்ணிய அணுவிலிருந்து
தோன்றும் ஒரு
மாபெரும் சக்தியைத்
தன்னால் கட்டுப்படுத்த
முடியும் என்று
விஞ்ஞானி அறியத்
தொடங்கி









“அவனன்றி ஓர் அணுவும் அசையாது” என்பது பழமொழி. ஒரு பொருளின் கண்ணுக்குத் தெரியாத மிகச் சிறிய பாகம் ‘அணு’ என்று கூறப்படுவதை யாவரும் அறிந்திருக்கக் கூடும். ஆனால் இந்த அணுவுக்குள் அடங்கிக் கிடக்கும் சக்தியோ அளவற்றது.

அணு சக்தி என்று கூறும் பொழுது 1945ம் ஆண்டு ஜப்பான் தேசத்தின் ஹிரோஷிமா, நாகசாகி என்ற இரு நகரங்களைக் கணப்பொழுதில் அழித்து நிர்மூலமாக்கிய அணுகுண்டே நம் ஞாபகத்துக்கு வருகிறது. இந்த இரு நகரங்களிலிருந்த ஜனங்களில் ஒன்றரை லட்சம் பேர்களின் உயிரைக் குடித்து, மற்றும் பல ஆயிரக் கணக்கானவர்களைக் குருடாக்கி, ஊனமாக்கி, 60,000க்கு மேற்பட்ட கட்டடங்களைத் தரை மட்டமாக்கி, 6000க்கு மேற்பட்ட கட்டடங்களைப் பழுதுபார்க்க முடியாதபடி சேதம் விளைவித்து உலக மக்களைக் கலங்கச் செய்த அந்த

---

☐ அணுகுண்டின் ஒரு சோதனை வெடிப்பு.

☐ இருகுப் புழு என்ற ஈ இனங்களும், கால்நடையில் ஏற்படுத்திய புண்களும்.

☐ அயான் ‘மைக்ராஸ்கோப்’ மூலம் எடுக்கப்பட்ட அணுவின் படம்.

இன்று இருபத்தைந்து
ஆண்டுகள் ஆகின்றன.
அணு
விஞ்ஞானி தோற்றுவிக்கும்
அற்புதங்கள் தான்
எத்தனை எத்தனை !







அணுகுண்டைக் கண்டுபிடித்தவனும் விஞ்ஞானிதான். அந்த அணுசக்தியை இன்று தன் விஞ்ஞான அறிவினால் அடக்கித் தான் விரும்பும் ஆக்கச் செயல்களில் அதைப் பயன்படுத்தி வருபவனும் விஞ்ஞானிதான்.

இவ்வாறு விஞ்ஞானி நுண்ணிய அணுவிலிருந்து தோன்றும் ஒரு மாபெரும் சக்தியைத் தன்னால் கட்டுப் படுத்த முடியும் என்று அறியத் தொடங்கி இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகள் பூர்த்தியாகின்றன.

ஒரு பயங்கர சக்தியைத் தமக்குள் அடக்கி வைத்திருக்கும் அணுக்கள் ஒவ்வொன்றுக்கும் தனக்கென்று ஓர் அமைப்பு உண்டு. ஒவ்வோர் அணுவின் நடுவிலும் ஒரு 'கேந்திரகம்' (Nucleus) இருக்கிறது. இது ''ப்ரோடான்'' (Proton) ''நியூட்ரான்'' (Neutron) என்ற இரண்டினால் ஆனது. ப்ரோடான் என்பது நேர் மின்சாரப் பாய்ச்சலுள்ள (Positively charged) பாகம். நியூட்ரான் என்பது மின்சாரப் பாய்ச்சல் எதுவும் இல்லாத பாகம். இக்கேந்திரத்தைச் சுற்றிலும் வெளியில் எலெக்ட்ரான் (Electrons) என்ற எதிர் மின்சாரப் பாய்ச்சல் உள்ள மின் அணுக்கள் சுற்றிக் கொண்டிருக்கும். மின்னணுக்களின் எதிர் மின்சாரப் பாய்ச்சலும் ப்ரோடான்களின் நேர் மின்சாரப் பாய்ச்சலும் ஒன்றுக்கொன்று சேர்ந்து அணுக்களை மின்சார நிலைப்படி நடு நிலையுள்ளதாகச் (Neutral) செய்கின்றன.

இத்தகைய அமைப்பைப் பெற்றிருக்கும் பல அணுக்கள் ஒன்றுக்கொன்று சேர்ந்து ஒரு பொருளாக நமக்குக் காட்சியளிக்கிறது. ஒவ்வொரு பொருளிலும் இந்த அணுக்களின் எண்ணிக்கை வித்தியாசப்படும். எல்லாப் பொருள்களிலும் அதன் அணுக்களிலுள்ள ப்ரோடான்களும் நியூட்ரான்களும் அளவிட முடியாத ஒரு பெரிய சக்தியால் ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு அவற்றைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டிருக்கும் சக்தி, அந்த அணுக்கள் தகர்த்தெறியப்படும் பொழுது கதிரியக்கங்களாகவும் (Radiation) வெப்பமாகவும் வெளி வருகிறது. அணுவுக்குள் அடங்கியுள்ள இந்தச் சக்தி இவ்வாறு வெப்பமாக அதிவேகத்தில் வெளிவரும் பொழுது அளவிட முடியாத பலத்த வெடிச் சத்தத்துடனும், கண்ணைப் பறிக்கும் ஒளியுடனும் வெளிவருகிறது. இதுவே அணுகுண்டு இயங்கும் சித்தாந்தமாகும்.

இத்தகைய பயங்கரமான அணுசக்தியின் வீரியத்தை மனிதனின்

---

☐ டில்லி விவசாயிகள் சார்பில் டாக்டர் சுவாமிநாதனுக்குப் பரிசு.

☐ பூனா ஆராய்ச்சிக் கூடத்திலுள்ள ''காமா தோட்டம்.''

☐ (இடது) முளை வந்த வெங்காயம். (வலது) காமா கதிர்கள் பாய்ச்சப்பட்ட வெங்காயம்-பல மாதங்களுக்குப்பின்.



SONORA - 64

SHARBATI
SONORA - 64

- சொனோரா - 64, ஷர்பதி சொனோரா 64 கோதுமை ரகங்கள்.

ஹெர்மன் ஜோசப் முல்லர்.

- (இடது) முளை வந்த உருளைக் கிழங்கு. (வலது) 'காமா' கதிர்கள் பாய்ச்சப்பட்ட உருளைக் கிழங்கு, பல மாதங்களுக்குப் பின்.



அழிவுக்காக அல்லாமல் அவனுடைய வாழ்வுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்று எண்ணிய விஞ்ஞானிகள் தம் கவனத்தை அணு சக்தியின் ஆக்க வேலை ஆராய்ச்சியின் மீது திருப்பினர்.

கடந்த பத்தொன்பது ஆண்டுகளில் நடந்த ஆராய்ச்சிகளின் காரணமாகப் பாரதமும் அணு சக்தி ஆராய்ச்சியில் முன்னேறி மற்ற உலக நாடுகளுடன் தலை தூக்கி நிற்கிறது.

அணுசக்தியின் ஆக்கச் செயல்கள் விவசாயம், மருத்துவம், மின்சார உற்பத்தி மற்றும் பல துறைகளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

விவசாயத் துறையில் அணு ஆராய்ச்சியைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்குமுன், எல்லா உயிர்ப் பொருள்களின் நுண்ணிய பாகங்களையும் பற்றிக் கூற வேண்டியது அவசியம். ஒவ்வோர் உயிரின் அமைப்பும் ''செல்'' (Cell) என்ற நுண்ணிய பிரிவுகளாலானவை. 'செல்' லிற்குள் சைடோப்ளாஸம் (Cytoplasm) என்று கூறப்படும் உயிர்ப் பொருளும் அதன் மத்தியில் நியூக்ளியஸ் (Nucleus) என்ற உயிரணுவும் இருக்கின்றன. உயிரணுவில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள நிறக் கோல்கள் (Chromosomes) இருக்கின்றன. ஒவ்வொரு நிறக்கோலும் பல ஆயிரக்கணக்கான ஜீன் (Genes) என்ற மேலும் நுண்ணிய பாரம்பரியத் துணுக்குகளால் ஆனது.

சூரியனிலிருந்து வரும் காஸ்மிக் கதிர்கள் சில சமயம் வாயு மண்டலத்தைத் தாண்டிக் கீழே வருவதுண்டு. இத்தகைய கதிர்கள் உயிரினங்களின் மீது பாயும் பொழுது சில சமயம் அந்த உயிரினங்களின் ஜீன்களில் ஒரு சிறு மாற்றத்தை ஏற்படுத்தக்கூடும். இது பல கோடியில் ஒன்றாக ஏற்படலாம். இதன் காரணமாக மாறுபட்ட ஜீன்களைப் பெற்றுள்ள உயிரினத்தின் சந்ததியின் ஏதாவதோர் அம்சத்தில் ஓர் அசாதாரண மாறுதல் ஏற்படக்கூடும். அவற்றிலிருந்து தோன்றும் ஒவ்வொரு சந்ததியும் மாறுபட்ட, தன் முன்னோரைப் போன்ற குணத்தையும் உடலமைப்பையும் பெற்றிருக்கும்.

இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு எக்ஸ்ரே கதிரியக்கத்தின் உதவியால் இது போன்ற சடிதி மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்று கண்டுபிடித்த டாக்டர் ஹெர்மன் ஜோசப் முல்லர் என்ற அமெரிக்க விஞ்ஞானிக்கு ஸ்வீடன் தேசத்து விஞ்ஞான அகாடமி 1946ம் ஆண்டு நோபல் பரிசை அளித்தது.



இவ்வாறு செயற்கை முறையில் அணு கதிரியக்கத்தைக் கொண்டு (**Atomic Radiation**) பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த பயிர்களிலும் செடி கொடிகளிலும் 'சடிதி மாற்றத்தை' ஏற்படுத்தி அவற்றிலிருந்து பெரும் பயனை மக்கள் பெறச் செய்வதற்கு அணுசக்தி வகை செய்கிறது. சடிதி மாற்றத்தின் காரணமாக, பயிர்களின் உயர்ந்த ரகங்களைத் தோற்றுவித்து அவற்றின் விளைச்சலை அதிகப்படுத்தி உற்பத்தியைப் பெருக்க முடியும். அந்தப் பயிர்களின் விளைச்சலை ஊக்கி, குறைந்த காலத்தில் அவற்றைக் கதிர்விடச் செய்ய முடியும்.

இத்தகைய ஆராய்ச்சியில் பாபா அணு ஆராய்ச்சி நிலையமும், பூனா விவசாய ஆராய்ச்சிக் கல்லூரியும் பெரும் வெற்றி கண்டிருக்கின்றன.

கதிரியக்க முறையை உபயோகித்துப் பாபா ஆராய்ச்சி நிலைய விஞ்ஞானிகள் நெற்பயிரில் ஒரு 'சடிதி மாற்றத்தை' ஏற்படுத்தி **TR–1** என்ற ஓர் உயர்ந்த ரக நெல்லை உருவாக்கி உள்ளனர். சென்னை, மைசூர், மகாராஷ்டிரம் முதலிய மாநிலங்களில் மொத்தம் 26 இடங்களில் சோதனைக்காகப் பயிர் செய்யப்பட்டு ஆராய்ச்சியில் ஈடுபடுத்தப்பட்ட இந்த ரக நெல் வழக்கமான அளவு நீரையும், உரத்தையுமே எடுத்துக் கொண்டு, தன் பெற்றோர் ரகத்தைவிட 21.5 சதவிகிதம் அதிகமான மகசூலைக் கொடுப்பதாகக் கூறப்படுகிறது.

தவிர பருமனான விதையுள்ள கணிசமான அளவு மகசூலை அதிகமாகத் தரும் வேர்க்கடலை ரகங்களும் பாபா ஆராய்ச்சிக் கூடத்திலிருந்து தோன்றியுள்ளன.

பூனா ஆராய்ச்சிக் கல்லூரியைச் சேர்ந்த விஞ்ஞானிகள் கண்டறிந்த பலன்கள் பலவாகும். அவ்வாராய்ச்சிக் கூடத்திலிருந்து கதிரியக்க முறையால் ஏற்படுத்திய சடிதி மாற்றத்தின் மூலம் கூரிய கதிர்முனையில்லாத **NP–797** என்ற கோதுமை ரகத்திலிருந்து கதிர்முனையுள்ள **NP – 836** என்ற ரகக் கோதுமை தோன்றியுள்ளது. இதன் விளைச்சலிலிருந்து மகசூல் பத்து சதவிகிதம் அதிகமாகக் கிடைக்கும் என்றும், கூரிய கதிர்முனைகளின் காரணமாகப் பறவைகளால் அப்பயிரை நாசம் செய்ய முடிவதில்லை என்றும் கூறப்படுகிறது.

ஸொனேரா – 64 என்ற உயரம் குறைந்த, அதிக விளைச்சல் தரக்கூடிய மெக்ஸிகன் கோதுமை சாதாரண பாரத கோதுமை ரகங்களைவிட விளைச்சலில் இரு மடங்கு பலனைத் தருகிறது. ஆனால் இந்தக் கோதுமையின் நிறம் சிவப்பாக இருக்கிறது. அதிலிருந்து தயாரிக்கப்படும் சப்பாத்திகள் ருசியாக இருப்பதில்லை. இந்த ரகத்திலிருந்து பூனா ஆராய்ச்சிக் கூடத்து டைரக்டர் டாக்டர் எம். எஸ். சுவாமிநாதனும் அவரது துணை விஞ்ஞானி டாக்டர் வர்கீஸ் என்பவரும், கதிரியக்க முறையைக் கையாண்டு சடிதி மாற்றத்தின் மூலம் ஷர்பதி ஸொனேரா–64 என்ற புது ரகக் கோதுமையை உருவாக்கியுள்ளனர்.

இப்புது ரக கோதுமை அம்பர் நிறமுள்ளது. தவிர அதிலுள்ள புரதச்சத்து இருபத்தைந்து சதவிகிதம் அதிகமாக உள்ளது. சாதாரண ரகங்களில் ஒரு சதவிகிதத்துக்கும் குறைவாக இருக்கும் லைஸின் (**Lysine**) என்ற உயர்ந்த ரக அமினோ ஆஸிட் (**Amino Acid**) ஷர்பதி ஸொனேரா ரகத்தில் 4 சதவிகிதமாக அதிகரித்துள்ளது. இது பாலில் உள்ள சத்துக்குச் சமமாகும்.

இவற்றைத் தவிர, மிளகாயில் இருக்கும் பீடா கரோடினாய்டு (**Beta Corotenoid**) என்ற பொருள் அதற்குச் சிவப்பு நிறத்தைக் கொடுக்கிறது. நம் நாட்டு மிளகாயைப் பெரும் அளவு இறக்குமதி செய்யும் மேல்நாட்டினர் அதிலிருந்து சிவப்பு நிறத்தைத் தரும் பொருளைப் பிரித்தெடுத்துவிட்டு, எஞ்சிய மிளகாயின் பாகத்திலிருந்து மருத்துவத்தில் தேவைப்படும் 'காப்ஸிஸின்' (**Capsicine**) என்ற வஸ்துவை உபயோகப்படுத்துகின்றனர். ஆனால் சிவப்பு நிறத்தைக் கொடுக்கும் வஸ்துவை மிளகாயிலிருந்து பிரித்தெடுப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. இதை அறிந்த பூனா விஞ்ஞானிகள் சிவப்பு நிறத்தைத் தரும் பொருள் இல்லாத ஒரு புதுரக மிளகாயைக் கதிரியக்க முறையில் சடிதி மாற்றத்தின் மூலம் உருவாக்கியுள்ளனர். இதன் காரணமாக மிளகாய் அதிக அளவு மேல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படலாம். கணிசமான அளவு அதிக அந்நியச் செலாவணியைப் பெற இது வகை செய்யக்கூடும்.

இதைத் தவிர அதிக விளைச்சலைத் தரும் பருத்தி வகைகளும், பூச்சி பாதிக்காத பருத்தி ரகங்களும், உமியில்லாத பார்லி வகையொன்றும், அணுக் கதிரியக்கத்தின் மூலம் சடிதி மாற்றத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன.

இவ்வாறு சடிதி மாற்றத்தை ஏற்படுத்த அணுக் கதிர் இயக்கம் தேவை. இதற்கென்று கதிரியக்கங்களைச் செடிகள் மீது பாய்ச்சும் ''காமா'' தோட்டம் என்ற ஓர் ஆராய்ச்சித் தோட்டம் பூனா ஆராய்ச்சிக் கல்லூரியில் உள்ளது. மூன்று ஏக்கர் பரப்புள்ள வட்ட வடிவமுள்ள இத் தோட்டத்தைச் சுற்றிப் பன்னிரண்டு அடி உயரமும் மூன்று அடி அகலமும் உள்ள ஒரு சுவர் உண்டு. காரணம் அபாயகரமான ''காமா'' கதிர்களை வெளிவராமல் பாதுகாப்பதுதான். இந்த மூன்று அடி அகல சுவர் முன்னும் பின்னும் ஓர் அடி அகலத்துக்குக் காங்கிரீட்டினால் கட்டப்பட்டு அதன் இடைவெளியில் மண் நிரப்பப்பட்டிருக்கிறது. மண்ணையும் காங்கிரீட்டையும் ''காமா'' கதிர்கள் ஊடுருவி வெளிவருவதில்லை. இத்தோட்டத்தின் நடுவில் உயரமான ஒரு முக்காலி உண்டு. அதன் மூலம் பூமிக்கடியில் ஈயத்தாலான ஒரு பாத்திரத்துக்குள் கோபால்ட்–60 என்ற கோபால்ட் என்ற மூலப் பொருளின் ''காமா'' கதிர்களைப் பாய்ச்சும் கதிர் இயக்க ஐஸோடோப் (**Radio Active Isotope**) வைக்கப்பட்டுள்ளது.

ஐஸோடோப் என்பது என்ன? கி. பி. 1907ம் ஆண்டில் விஞ்ஞானிகள், ஒரு மூலப்பொருளின் ஒரேவிதமாகத் தோன்றும் இரு மாதிரிகள், தம் இரசாயன குணங்களில் ஒத்திருந்தும், பௌதிக அமைப்பின் அடிப்படையில் வேறுபட்டிருக்கக்கூடும் என அறிந்தனர். இத்தகைய அமைப்புக்கு ஐஸோடோப்புகள் என்று அவர்கள் பெயரிட்டனர்.



"ஏன்
இவ்வளவு
கஷ்டப் படறீங்க
அங்கேதான்
பெரிசா
சுரங்கப்பாதை
கட்டி
வைச்சிருக்காங்களே?"

சில ஐஸோடோப்புகள் நிலையானவை. சில ஐஸோடோப்புகள் கதிரியக்கங்களுடையவை. காரணம் அதன் அணுவிலுள்ள புரோடான்களும் நியூட்ரான்களும் நிலையில்லாதிருப்பதுதான். அணு உலைகளில் சாதாரண கதிரியக்கமில்லாத ஐஸோடோப்புகளையிட்டு அவற்றின்மீது அதிவேகத்தில் நியூட்ரான்களை மோதச் செய்து அவற்றின் ரேடியோ ஐஸோடோப்புகள் தயாரிக்கப்படுகின்றன. நியூட்ரான்களால் மோதப்பட்ட அந்த ஐஸோடோப்புகளின் அணுக்களின் மீது அதிகமான அளவு நியூட்ரான்கள் படிந்து ஏற்கனவே அந்த அணுவிலுள்ள நியூட்ரான்களை, நிலையற்றதாகச் செய்து விடுகின்றன. இந்த நிலையற்ற கேந்திரத்திலிருந்து நிலைக்கு வர முயலும் நியூட்ரான்கள் அதிகமாகச் சேர்ந்த நியூட்ரான்களை ரேடியோ கதிரியக்கங்களாக (Radio Active Rays) வெளியிடுகின்றன. இக்கதிரியக்கங்கள் சுயத்தையும், ஆழமான நீரையும், மண்ணையும் பாதிப்பதில்லை. இத்தகைய ரேடியோ ஐஸோடோப்புகளைப் பாரதத்தில் டிராம்பே ஆராய்ச்சிக் கூடத்தில் ஐஸோடோப் பகுதி தயாரித்து அளிக்கிறது. யுரேனியம்—235, யுரேனியம்—238 என்ற ஐஸோடோப்புகள் இயற்கையாகவே உண்டாகின்றன.

"காமா" தோட்டத்திலுள்ள மூக்காலியைச் சுற்றிலும் பூச்செடிகள், பழச் செடிகள் மற்றும் பயிர் வகைகள் வெவ்வேறு தூரத்தில் வைக்கப்பட்டுள்ளன. இந்தத் தோட்டத்துக்கு வெளியே அமைக்கப்பட்டுள்ள விசையின் மூலம் கோபால்ட்—60 என்ற ரேடியோ ஐஸோடோப் தரை மட்டத்துக்கு மேல் தூக்கப்படுகிறது. இவ்வாறு தூக்கப்படும் உயரமும், அச்சமயம் அப்பாத்திரத்துக்கும் செடிகளுக்கும் இடையேயுள்ள தூரமும், அச்செடி வகைகளுக்குத் தேவையான கதிரியக்கத்தின் அளவைப் பொறுத்திருந்து, விஞ்ஞானிகளால் கணக்கிடப்படுகிறது. இவ்வாறு அணுக் கதிர் இயக்கங்கள் செடிகளின் மீது பாய்ச்சப்படுகின்றன.

விவசாயத் துறைக்குப் பெரும் பணியைச் செய்து உதவும் பூஸா ஆராய்ச்சிக் கூடத்தை நிர்வகிக்கும் பொறுப்பைத் தமிழகத்தைச் சேர்ந்த டாக்டர் எம். எஸ். சுவாமிநாதன் அவர்கள் ஏற்று நடத்தி வருகிறார். பூஸா ஸ்தாபனத்தின் பரப்பு 1250 ஏக்கர் என்பதிலிருந்து அதன் அளவை ஊகிக்க முடியும்.

நாற்பத்திரண்டு வயதான டாக்டர் சுவாமிநாதன் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் டாக்டர் பட்டம் பெற்று அமெரிக்காவிலுள்ள விஸ்கான்ஸின் சர்வகலாசாலையில் ஆராய்ச்சியாளராகப் பணியாற்றியவர். அவரது தலைமையில் நடந்து வரும் School of Radiation Genetics சர்வதேச சிறப்பு வாய்ந்தது. எத்தனையோ பல விருதுகளுடன் நடப்பு ஆண்டில் பாரத அரசாங்கத்தின் பத்மஸ்ரீ விருதையும் பெற்று நிற்கும் டாக்டர் சுவாமிநாதன் வெளியிட்டுள்ள விவசாய ஆராய்ச்சிப் பிரசுரங்கள் இருநூறுக்கு மேற்பட்டவை. விவசாயத் துறையின் அபிவிருத்திக்குக் காரணமாக இருந்துவரும் டாக்டர் சுவாமிநாதனிடம் தில்லி வட்டாரத்தைச் சேர்ந்த விவசாயிகள் வைத்துள்ள அன்புக்கும் மரியாதைக்கும் அளவில்லை. அதற்குக் காணிக்கையாக அவர்கள் சார்பில் சமீபத்தில் பாரதப் பிரதமர் திருமதி இந்திராகாந்தி ஒரு பதக்கத்தை திரு சுவாமிநாதனுக்கு அளித்துக் கௌரவித்தார்.

அழுகக்கூடிய பழ வகைகளையும், காய்கறிகளையும், மீன்களையும் சீக்கிரத்தில் முளைவரும் உருளைக்கிழங்கு, வெங்காயம் முதலியவற்றையும் அணுக் கதிர் இயக்க வீச்சுக்கு உள்ளாக்கி அவற்றைப் பல வாரங்கள் கெடாமல் பாதுகாக்கலாம் என்று கூறப்படுகிறது. இவ்வாறு கதிரியக்கம் பாய்ச்சப்பட்ட வாழைப் பழங்கள் நூறு நாட்கள் வரை கெடுவதில்லை. அதே சமயம் அதன் ருசியும், வாசனையும் கெடுவதுமில்லை. இத்தகைய சேமிப்புக்காகக் கதிரியக்கத்தைப் பாய்ச்சும் முறை பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் கடந்த பத்து ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் டாக்டர் சுவாமிநாதன் நடத்தியுள்ள ஆராய்ச்சி ஒன்று குறிப்பிடத்தக்கது. பூஸா ஆராய்ச்சிக்கூடத்தில் கதிரியக்கம் பாய்ச்சப்பட்ட உணவை 'ட்ரோஸோபில்லா' (Drosophilla) என்ற பழ வண்டு ஒன்றுக்குக் கொடுத்து வளர்க்கப்பட்டது. சில காலத்தில் அப்பழ வண்டில் ஒரு சடுதி மாற்றம் காணப்பட்டது. பின்னர், அதன் சந்ததியிலும் சில அசாதாரணமான மாறுதல்கள் ஏற்பட்டன. இதை அடிப்படையாகக் கொண்டு, தானியங்களையும் மற்ற உணவுப்பொருள்களையும் நீண்ட காலம் சேமித்து வைப்பதற்காக அவற்றின்

மீது கதிரியக்கத்தைப் பாய்ச்சும் பொழுது, ஒரு வேளை, அதன் காரணமாக, அந்தப் பொருள்களை உட்கொள்ளுபவர்களில் சடுதி மாற்றத்தை ஏற்படுத்த ஏதுவாகலாம். ஆகவே, உணவுப் பொருள்களில் இவ்வாறு கதிரியக்கம் பாய்ச்சுவது அவ்வளவு சிலாக்கியமா என்று யோசிக்க வேண்டியிருப்பதாக டாக்டர் சுவாமிநாதன் கூறுகிறார்.

மருத்துவத்தில், அணுக் கதிரியக்கத்தை உபயோகித்துப் புற்றுநோய் (Cancer), மூளையில் சதை வளர்ச்சி (Brain Tumor), குரல் வளைக்குக் கீழுள்ள தைராய்டு சுரப்பி (Thyroid Gland) யில் ஏற்படும் கோளாறு போன்றவற்றையும் குணப்படுத்தலாம். இதற்கெனப் பாரதத்தில் சில நிறுவனங்கள் இயங்குகின்றன.

அணுசக்தியின் மற்றோர் ஆக்கச் செயல் மின்சாரத்தை உற்பத்தி செய்வதாகும். அணு உலைகளில் அணுவைத் தகர்த்து அதிலிருந்து வெப்பமாக வெளிவரும் அசுர சக்தியைக் கொண்டு நீரை ஆவியாக மாற்றி, அந்த நீராவியைக் கொண்டு ஜெனரேட்டர்களை இயக்கி மின்சாரத்தை உற்பத்தி செய்வதே இதில் கையாளப்படும் முறையாகும். இத்தகைய அணு உலைகளைப் பாரதத்தில் மூன்று இடங்களில் நிறுவத் திட்டமுள்ளது.

அமெரிக்காவில் திருகுப் புழு (Screw Worm) என்ற ஒரு வகை ஈ கால்நடைகளின் புண்களைக் கடித்துத் துளைத்துக் கடைசியில் அவற்றை மடியச் செய்து ஆண்டுதோறும் பத்து கோடி ரூபாய்க்கு மேல் சேதம் விளைவித்து வந்தது. திருகுப் புழுவின் பெண் இனம் ஒரு தடவைதான் ஆண் இனத்துடன் கலப்பது வழக்கம். அமெரிக்காவின் டெனஸி மாநிலத்தில் ஒக்ரிட்ஜ் என்ற இடத்திலுள்ள விவசாய ஆராய்ச்சிக் கூடத்தைச் சேர்ந்த பூச்சி இனக் கலை நிபுணர்கள், ஆண் திருகுப் புழுக்கள் பலவற்றின் மீது 'காமா' கதிர்களைப் பாய்ச்சி அவற்றை மலடாக்கினர். இவற்றுடன் கலந்த பெண் இனங்கள் முட்டையிட்ட பொழுது அந்த முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிவரவில்லை. இதையறிந்த அந்த நிபுணர்கள் இத்தகைய மலடான ஆண் திருகுப் புழுக்களை வளர்க்கும் ஓர் ஆலையை நிறுவினார்கள். அங்கு அமைதியான பியூபா நிலை வரை அப்புழுக்களை வளர்த்து, அவற்றின் மீது 'காமா' கதிர்களைப் பாய்ச்சி அவற்றை மலடாக்கி, ஆகாய விமானங்களின் மூலம், ப்ளாரிடா, ஜார்ஜியா, அலபாமா முதலிய மாநிலங்களில் பறக்கவிட்டனர். இவ்வாறு விடப்பட்ட 200 கோடிக்கு மேற்பட்ட திருகுப் புழுக்கள், அங்கிருந்த பெண் இனங்களுடன் சேர்ந்தன. ஆனால் அவற்றின் சந்ததி பெருகவில்லை. இது நடைபெற்ற பன்னிரண்டு மாதங்களுக்குள் அந்தத் திருகுப் புழு இனம் பூண்டோடு அழிந்தது. இதைத் தொடர்ந்து தற்சமயம் நடைபெற்றுவரும் ஆராய்ச்சியின் காரணமாகக் கொசு, பழ வண்டு முதலிய உபத்திரவம் தரும் பூச்சிகள் ஒழிக்கப்படலாம்.

அணுவை அசைத்த விஞ்ஞானிகளுக்கு உலகம் என்றென்றும் கடமைப்பட்டு நிற்கும்.












## அவனுக்கு போர்ஹான்ஸ் கொண்டு பற்களைத் தக்கபடி பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க வேண்டிய காலம்

உங்கள் குழந்தை தூரத்து இடங்களைப் பற்றி அறிய ஆவலாயிருக்கும் போது உங்களை நாடுகிறான். உங்களிடமிருந்து அவன் கற்கும் முக்கியமான விஷயங்கள் பல. அவற்றில் ஒன்று போர்ஹான்ஸ் பற்பசையினால் பற்களைத் தக்கபடி பராமரித்தல். போர்ஹான்ஸ் ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும், தடுக்க உதவுகிறது.

பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் ஈறுகளைப் பாதுகாக்கும் விசேஷப் பொருள் கொண்டது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் நல்லது. எனவே இன்றும், என்றும் பற்கோளாறுகளைத் தடுப்பது எப்படியென்று அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். அவனை இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் உபயோகிக்கச் செய்யுங்கள். இப்பொழுதே அவனுக்கு ஆயுட்கால முழுதும் பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்றுக் கொடுங்கள்.



**போர்ஹான்ஸினால்**
**பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க இதுவே சிறந்த சமயம்**




இலவசம்! "பற்களையும், ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற விவரமான வண்ணப் புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது. தபால் செலவுக்கு 10 பைசா தபால் தலைகளை அனுப்பவும்: மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்-1.

பெயர் ..............................................................

முகவரி ..............................................................

*வேண்டிய மொழியைக் கோடிட்டுக்காட்டுக: தமிழ், ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, வங்காளம், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.
உங்கள் குழந்தை படிக்க வேண்டிய முக்கியமான புத்தகங்களுள் இதுவும் ஒன்று.

போர்ஹான்ஸ் பற்பசை—பல்வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பெற்றது

CHGM-18 B TM



# பொன்னிவனத்துப் பூங்குயில்



கொத்தமங்கலம் சுப்பு





## முன்னுரை

பூ விரியும் நன்னாள். பொன் சொரியும் பொன்னாள். காவிரியின் கரை மயங்கும் கலை மலரும் திருநாள். செங்கதிர்த் தேவனுக்குச் செந்நெல்லும் கரும்பும் வைத்துப் பொங்கலிட்டுக் கும்பிடும் புதுநாள். நம்மை வாழ்விப்பவர்களுக்குத் தமிழர்களாகிய நாம் நன்றி செலுத்தும் இந்நாளில் நமக்குக் கலைச் செல்வத்தைக் தந்த காவிரித்தாய்க்கும் கரம்கூப்புவோம்.

அன்னையே! காவிரியே! உனக்கு ஆயிரம் வணக்கங்கள். உன் அருமை பெருமையைக் கம்பன்தான் பாட வேண்டும். அந்த மாபெரும் புலவன் ராமகதையைப் பாடும்போது கங்கையை வருணிக்கப்போய், 'கழனி காவிரி நாடன்ன நாடு' என்று கங்கையை உன்னுடன் ஒப்பிட்டான்.

அவனையும் மிஞ்சிவிட்டார்கள் ஆழ்வார்கள். நீ கங்கையா? அல்



லவே அல்ல! கங்கைக் கரையில் திருவரங்கம் இருக்கிறதா? திருவாலித் திருநகரி இருக்கிறதா? அல்லது வைணவத் திருப்பதிகள்தான் இருக்கின்றனவா? அரங்கனின் மாலையல்லவா நீ? என்று, பக்திப் பெருக்கில் உன்னைக் 'கங்கையில் புனிதமாய காவிரி' என்று பாடினார்கள்.

சந்தத் தமிழால் கந்தனைப் பாடிய அருணகிரிநாதர் திரு ஆவினன்குடிக்குச் செல்லுகின்றார். முருகனைத் தரிசிக்கும் பொழுது அய்யன் திருமுகங்கள் ஆறினின்றும் ஆற்று வெள்ளம் போல் கருணை வெள்ளம் பரவுவதைக் காண்கிறார். அப்பொழுது, கந்தன் திருமுகத்திலே காவிரி தோன்றுகின்றாள். எத்தலத்திலும் மலையும் கோயிலும் தெரிகின்றன. உடனே மலைமீது கோயில் கொண்ட முருகனுக்குக் கற்களே கிடைக்காத காவிரிக் கரையிலே ஒரு கட்டுமலையைக் கட்டுவித்து ஈசருடன் ஞானமொழி பேசும் ஸ்வாமிநாதனை, காவிரிக் கரை மக்கள் கை தொழுவதைக் காணுகின்றார். அகம் குழைகிறது. ஆனந்தவெள்ளம் கண்களில் அரும்புகிறது. திருநாவில் திருப்புகழ்த் தேன் சிந்துகிறது. காவிரிக் கரையின் மக்களின் மீது அவர் கொண்ட





அன்பைப் பாருங்கள். அவர்கள் மிக கணக்கில்லாத நல்லவர்களாம். நற்குணங்களுக்கு இருப்பிடமாம்.

ஈதல், இசைபட வாழ்தல், ஓம் ஓம் என்று கண்டாமணிகளின் ஓசை முழங்கப் பூசை செய்தல், நற்றமிழும், நான்மறையும் ஓதல், உயர் குணங்களோடு வாழுதல், ஒழுக்கம், நீதி வழுவாமை, நெஞ்சில் ஈரம், குருபக்தி இவைகளை ஒருநாளும் மறவாதவர்கள் என்று களிப்படைகின்றார். பாட்டு புறப்படுகிறது.

ஈதலும் பல கோலால பூஜையும்
ஓதலும் குண ஆசார நீதியும்
ஈரமும் குரு சீர்பாத சேவையும்—மறவாத
ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜகம்பீர நாடாளும் நாயக—வயலூரா

அண்ணாமலையும் தண்ணார் புனலும், அழகிய மலரும், இளகிய மனமும் கந்தனாகவே காணும் அருணகிரிப் பெருமான் கள்ளிப் பொறி பறக்கும் கானலிலே முருகன் நிற்பதைக் காணும் பொழுது அகத்தியன் கமண்டலத்தில் வந்த தமிழூறிய காவேரி நீரால் கந்தனுக்கு அபிஷேகம் செய்கின்றார்.

ஏழ்தலம் புகழ் காவேரி என்று எதைச் சொல்கின்றார்? ஏழு உலகங்களையா? காவேரிக் கரையில் உள்ள ஏழ்நிலை மாடங்களையா? கண்டியூர் முதலான ஏழு தலங்களையா? அல்லது ஸரிகமபதநி என்னும் ஏழிசைகளையா? எல்லாமே சரியாகத் தோன்றுகிறது. நாத பிந்து கலாதி என்ற இருப்புகழிலல்லவா உன்னை 'ஏழ்தலம் புகழ் காவேரி' என்கிறார். நீதானே நாதம், பிந்து, கலை இவைகளுக்கு ஆதியாய், கண்கண்ட தெய்வமாய் இருக்கிறாய்.

உன் பிரவாஹம் நாத வெள்ளம். ஓயாது ஆதார ஷட்ஜத்தைக் கருதியாகக் கொண்டு ஓடி வருகிறாய். சிற்பம், சித்திரம், சங்கீதம், தமிழ் காவியம், நாடகம், அலங்காரம், வேதம், ஆகமம், புராணம், வரலாறு எல்லாம் உன் கலைச் சோலைகளில் தான் மலர்ந்திருக்கின்றன. கம்பனும்,



தியாகையரும் அளித்த ராமநாம வெள்ளமே நீயன்றோ!

பாடிய வாய் தேன் ஊறும் அருணாசலக் கவியின் இராம நாடகம் உன் நாடகம்தானே.

அம்மா! நீ இரு கரைக்குள் அடங்குபவள் அல்ல. இதயத்துக்குள் இருப்பவள். எழுத்து நீ. இசை நீ. மஞ்சள் நீ. மலர் நீ.

ஆடிப் பெருக்கின்போது, காவிரி நீரிலே குடகும், துளுவும், கன்னடமும் மராத்தியும், தெலுங்கும், உருதுவும், வடமொழியும் கலந்தே வருவது போல் உன் கரையில் எல்லா மொழிகளும் எல்லா மொழிக் கலைகளும் செழித்து வாழுகின்றன. இதனால்தான் காவிரிக்கு உலகில் புகழ்.

பூவிரியும் புகழ் மணக்கும் காவிரியின் சோலைகளில் எத்தனையோ குயில்கள் தோன்றியிருக்கின்றன. அவைகளில் ஒன்றுதான் பொன்னி வனத்துப் பூங்குயில். அந்தக் குயிலி ஒரு வேளை கோபுரத்தில் அமர்ந்து கூவுவாள். கோட்டைச் சுவரில் கொலுவிருப்பாள். கொள்ளிடத்தில் குளிப்பாள். காவிரியில் கண்ணாடி பார்ப்பாள். இருப்பினும் இரை தேடப் பூமிக்குத்தானே வர வேண்டும். அங்குதான் அவளுக்கு எத்தனை போட்டிகள்? எத்தனை ஆபத்துக்கள்? அவளோ குயிலி. அதிலும் ஒயிலி. அழகே ஆபத்து. அத்துடன் கலையும் சேர்ந்தால் காக்கைகள் சும்மா விடுமா?

குயிலி பட்ட பாடு கொஞ்சமல்ல. ஆயினும் அவள் கூவுவதை நிறுத்தவில்லை. அதுதான் நம் கதை.

நான் தஞ்சையில் கல்வி பயின்ற காலத்தின் நினைவாக இன்றும் என் கண் முன் நிற்பவை இரண்டு.

என் தாயின் முகம் ஒன்று. மற்றொன்று குயிலியின் கதை.

சிறு வயதில் நானும் என் நண்பர்களும் சேப்ளான்வாரிக்குச் சீதாப்பழம் பறிக்கச் செல்வோம். அக் காலத்தில், அச்சோலையில் எங்கு பார்த்தாலும் குயில் கூவும். அதன் சோகக் குரலில் நான் சிந்தையைப் பறிகொடுத்து நிற்பேன். அப்போது எல்லாம் எங்கள் கூட ஒரு பெரியவரும் வருவார். அவர் பெயர் பிலஹரி ராவ்.

அவர்தான் ஒரு நாள் ''அடேய், குயிலின் குரலுக்கே கண்ணீர் விடுகிறாயே, குயிலியின் கதை உனக்குத் தெரியுமா?'' என்றார். அவர் சொன்ன கதைக்கு அப்பொழுதே இருநூறு வயதாகியிருந்தது. இப்பொழுது, கூட ஐம்பதாகியிருக்கலாம். கதையும் கடவுளும் காலத்தால் மாறுவதில்லை. ஆகவே, இருநூற்றைம்பது வயதானாலும் இன்றைக்கும் புதுமையாகவே இருக்கும்.

## அத்தியாயம் 1

# அழகான தஞ்சாவூர் வாழி!

மங்கையர்கள் அதிகாலையில் மஞ்சள் பூசிக் குளிப்பது போல் மன்னார்கோயிலிலிருந்து தஞ்சாவூருக்கு வரும் சாலையும் அன்று மஞ்சளைப் பூசிக் கொண்டு மனோரம்மியமாக விளங்கியது. ஆதவன் தன் இள வெயிலால் சாலையையும் சோலையையும் ஒளி செய்தது.

தம் வீட்டிலே குடியிருக்க வந்தவருக்கு வீட்டுக்காரர் தம் கையில் விளக்குடன் 'இது கூடம். ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்; குழந்தைகள் இருப்பின் தொளிலும் வைத்துக் கொள்ளலாம்' என்று வருணிப்பது போல் ஆதவனும் தன் கதிரொளியால் விவரிக்கலாம்: ''இது ஆலமரம், ஆயிரம் பேர் படுக்கலாம்; இரண்டாயிரம் பேர் அமர்ந்து இருக்கலாம்; ஆனை சேனை பரிவாரங்களுடன் தங்கலாம். இது குளம். அதோ நீராடுபவர்கள் அடியவர்கள். அநுஷ்டானம் செய்து, அவர்கள் அள்ளி இடும் நீரை எனது ஏழு குதிரைகள் பூட்டிய இரதத்தின் முன் தெளிக்கும் பன்னீராக நான் ஏற்கிறேன்.

''அதோ கிழக்கு முகமாக என் வருகையை எதிர்நோக்கி அமர்ந்திருக்கிறாரே! அவர்தான் என் நண்பர் பிள்ளையார். நெடுநாட்களாக இக் குளக்கரையில் இருக்கிறார். இவரை வணங்கியவர்களுக்கு எல்லாம் கலியாணம் ஆகிவிட்டது. ஆனால் இவருக்கு மட்டும் இன்னும் ஆகவில்லை.

''அதோ, அவர் தலையில் தண்ணீரை ஊற்றுகிறானே அந்தப் பையன் நேற்றுத்தான் திண்ணைப் பள்ளிக்கூடத்துத் தேர்வில் தேறினான். எண்சுவடியிலிருந்து குழிமாத்து வகுப்புக்கு ஏறிவிட்டான். அவன் வீட்டுத் தாழ்வாரத்தில் தெங்கும், கதலியும், தேன் பலாவின் கனியும் எங்கும் இறைந்து கிடக்கின்றன. ஆயினும் தன் கையால் 108 தோண்டிகள் தண்ணீர் எடுத்துப் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்வதாக வேண்டிக் கொண்டான். பாவம்! வேறு யாராவதாக இருந்தால் இந்தக் குளிரில் நடுங்கிப் போய் விடுவார்கள். கல்லுப் பிள்ளையாராக இருப்பதால்தான் கல்லுப் போல் உட்கார்ந்திருக்கிறார். அதோ இன்னொரு பையன் ஒரு வெள்ளிக் கிண்ணம் நிரம்ப எண்ணெயைக் கொண்டு வந்து அவர் தலையில் ஊற்றிவிட்டுப் போகிறான். யாரும் அரப்புத் தேய்ப்பதாக வேண்டிக் கொள்ளவில்லை போலிருக்கிறது. பாவம்! அப்படியே உட்கார்ந்திருக்கிறார்!

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா *நறுமண* கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

கண் கவரும்
புதிய புட்டி
3 சைஸ்களிலே
கிடைக்கிறது




ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.

''இந்தப் பிள்ளையாருக்கு 'வெயில் உகந்த விநாயகர்' என்று பெயர். வெயிலை அவர் உவந்து ஏற்கவில்லை. ஊரார் அப்படி விட்டு விட்டார்கள். மணியாரார் பிள்ளையார் கோயிலைத் தாமே கட்டித் தருவதாகச் சொன்னார். இதற்கு மளிகைக் கடைக்காரர் ஒப்புக் கொள்ளவில்லை. 'உங்கள் ஒருவர் தயவில் பிள்ளையார் பிழைக்கவில்லை' என்று கூறித் தடுத்துவிட்டார். பிள்ளையார் வெயிலை உவக்கும்படி ஆகிவிட்டது.

''பிள்ளையாருக்கு நம்மால்தான் சூரியன் சரியான பாதையில் செல்கிறான் என்று ஒரு கர்வம். எனக்கும் அவரைக் கும்பிட்டு விட்டுப் புறப்படுவதில் ஒரு திருப்தி.

''அதோ, அந்த ஆலமரத்தைப் பாருங்கள்! தளிரில் ஒரு பச்சை; இலையில் ஒரு பச்சை; அதன் மேல் தவழும் கிளி ஒரு பச்சை. அது மரமல்ல; மரகதக் குவியல். பச்சை மாமலை! அந்தக் கிளிகள் பவளவாய்க் கிளிகள்!'' இவ்வாறு காலைக் காட்சிகளை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தான் கதிரவன்.

அப்போது குடியிருப்பவருக்கு வீடு சொந்தமில்லை என்பது போல் இரண்டு குரங்குகள் ஒரு மரத்திலிருந்து கீழே குதித்தன. எதிரில் இருந்த மணல் மேட்டில் உட்கார்ந்து குளிர் காய ஆரம்பித்தன. பெண் குரங்கி பின்வருமாறு கேட்டாள்:

''நாயகனே! நாயகனே! முன்பு நடந்த நாயக்க மன்னர்களின் ஆட்சி நல்லதா, இன்று நடக்கும் மகாராஷ்டிர மன்னர்களின் ஆட்சி நல்லதா?''

''இது மக்கள் கேட்க வேண்டிய கேள்வியல்லவா? யார் ஆண்டால் நமக்கென்ன?''

''காரணமில்லாமல் கேட்பேனா? சொல்லுங்கள்.''

''என்னைப் பொறுத்தவரை இரண்டுமே நல்லவைதான். முன்னவர் நம்மைக் கொடியில் வைத்தார்கள். பின்னவர் கோயிலில் வைக்கிறார்கள்.''

''இப்போது வேறு யார் யாரோ இந்தக் காவிரி நாட்டின் மேல் கண் வைத்து வருகிறார்களாம். அவர்கள் நம்மைக் கொடியிலும் வைக்கமாட்டார்களாம், கோயிலிலும் வைக்க மாட்டார்களாம். கொன்று கூட்டில் வைத்துக்கொண்டு விடுவார்களாம்!''

''என்ன? உண்மையாகவா?'' என்று பயத்தோடு கேட்டது ஆண் குரங்கு.

''நேற்று மாந்தோப்புக் கலியாணத்தில் திருவரம்பூர் குரங்கிதான் இதை என்னிடம் காதோடு சொன்னாள். நான் அதை உங்களிடம் காதோடு சொல்கிறேன்'' என்று கணவனின் காதைக் கடித்தாள் குரங்கி.

அப்போது 'டக் டக் டக் டக்' என்ற சத்தம் கேட்டு இரு குரங்குகளும் சாலையை நோக்கித் திரும்பின. அங்கே இரட்டைக் குதிரைகள் பூட்டிய அழகிய மூடு வண்டி ஒன்று கடும் வேகத்தில் வந்து கொண்டிருந்தது. குரங்கன் ஆவலுடன் அதைப் பார்த்தான். ''ஏய், ஏய்'' என்று அதன் சாரதியின் குரல் கேட்கவே, ''இனிமேல் இங்கிருந்தால் ஆபத்து. வண்டியில் உன்னைத் தூக்கிப் போட்டுக் கொண்டு போனாலும் போய்விடுவார்கள்'' என்று கூறி அவசரமாகக் குரங்கியை இழுத்துக்கொண்டு கரும்புச் சோலைக்குள் புகுந்தது.



''குழாயிலே தண்ணீர் வரல்லே. தண்ணீர் கறக்கிற மாடு இருந்தா எவ்வளவு சௌகரியமாக இருக்கும்!''

அந்தப் பெருஞ்சாலை ராஜபாட்டைதான் என்பதை அந்த வண்டி எடுத்துக் காட்டியது. அதில் பூட்டியிருந்த குதிரைகள் இரண்டும் ஒரே தாயின் இரட்டைக் குழந்தைகள் போல ஒரே உயரம், ஒரே நீளம், ஒரே நிறம். வால் மயிர்கூட ஒரே உயரத்துக்குக் குஞ்சம் போல் வெட்டி விடப்பட்டிருந்தது. இந்தப் புரவிகளைச் சோடி சேர்த்தவன் ஒரு மாபெரும் கலைஞன் என்று எவரும் கூறிவிடுவார்கள். அந்த நடையில்தான் என்ன ஒற்றுமை! 'டக் டக் டக் டக்' என்று ஒருசேரக் கால் எடுத்து வைக்க எங்கே கற்றுக் கொண்டன! பத்து வருஷங்கள் பரதம் பழகிய பாதங்கள் போல இரண்டும் ''தகுதி தகுதி தகுதி தகுதி'' என்று அஸ்வ கதியில் ஒரே இராட்டில் ஓடின. அந்த நடையைக் கண்டாலே அவை தஞ்சாவூர்க் குதிரைகள்தான் என்று சொல்லிவிடலாம். மகாதேவிப் பட்டணத்திலிருந்து நெடுந்தூரம் வரும் குதிரைகள் ஆதலால், அவைகள் மேல் வெண்மையாக, பாலாபிஷேகம் செய்தது போல் நுரை பொங்கிக் கொண்டிருந்தது. இரண்டின் வாய்களிலும் வெண் நுரை பொங்கிச் சிதறி, 'இதுதான் புரவிகள் சென்ற வழி' என்று காட்டின. அதன் சாரதிக்கு வேலையே இல்லை. இந்த வழியில் அடிக்கடி பிரயாணம் செய்து பழகிய பரிகள் ஆதலால் பாதையைப் பற்றி அவைகளுக்குக் கவலையில்லை. அவனும்தான் எத்தனை நேரம் சும்மா இருக்க முடியும்? அடிக்கடி ''ஏய் ஏய்'' என்று குரல் கொடுத்துத் தான் ஓட்டுவதாக நினைத்துத் தன்னைத் திருப்திப்படுத்திக் கொண்டான். அவனுக்கருகில் ஊமத்தம் பூப்போன்ற ஓர் அழகிய வெள்ளித் தாணி பதிக்கப்பெற்று அதில் குதிரையை ஓட்டும் சாட்டை ஒன்று வண்டிக்கு அலங்காரமாக இருந்தது.

சந்தத் தமிழ்போலப் பரிகளே நடக்கையில் சாட்டை எதற்கு?

குதிரைகளின் குளம்படிகள் உள்ளே கேட்கக்கூடாதென்றுதானோ என்னவோ அந்த மூடிய வண்டியின் நாற்புறமும் பட்டுத் திரைகள் தொங்கின.

சில சமயங்களில் நல்ல வாகனத்தில் செல்லும் யோகவான்கள் அடிக்கடி தங்கள் முகத்தை வெளியே காட்டி "நான்தான் செல்கிறேன்" என்று சொல்லாமல் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் இந்த வண்டிக்குள் இருந்தவர்கள் தங்கள் முகத்தை வெளியே காட்டவே இல்லை. இரண்டு பெண்களும் ஓர் ஆணும் வண்டியில் அமர்ந்திருக்கும்போது வெளி உலகைப் பற்றி நினைக்கத் தோன்றுமா?

வண்டியின் உள்ளே வேறு யாரும் இல்லை. பாமா ருக்மிணி சமேதராய் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே அமர்ந்திருந்தார்!

பரமாத்மாவுக்கு வயது இருபத்திரண்டு இருக்கலாம். ருக்மிணியும் பாமாவும் பதினெட்டு வயதினர். பரமாத்மாவின் திருக்கரத்தில் ஓர் ஓலைச் சுவடி இருந்தது. "ராஜ கோபால விலாஸம்" என்ற அந்தச் சுவடியிலிருந்து பரதம் ஒரு பாடலை அவர் எடுத்துப் படிக்கவும், ருக்மிணியும் பாமாவும் அதைப் பாடி அந்த வண்டிக்குள்ளேயே ஆடினார்கள்.

பாரிஜாத மலர் விஷயமாக இருவருக்கும் ஏற்பட்ட தகராறில் ஆடிப் பாடி அபிநயம் செய்து, ருக்மிணி, சத்யபாமை இருவரும் கண்ணனின் கன்னத்தில் இடித்தார்கள்.

ஆம்! இவ்வாறு பாரிஜாத நாடகக் காட்சி ஒன்றை அவர்கள் மூவரும் ஒத்திகை பார்த்துக்கொண்டிருந்தனர். அடியேன் மறந்து விட்டேன். வண்டியில் இருந்தவர்கள் மூவரும் ஆண்களே!

வண்டியின் நடுவில் அமர்ந்திருந்த வாலிபச் சிங்கம் பல கலைகளில் வல்லுநர். பன்மொழிப் புலவர். பல நூல்களை இயற்றிக் கலை உலகிற்கு அளிக்கப் போகிறவர். அவர் அழகில் அர்ச்சுனர். ஆற்றலிலும் அப்படியே. வருங்கால உலகில் பெரும் புகழ் பெறப் போகிறவர் என்ற அறிகுறியும் இப்போதே இவர் முகத்தில் தெரிந்தது. அரும்புகின்ற மீசையில் ஆண்மையும் அரும்பியது. அவர் இரும்புகிற பக்கமெல்லாம் வீரமும் தெய்வ பக்தியும் பரவின. இடையே ஒருமுறை தலைநிமிர்ந்த போது அவர் முகத்தில் கலைமகள் குடிகொண்டிருப்பது தெரிந்தது. மலைமகளாகிய சக்தி புஜங்களில் ஆரோகணித்துக் கொண்டிருந்தாள். அலைமகள் திருவருளை அவர் அமர்ந்திருந்த ஆசனமும் அந்த வண்டியின் அலங்காரமுமே எடுத்துக் காட்டின.

அவர் கூட பாமாவாக நடித்தவர் சியாமா என்னும் இளைஞர். ருக்மிணியாக நடித்தவரோ சர்க்கரை என்னும் இளைஞர்.

கல்வி, செல்வம், வீரம், பாவம், ராகம், தானம் ஆகிய முப்பொருள்களும் மூவடிவாக விளங்குவது போல அவர்கள் விளங்கினார்கள். பாமையாக வேஷம் தரித்த சியாமா கமாஸ் ராகத்தில் ஒரு பாட்டைப் பாடிக் கொண்டே கால் சலங்கை கொஞ்ச ஆட ஆரம்பித்தான். சற்று யோசித்துவிட்டு, குதிரைகளின் குளம்படியைத் தன் பண்ணுக்கு லயமாக ஆக்கிப் பரதம் ஆடத் தொடங்கினான். குதிரைகள் நந்திகள் ஆயின. குளம்படி மத்தளமாயிற்று. "சியாமா சபாஷ்! நீதான் பாமா!" என்றான் சர்க்கரை.

"புலவர் ஏறே! போதும் புகழ். ஓதும் ஓதும் உமது பதத்தை!" என்றான் சியாமா. இதைக் கேட்ட வீர வாலிபர் புன்னகை அரும்பினார். அந்தப் புன்சிரிப்பிலே பிறந்த இசை போல, தஞ்சாவூர் மாரியம்மன் கோயிலிலிருந்து பிலஹரி ராகம் காற்றில் தவழ்ந்து வந்தது. நாதஸ்வரத்தின் இசை கேட்ட மூவரும் "நாடகம் போதும். நகர் வந்து விட்டது" என்றார்கள்.

"இது கடைசிவரை இரகசியமாகவே இருக்க வேண்டும். இந்த ஊர் மகாராஜா இசையின் சக்கரவர்த்தி" என்றார் கண்ணன் வேடக்காரர்.

"ஆம். 'சத்ரபதி' என்றால் சாதாரணமா? ஒரு குடை நிழலில் உலகை ஆள்பவர் என்று பொருள். இப்போது ஓங்கி அடிக்கும் வெயிலைத் தாங்கவே ஒரு குடையால் முடியாது. அதனால்தான் மகாராஜா அவர்கள் 'ஸரிகமபதநி' என்னும் குடையால் எங்கும் ஆள்கிறார்கள்" என்று விளக்கம் கொடுத்தார் சர்க்கரை.

"புலவர் ஏறே! போதும் புகழ்" என்று அவரை அடக்கிவிட்டு, "சத்ரபதி என்றால் குடைக்கெல்லாம் கலைபானவன் என்று பெயர். சத்ரபதி அரசர்கள் கருணையில் மழை போன்றவர்கள். வீரத்தில் ஆதவன் போன்றவர்கள். காதலில் சந்திரன் போன்றவர்கள்" என்ற கருத்தில் ஒரு சுலோகத்தைப் பாடினான் சியாமா. இதைக் கேட்ட வீர வாலிபர் நகைத்தார்.

"இருபத்தேழு நட்சத்திரங்களை மட்டும் மனைவிகள் என்கிறாயா அல்லது சந்திரனின் தாரா கணங்களை எண்ணினாலும் சத்ரபதிகளின் தாரங்களை எண்ண முடியாது என்று கூறுகிறாயா?" என்று வேடிக்கையாகக் கேட்டார். நண்பர்கள் இருவரும் நகைத்தார்கள்.

"இவை யாவும் சரியல்ல. சந்திரன் நிலவால் குடை பிடிக்கிறான். சூரியன் ஒளியால் குடை பிடிக்கிறான். மேகம் மழையால் குடை பிடிக்கிறது. சத்ரபதிகளோ சந்திரன், சூரியன், மேகம் இந்த மூன்றையும் காக்கும் தருமத்தைக் குடையாகப் பிடித்தவர்கள்" என்றார் அந்த இளைஞர். நண்பர்கள் இருவரும் "வாழ்க மன்னர்!" என்று வாழ்த்தினர்.



தஞ்சைமா நகரக் கோட்டையின் கீழ்வாசல் பகுதியைப் பார்க்கும்போது தமிழ் நாட்டின் செல்வமே அங்கு தங்கியிருப்பதுபோல் தோன்றியது. அதைக் கட்டிய நாயக்க மன்னர்கள் கோட்டையின் மதிலின் மீது கன்னரும், சாதிலிங்கமும் பட்டையடித்திருந்தார்கள். ஆசார வாசலை வெண்கலக் குமிழ் பொருத்திய இரு பெரும்

# சளியோடு ஃப்ளூவா?

## வேகமாக குணம்பெற 2 அனாஸின் சாப்பிடுங்கள்

சளி பிடித்தால் நீங்கள் தவித்துப் போவீர்கள். மூக்கு ஒழுகும், ஏராளமாகத் தும்மல் வரும். வலியோ உடம்பை வாட்டியெடுக்கும், தெளிவாகச் சிந்திப்பதே இயலாதுபோகும். உடனே 2 அனாஸின் சாப்பிட்டுப் பாருங்கள். 4 வழி நிவாரணம் அதி விரைவில் கிட்டும்.

1. சளியோடு ஃப்ளூவையும் தணிக்கிறது அனாஸின்—வேகமாக
2. சோர்வை வெல்லுகிறது அனாஸின்—வேகமாக
3. வாட்டத்தைப் போக்குகிறது அனாஸின்—வேகமாக
4. படபடப்பை ஆற்றுகிறது அனாஸின்—வேகமாக

இதன் காரணம், பல மருந்துகள் இணைந்த அனாஸின்—டாக்டரே குறித்துக் கொடுத்த மருந்துச் சீட்டுபோல் பத்திரமானது. எனவே, வலி தணிக்கும் சாதனங்களிலே இந்தியாவிலேயே உன்னத விற்பனை உடையதாக அனாஸின் விளங்குவதில் வியப்பில்லை.

சளி பிடித்த முதல் அறிகுறி தென்பட்டதுமே அனாஸின் சாப்பிடுங்கள். தலைவலி, பல்வலி, உடல்வலி ஆகியவற்றையும் தணிக்கிறது அனாஸின். ஆகையால் எப்போதும் அனாஸின் உங்கள் கைவசமிருக்கட்டும்.

தவறாமல் எப்போதும் வாங்குங்கள் அனாஸின்.

# அனாஸின்

சிறந்தது ஏனெனில் அது

4 வழிகளில் வேலை செய்கிறது




ASP/A-24 TAM

Regd. user: GEOFFREY MANNERS & CO. LTD.












கதவுகள் அலங்கரித்தன. அகழியின் மீது வண்டிகள் செல்வதற்காக அமைத்த பலகை வாராவதி ஒன்று காணப்பட்டது. இரவு நேரங்களில் கோட்டை சாத்தும்போது அந்த வாராவதியை இரும்புச் சங்கிலிகளால் உயரத் தூக்கி இணைத்து விடுவார்கள். அந்த இரும்புச் சங்கிலிகள் ஆதவன் ஒளியில் பளீர் பளீரென இருபுறமும் மின்னின. வாராவதியின் இரு மருங்கிலும் வண்ணச் சீருடை அணிந்த காவற்காரர்கள் இருபது பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களில் பலர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களில்லையாயினும் பழக்கத்தால் தமிழைப் படித்திருந்தார்கள். அப்போது கருங்காலி வைரத்தில் கடைந்தெடுத்த பதுமை போல் ஒரு பெண் கோட்டை வாயிலுக்குள் வேகமாக நுழைந்தாள். இடையில்சிட்டிப்பாவாடையும், மேலே தோம்பு ரவிக்கையும், அதன் மேல் சிறிது கிழிந்த தாவணியும் அணிந்து அவள் பார்வைக்கு ஏழை போல் தோன்றினாள். ஆனால் பாவையின் நடை உடை பாவனைகளில் ஏழைமை இல்லை. சிட்டுக் குருவி போல் சில் லென்று அவள் பறந்து வந்த வேகத்தில் முதலில் நின்ற சிப்பாய்கள் விட்டு விட்டார்கள். அவள் குலுக்கி நடந்த அழகில் அடுத்து நின்றவர்கள் தடுத்து நிறுத்தவில்லை. ஆனால் வாசற்படியில் அவள் காலை வைத்த பொழுது அங்கு நின்ற சிப்பாய், ''நில்'' என்று அதட்டிவிட்டான். ஆண்களே நுழைய அஞ்சும் அந்த வாசலில் அச்சமின்றி நுழைந்தவள் அல்லவா அவள்? ''ஏன் ஐயா தடுக்கறே? என்னைத் தெரியலே?'' என்று ஒரு புன்னகையை உதிர்த்தாள். அந்தப் புன்னகையில் காவற் புலி மயங்கியது. ஆயினும் அடுத்து நிற்பவன் என்ன சொல்வானோ என்ற பயத்தில் ''தெரியாது'' என்றான்.

''அப்படின்னா ஒதுங்கு'' என்று உடனே பதில் சொல்லிவிட்டு அவள் மிடுக்காக நுழைந்தாள்.

அவன் தன் கை ஈட்டியால் அவள் பாதையைத் தடுத்தான். ''எந்த ஊர்?'' என்றான்.

''எந்த ஊரா? தம்பூரு!''

''தம்பூரா? அப்படி ஓர் ஊர் இருக்கிறதா? நான் கேள்விப்பட்டதே யில்லையே!''

''உனக்கு ஞானம் அவ்வளவுதான். நீ தஞ்சாவூர்க்காரனாக இருந்தால் தம்பூரைப் பத்தித் தெரியும்.''

''என்ன பேர்?''

''பதினெட்டாம் பேர்.''

காவல்காரன் விழித்தான். ஆயினும் இப்படியும் ஒரு பெயர் இருக்குமோ என்ற சந்தேகமும் அவனுக்கு வந்தது. உடனே தன் அருகில் இருந்த கோட்டை வாயில் கணக்கனை ஒரு முறை பார்த்தான். கங்கக் கணக்கனும் முகத்தில் கேள்விக் குறியுடன் காவலனைப் பார்த்தான்.

''என்னய்யா முளிக்கிறீங்க? காவேரிக் கரையா யிருந்தா பதினெட்டாம் பேர் தெரியும். விடுங்கய்யா நேரமாவுது.''

''காணி — கரை இருக்கிறதா?''

''இல்லாமல் இருக்குமா?''

''கரை பெயரென்ன?''

''சர்க்கரை.''

கணக்கன் தன் கையேட்டைப் புரட்டினான். ''அப்படி ஒரு பெயரும் ஏட்டில் இல்லையே?'' என்றான்.

''கணக்கிலே தப்பு இருந்தா நான் என்னய்யா செய்யறது? உன் கணக்கிலே என் பேர் இல்லேங்கறதுக்காக நான் பிறக்கலேன்னு சொல்லிடுவாயா? என்னய்யா, உள்ளூர்க்காரங்களையே உள்ளே விட மாட்டேங்கிறீங்க'' என்று அவள் பேசிக்கொண்டேயிருக்கும்போது, ''கபர்தார்'' என்று ஆயிரம் வேங்கைகள் சேர்ந்து அலறியது போல் ஓர் உறுமல் கோட்டையின் உட்புறமிருந்து கேட்டது. காவல் வீரர்கள் எல்லோரும் உடனே நிமிர்ந்து நின்றார்கள். ''கோட்டையின் உள்துறை பொறுப்பாளராகிய கில்லேதார் அவர்கள் அந்தப் பக்கமாக வருகிறார்கள்'' என்று காவலர்களை எச்சரித்தார் ஒரு சுபேதார்.

இந்த எச்சரிப்பைத் தொடர்ந்து 'ஜாய்' என்ற குரல் கேட்டது. வாசற்படியில் நின்று கொண்டிருந்த பெண் இனி அங்கு நின்று கொண்டிருந்தால் ஆபத்து என்ற எண்ணத்தில் தலையும் குனியாமல், தாளும் நடுங்காமல், அழகோடு நாலு எட்டில் தாண்டிக் கோட்டை வெளியிலே நடந்தாள். ஒரு பூவரச மரத்தடியில் நின்றாள். அவள் வந்த வேகத்தில் அவளுக்குப் பெருமூச்சு வாங்கியது. அதுவும் அவள் வனப்பை அதிகப்படுத்திக் காட்டியது. நெற்றியில் தோன்றிய இள வியர்வை முத்துக்களைத் தன் தாவணியால் துடைத்துக் கொண்டாள். அவள் கண்கள் சிறிது சிவந்திருந்தன. அவற்றிடையே மான் போன்ற மருட்சியும் அடிக்கடி தோன்றியது. அது ஒரு கணம்தான். அடுத்த கணமே தன் பாவாடை மடிப்பிலிருந்து ஒரு சுட்ட சோளக் கதிரை எடுத்து முல்லை அரும்பு போன்ற தன் பற்களிடையே வைத்துக் கடித்தாள். உடனே அவள் முகத்தில் பழைய உல்லாசம் மலர்ந்தது. ஒரு முறை தன்னை உலுக்கிக் கொண்டாள். அதோடு தன் மனத்தில் இருந்த கவலையையும் உதிர்த்தாள்.

'ஏய், ஏய்' என்று ஒரு குரல் கேட்டது; கவனித்தாள். கிழக்கே திரும்பினாள். தூரத்தில் இரட்டைக் குதிரை பூட்டிய வண்டி ஒன்று வருவது தெரிந்தது. அவள் முகம் மலர்ந்தது.

இருபுறத்துக் கதவுகளிலும் வெள்ளிக் கைப் பிடிகள் அமைக்கப்பட்டு, பலகணியெல்லாம் பட்டுத் திரையால் மூடப்பட்டு இருக்கும் அந்த வண்டியைப் பார்த்தவுடனேயே காவல் வீரர்கள் கைகட்டி நின்றனர். சாரதி காவல் சுபேதாரிடம் தன் அடையாள ஓலையைக் காட்டினான். சுபேதாரும் மரியாதைக்காக அதைப் பார்த்துவிட்டு, ''ராம் ராம்'' என்று வணங்கினான். ஒரு கணம் நிற்பதற்குள் தன் கால் குளம்புகளைப் 'பட் பட்' என்று தரையில் அடித்த புரவிகளிரண்டும் வேகமாகக் கோட்டைக்குள் நுழைந்தன. அந்த வண்டியின் பின்புறத்து அங்கு'படியில்' தலையை மூடி முக்காடிட்டுக் கொண்டு ஒரு கோஷா பணிப் பெண் நின்றாள்.

இதைப் பார்த்த கோட்டைக் கணக்கன், ''அந்தப்புரத்துப் பெண்கள் போகிறார்கள் போலிருக்கிறது'' என்றான். ''திரையைப் பார்த்ததும் தெரிந்து கொண்டேனே'' என்றான் காவல்காரன்.

கோட்டையினுள் சென்ற வண்டி இடது புறமாகத் திரும்பிக் கீழராஜ வீதியில் மாமா சாகிப் மூலை என்று அழைக்கப்படும் இடத்தருகில் போனவுடன் வண்டியின் பின்புறத்தில் நின்ற பணிப் பெண் தன் தலை முக்காட்டை எடுத்துவிட்டுத் தன் கையிலிருந்த சோளக் கதிரைக் கடித்துக் கொண்டே அங்குபடியின் மேல் அட்டணக்கால் போட்டு அமர்ந்தாள்.

ரோஜா மொட்டு மலர்ந்தவுடன் எவ்வாறு தேனீக்கள் பல திசைகளிலிருந்தும் ஓடி வருகின்றனவோ, அவ்வாறு அவள் ஹாய்யாகச் சாய்ந்தமர்ந்தவுடன் பல இளம் வயதுச் சிறுவர்கள் அவளைப் பார்த்துவிட்டு அவளருகில் ஓடி வந்தார்கள். இவர்களெல்லாரும் அவளுடைய படை வீரர்கள். அவள் அப் படையின் தலைவி. அந்தச் சிறுவர்களின் முகத்தில் தாங்களும் வண்டியில் ஏறி அமர முடியாதா என்ற ஆவல் எழுதியிருந்தது. அவர்களிலே சின்னத்தம்பி என்ற ஒரு பையன் தோளிலே ஒரு டோலக்கைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தான்! ''குயிலி! நானும் உட்காரலாமா?'' என்றான். அதற்கு அவள் தன் கைவிரல்களை வாயில் வைத்து, ''வேண்டாம்'' என்று தலையசைத்து ஜாடை காட்டினாள். உடனே அவன் முகத்தில் ஓர் ஏக்கம் வருவதைக் கண்டாள். மடியில் கட்டியிருந்த சோளக் கதிர்களில் ஒன்றை எடுத்து அவன் கரத்தில் எறிந்தாள்.



சாரதியின் குரல், ''ஏய், ஏய்'' என்று கம்பீரமாக ஒலித்தது. வண்டியின் அழகைப் பார்த்தே பலர் வழிவிட்டு விலகினர்.

அந்தச் சாலைகளில் தார்நாற்றம் இல்லை. ஆதலால் அங்கு உதிர்ந்திருந்த மர மல்லிகை மலர்களின் வாசனை தெருவெங்கும் வீசியது. எருமைப் பால் காப்பிக் கடைகள் இல்லை. ஆதலால் எவரும் நடு வழியில் நிற்கவில்லை. இன்று போல் தினசரிப் பத்திரிகைகள் இல்லை. ஆதலால் தெருத் திண்ணைகளில் பலர் உட்கார்ந்து ஊர் வம்பைப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள். வானொலியில் பாட்டு முழங்கவில்லை. ஆனால் இரண்டு வீட்டுக்கொரு வீட்டில் பரத நாட்டியப் பயிற்சியோ அல்லது இசைப் பயிற்சியோ நடந்து கொண்டிருக்கும் இனிய ஓசை தெருவில் கேட்டது. அவ் வீட்டு வாயில்களில் தயிர் விற்பவர்களும், காய்கறி விற்பவர்களும் 'கீரை! கீரை' 'தயிரோ தயிர்' என்று அதே சுருதியில் விலை கூவினர். கடிகாரங்களும் மணிக் கூண்டுகளும் இல்லை. ஆதலால் ஓடாத கடிகாரங்களால் நேரத் தவறு ஏற்படவில்லை. இரவையும் பகலையும் எட்டு யாமங்களாக அளந்து காலையில் பெரிய மேளத்தில் ஆரம்பித்து, திருமுறைப்பாரி, மணிமுரசப் பாரி, சின்னமேளம், வீரர்கள் பவனிப்பாரி, மாலையில் வீணைப்பாரி, மணிமுரசப்பாரி,

காவல்பாரி முதலிய எண்வகைப் பாரிகளால் உதயம், முதற்சாமம் என்று காலத்தைப் புரிந்து கொள்ளும்படி செய்தார்கள்.

''அசையாத தஞ்சாவூர் வாழி
அறம்வாழி சந்திரங்க ளறுசமயம் வாழி''

என்னும் பாடலைப் பண் கலந்து பரவசத்தோடு பாடி வந்து கொண்டிருந்த ஓதுவார் மூர்த்திகள் திருக்குழுவைக் கண்டவர்கள் எல்லாரும் கைகூப்பி வணங்கினர். இடையில் மடி வைத்துக் கட்டிய வேட்டியும் அதன் மீது ஒரு பீதாம்பரமும் அணிந்து மார்பில் கௌரி சங்கரன் இலங்க, திருநீறு தவழும் திருமேனியராய்ச் சிவபெருமானிடம் ஈடுபட்ட சிந்தையுடன், அநுபூதிச் செல்வர் ஒருவர் பாடிக் கொண்டிருந்தார். அவர் பாடல் காதில் கேட்டதுமே, சர்க்கரை திரை வழியே எட்டிப் பார்த்தான்.

''எட்டிப் பார்த்தால்தான் தந்தை என்று தெரியுமா? இந்த இனிய குரல் வேறு யாருக்கு உண்டு'' என்று அவன் கையைப் பிடித்து இழுத்தான் சியாமா.

அப்போது 'ஏய்! ஏய்!'' என்று பின்புறமிருந்து சத்தம் கேட்கவே உள்ளிருந்த வீரன் திரை வழியே எட்டிப் பார்த்தான். அது ஒரு பெண் குரல். ''ஏய் ஏய்'' என்ற குரலில் 'ப', 'ஸா' என்ற இரு ஸ்வரங்கள் ஒலித்தன.

சாரதி ''ஏய் ஏய்'' என்னும்போதோ அதில் ஏழு ஸ்வரங்களும் ஒலித்தன.

உடனே மறுபடியும் அவற்றுக்குப் போட்டியாக ''ஏய் ஏய்'' என்றது அப்பெண் குரல்.

இதைக் கேட்டதும் குதிரை வண்டிக்குப் பின்னால் யாரோ ஒருத்தி வண்டியை ஓட்டி வருகிறாள் என்ற எண்ணத்தில், எஜமானரின் மானத்தைக் காக்கும் கடமையில் நாலு கால் பாய்ச்சலில் பரிகள் கிளம்பின. சாரதி குதிரைகளின் லகானை இழுத்துப் பிடித்து அடக்கினான். வண்டியின் பக்கவாட்டில் திரும்பி ''ஏய் ஏய்'' என்றான். மறுபடியும் அதே குரல் ''ஏய் ஏய்'' என்று பதில் கொடுத்தது.

குதிரைகள் முகத்தில் முன் மயிர் குஞ்சம் போல் தொங்க விடப்பட்டிருந்தது. அவன் முகத்தில் அது வெட்டப்படாமலேயே தொங்கியது. குதிரையின் உடல் பாலிஷ் செய்யப் பட்டுப் பளபளவென்று மெருகேறியிருந்தது. அவன் உடலோ வாலிப முறுக்கில் மெருகேறியிருந்தது. குதிரைகள் கடிவாளத்தைக் கடித்துக் கொண்டிருந்தன. அவனோ சோளக் கதிரைக் கடித்துக் கொண்டிருந்தான். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம்தான். அந்தக் குதிரைகள் ஒரு வண்டியில் பூட்டப்பட்டிருந்தன. இவன் தன்னிச்சையாகத் திரிபவன். அவை இரண்டும் ஒன்றையொன்று ஒத்திருந்தன. இவனுக்கு ஒப்பானவர்கள் ஒருவருமில்லை என்று இருந்தான். குதிரை வெண்மை. இவன் கறுப்பு. குதிரைக்குக் காலில் வேகம். இவனுக்கு அங்கமெல்லாம் வேகம். குதிரை மேற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. இவன் கிழக்கு நோக்கி உட்கார்ந்திருந்தான்.

வண்டியோட்டி ''ஏய் ஏய்!'' என்னும் போதெல்லாம் அவனும் பதிலுக்கு ''ஏய் ஏய்'' என்று கூவினான். ''அது குழலா குரலா?'' என்று உள்ளிருந்த மூவரையும் திகைக்க வைத்தது. வண்டியிலிருந்த வீணைத் தந்தியை மீட்டினான் சியாமா. அவன் குரல் இனிமைக்கு முன் தந்திகள் எம்மாத்திரம்?

ஆனால் குதிரைக்காரனோ குதிரையின் கனைப்பையே கேட்டுப் பழகியவன். குரல் இனிப்பை அறிவானா? ''குதிரையின் நிஷாதம் குயிலின் பஞ்சமத்துக்கு முன் நிற்குமா? இசை என்ற உடம்புக்குப் பஞ்சமம்தான் நாபிக் கமலம். பஞ்சமஸ்வரம் இல்லையேல் பாட்டில்லை'' என்று அவன் நினைத்ததேனும் உண்டா?

தன் வண்டியின் பின்புறத்தில் வேறோர் ஆள் அமர்ந்திருப்பதை அறிந்தவுடன் அவனுக்குக் கோபம்தான் வந்தது. ''ஏய்! ஏய்!'' என்று உரக்கக் கூவினான். இதற்குப் போட்டியாக உச்ச ஸ்தாயியில் பதில் கிடைத்தது. வயல் வெளியில் மேயும் ஆட்டின் மேல் அமர்ந்திருக்கும் குயில்போல் அவன் உலகை மறந்து அமர்ந்திருந்தான். ''பளீர்'' என்று ஒரு சத்தம். குதிரைக்காரன் சாட்டையின் நுனியில் இருந்த ஈயக் குண்டுகள் அவன் இடக் கரத்தில் களீர் என்று தாக்கின. அவன் மேலாடையில் ஓர் ஓரம் கிழிந்து சாட்டையுடன் சென்றது. ''அம்மா'' என்றான் அவன். ஆனாலும் அவசரம் அவசரமாக ஆடையை இழுத்து வெளியே தெரிந்த முழங் கையை மூடிக்கொண்டான். அது நாணத்தால் அல்ல. அந்த நங்கையின் கரத்தில் நாய் கடித்த தடம்போல் இருந்த ஒரு தழும்பு வெளியே தெரியாமல் இருப்பதற்காகத்தான். கையைப் பிசைந்து கொண்டு சரேல் என்று கீழே குதித்தான். இரண்டே தாண்டில் துள்ளிக் குதித்துச் சாரதியின் அருகில் போய் ''மீசையைப் பாரு ஆட்டுக் கடா கொம்பு மாதிரி! ஏய்யா அடிச்சே?'' என்று கேட்டான்.

''ஏன் வண்டியில் உட்கார்ந்தே?''

''ஏன்? உட்கார்ந்தா என்ன? நீயா இழுக்கறே? குதிரை இல்லே இழுக்குது. உனக்கென்ன?''

''போறியா மறுபடியும் ஒன்று குடுக்கவா?'' என்று சாட்டையைத் தொட்டான் அவன்.

''எங்கே குடு பாப்போம். உன் காலைப் பிடிச்சு இழுத்து வெளியே தள்ளிடறேன்'' என்று அவனும் எகிறிப் பாய்ந்தான். அப்போது திரை மறைவிலிருந்து கண்ணன் வேடக்காரரின் கண்கள் அவனையே நோக்கின.

இதற்குள் தெருவில் பாராக் கொடுத்துக் கொண்டிருந்த காவலன் ஒருவன் அங்கு ஓடி வந்தான். பாராக்காரனைக் கண்டவுடன் குயில் பறந்தது. அவன் மேட்டிமையாக நடக்க ஆரம்பித்தான். ஒரே எட்டில் அவனது இரும்புக் கை அவனைப் பிடித்தது.

''ஏன் அப்படி இழுக்கிறே? நான் என்ன இருடினேனா? கொள்ளை அடித்தேனா?'' என்று தன் இடக் கரத் தழும்பைச் சரேலென்று மூடிக்கொண்டான் அவன். அவன் குரலில் ஆத்திரம் பீறிட்டது. காவற்காரன் அவனை அடிக்கத் தன் கையை ஓங்கினான்.

''நிறுத்து! குற்றம் நம் குதிரைக்காரருடையது. அவனை ஒன்றும் செய்யாதே!'' என்று வண்டிக்குள்ளிருந்த வீர வாலிபர் மகாராஷ்டிர மொழியில் காவலனிடம் கூறினார். உடனே ''ராம் ராம்'' என்று வணங்கினான் காவலன். **(தொடரும்)**

மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்



பி.வி.ஆர்

## அத்தியாயம் 16

**பா**கீரதி பைத்தியம் பிடித்தவள் போல் வீட்டினுள்ளேயே அலைந்து கொண்டிருந்தாள். சீதாவால் கூட அவளைத் தேற்ற முடியவில்லை.

''என் வயித்திலே உதிச்ச ரத்தினம் எங்கேதான் சீரழியறாளோ!'' என்று அவள் நாள் முழுதும் புலம்பிக் கொண்டே இருந்தாள்.

சந்தானம் பாகீரதியைத் தேற்றுவதைவிட, அவள் பக்கம் யாரும் நெருங்காமல் இருப்பதே நலம் என்று கருதி, கமலாவிடம் யாரையும் வீட்டினுள் அனுமதிக்க வேண்டாம் என்று சொன்னான். ஆனால் அரிசிக்காரன் தெருவுக்குத் தடை உத்தரவு போட முடியுமா அவனுக்கு?

அன்று மத்தியானம் விஷயத்தை விசாரிக்க லட்சுமி அம்மாள் வந்தாள். தன் பிள்ளையுடன்தான் ஜானு சென்றிருக்க வேண்டும் என்று தீர்மானமாக நம்பிய அவள், ராஜாவைப் பற்றிய தகவல் ஏதாவது கிடைக்குமா என்ற துடிப்புடன்தான் வந்தாள். 'எப்படியாவது அவனைப் பிடித்து, ஜெயிலிலே தள்ளினாலும் தேவலை' என்று அவள் கூடம் அதிர ஓலமிட்டாள். 'அவனுக்கு வேறுவிதத்தில் புத்தி வராது' என்றும் கத்தினாள்.

பாகீரதி அவளுடன் பேசவேயில்லை! என்ன பேசுவது? 'என் பெண்ணை உன் பிள்ளை இழுத்துக் கொண்டு போய் விட்டானே! நீ என்ன ஜவாப் சொல்றே?' என்று கேட்பதா?

சாயங்காலம் ஆறு மணிக்கு ரவியும் அகிலாவுமாக வந்தார்கள்.

''எனக்கு மனசுக்கு ரொம்ப கஷ்டமாக இருக்கிறது, மாமி!'' என்ற ரவியிடம் பாகீரதி, ''என் தலைவிதி..... ஊரே சிரிக்கிறது''' என்று கதறினாள். அகிலாவும் சீதாவும் என்னென்னவோ பேசித் தீர்த்தார்கள்.

முடிவு அன்றிரவு, முந்தின இரவைப் போல் கழிந்தது.

ஆனால் சந்தானம் மட்டும் தைரியமாக இருந்தான். ஜானுவிடம் அவனுக்கு எப்போதுமே அபார நம்பிக்கை உண்டு. எதிர்பாராதவிதமாகத்தான் அவள் ராஜாவைச் சந்தித்திருக்க வேண்டும். ஓடிப் போய் விட வேண்டும் என்று ஜானு சொப்பனத்தில்கூட எண்ணியிருக்க மாட்டாள். ஒரு திடீர்ச் சம்பவம் நிகழ்ந்து, ஜானுவால் அதனின்றும் நழுவ முடியாமல் போயிருக்க வேண்டும். இல்லாவிட்டால், அவள் வீட்டுக்கு யார் மூலமாவது தகவல் அனுப்பியிருப்பாள்.

ஜானுவின் உயிரைப் பற்றியோ, அவளுடைய க்ஷேமத்தைப் பற்றியோ சந்தானம் கவலைப்படவில்லை. அவள் தற்போது எந்த ஊரில், எந்த நிலையில் இருக்கிறாள் என்ற கேள்விதான் அவன் மனத்தை அரித்துக் கொண்டேயிருந்தது. ஒரு வேளை அவளால் ராஜாவின் பிடியிலிருந்து தப்ப முடியாமல் போய் விட்டதோ என்றுகூடச் சந்தேகித்தான்.

**மு**தல் நாள் முழுதும் அன்ன ஆகாரமின்றித் தவித்த பாகீரதி, மறு நாள் படுக்கையில் சோர்வுடன் கிடக்க, சீதா அவளை ஒரு வாய் சாப்பிடும்படி மன்றாடினாள்.

''அம்மா, ஜானு இன்னிக்கோ நாளைக்கோ கட்டாயம் வந்துவிடுவாள்.... ஒரு பிடி சாப்பிடு '' என்று சீதா கெஞ்சினாள்.

''நான் கெட்ட கேட்டுக்குச் சாப்பாடு ஒண்ணுதான் குறை.... நான் இப்படியே சாகணும்... அப்போத்தான் என் மனசுக்குச் சாந்தியிருக்கும்....!''

''ஜானு வந்து விடுவாள் அம்மா...''

''மாட்டாள்... அவள் வரமாட்டாள்... அவளுக்கு எப்போதுமே தன்

சுகம்தான் பெரிசு.... அவனுக்கு அம்மாவின் நினைவே இராது...அந்தப் பாழாய்ப் போற ராஜா அவனை நன்னா மயக்கியாச்சு.... இன்னமே ரெண்டு பேரும் நாசமாகப் போனாலும் எனக்குக் கவலையில்லை......!''

''மனசை அலட்டிக்காதே, அம்மா!'' என்றாள் கமலா.

''கமலாவா டீ..... போ... போ.... நீயும் எவனையாவது இழுத்துண்டு ஓடு.... மலை மலையா மூணு பெண்களைப் பெத்த குத்தத்துக்கு அநுபவிக்க வேண்டாமா? அநுபவிக்கிறேன். பெத்த பெண்களைக் கட்டிக் கொடுக்க நான் எப்போ கையாலாகாமல் போய்விட்டேனோ, அப்போதே மூணையும் சமுத்திரத்திலே தள்ளி, நானும் விழுந்திருக்கணும்.....!''

''ஏம்மா, இப்படி நீயே நொந்துக்கிறே ?'' — என்றாள் சீதா.

''நான் நொந்து கொள்ளலேடி.... உங்க அப்பனை ஒருத்தன் சமயம் பார்த்துக் கொன்னான். அன்னிக்கு ஆரம்பிச்சுதடீ இது.... இல்லாட்டா இந்த வீடு இப்படியாடீ இருக்கும்...? என் தலைவிதி.... ஆம்படையானை முழுங்கிப்பிட்டு நான் உடம்பை வளர்த்திண்டு, வெட்கமில்லாம, மானமில்லாம இருக்கிறேன்..... இன்னிக்கு ஒரு பெண் ஓடினா.... நாளைக்கு இன்னொருத்தி ஓடுவா..... அப்புறம் எனக்கு என்னடீ இருக்கு வாழுறதுக்கு? ஊர் சிரிக்கிறதையும் உலகம் சிரிக்கிறதையும் இந்தக் காதிலே கேட்டுண்டு, கூனிக் குறுகிச் சாகணும்! சாவு ஒண்ணு தாண்டி எனக்கு இப்போ வரணும்!''

அம்மாவின் பிதற்றல் நாள் முழுதும் ஓலமாக எழுந்தது. தாயாரின் கண்ணீரைத் துடைக்க முடியாத சீதா தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

இரவு பத்து மணிக்கு ஒரு தந்தி வந்தது. சந்தானம் கை பரபரக்க உடைத்தான். சீதாவும் கமலாவும் நெஞ்சம் பதைபதைக்க அருகே வந்து நின்றார்கள்.

''க்ஷேமம். காலையில் புறப்படுகிறேன் — ஜானா ''

சீதா வெறியில் அம்மாவை நோக்கி ஓடினாள். அரை உணர்வில் கிடந்த அம்மாவின் காதுகளுக்குப் பெண் சொன்ன செய்தி ஏறியதோ, என்னவோ?

குருவாயூரை வண்டி அடைந்த போது சரியாக ஆறு மணி. கோவிலுக்குப் பின்புறத்தில், ஒரு கம்பி அழியிட்ட வீட்டின் முன் காரை நிறுத்திவிட்டு ராஜா இறங்கினான்.

''வாருங்கள், வாருங்கள். சொன்னபடி வந்துவிட்டீர்களே!'' என்று ராஜாவை வரவேற்றார் ஒரு வைதிகர்.

''எல்லாம் தயாரா ?''



''எல்லாம் நீங்க சொன்னபடி தயாராக இருக்கு.... முதல்லே காப்பி சாப்பிடுங்கள்.... அப்புறம் குளித்து விட்டு, விரதத்துக்கு உட்காரலாம்.... அடியே காமு, பொண்ணை உள்ளே அழைச்சுண்டு போ.... வா, அம்மா பயப்படாதே....போய்ப் பல் தேய்ச்சுக் கைகால் அலம்பிக்கோ.... கிணறு இருக்கு.... நல்ல தீர்த்தம்தான்....!''

ஜானு இயந்திரமாக நடந்தாள். அவளுக்குக் கலியாணம்! அன்றைக்கு நடக்க வேண்டும் என்று ராஜா ஏற்கனவே தீர்மானித்து விட்டான். இதிலிருந்து தப்ப வேண்டும் என்ற எண்ணமே அவளுக்குத் தோன்றவில்லை. ராஜாவை அவள் மனத்தில் வரித்தபின், அவள் வெறுக்கும்படியாக எவ்வளவோ காரியங்களைச் செய்தாகி விட்டது. ஆனாலும் முதன் முதலாக மனத்தில் வரித்த கணவனை அவளால் ஒதுக்க முடியாது! எதற்காக ஒதுக்க வேண்டும்? சீதாவின் வாழ்வே அவளுடைய இந்தக் கலியாணத்தில்தானே அடங்கியிருக்கிறது ?

காமு என்கிற காமாட்சி, அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

ஸ்நானம் செய்யும்போது ஜானுவுக்கு அழுகை வந்தது. இப்போது விரும்பினாலும் அவள் திமிறிக் கொண்டு கொல்லை வழியாக ஓடிவிடலாம்! ஆனால் கோழை போல் ஓடி, சீதாவின் எதிர்காலத்தை அவள் தன் காலடியில் போட்டு மிதித்து நசுக்க மாட்டாள்.

அவளுக்குக் கலியாணம்! ஆனால் பெற்ற தாயார், உடன் பிறந்த சகோதரிகள் யாருமில்லை. உயிருக்குயிரான சிநேகிதிகள் வாழ்த்துக் கூற அங்கே இல்லை. என்றென்றும் புன்னகை பூத்த முகத்துடன் கேலி செய்யும் சந்தானம், அண்ணனுக்கும் மேலாகப் பாசத்தைக் கொட்டும் சந்தானம் இப்போது இல்லை. இவர்கள் யாருமின்றி அவள் அக்கினி ஒன்றையே சாட்சியாகக் கொண்டு மணக் கோலம் கொள்ளுகிறாள்.

ஏழரை மணிக்கு, நான்கைந்து வேதியர்கள் குழுமினார்கள். அக்னிக்கு முன் மாலையும் கழுத்துமாய் ஜானு உட்கார, வேதியரே அவளைக் கன்னிகா தானம் செய்து கொடுக்க முன்வந்தார்.

ராஜா, மந்திர உச்சாடனைக்கு நடுவே அவளுடைய கழுத்தில் மாங்கல்யத்தைக் கட்டினான். ஜானுவின் கண்களினின்றும் பெருகிய கண்ணீர், அவளுடைய புறங்கையை நனைத்தது.

ஆனால் அவள், அக்கண்ணீருடே, அக்னியைப் பார்த்தாள். சீதாவின் முகம் கொழுந்துவிட்டு எரிந்தது.

கோவிலில் குருவாயூரப்பன் புன்னகை தவழ நின்றான்.

இளம் தம்பதி பாலகிருஷ்ணனை வலம் வந்தார்கள். ஜானு மனமாரத் தெய்வத்தைப் பிரார்த்தித்தாள். சீதா, சீதா, சீதா ஒருத்திதான் அவளுடைய உள்ளத்தில் அப்போது குடியிருந்தாள்.

நேரம் செல்லச் செல்ல, ஜானுவின் கலகலப்பும் சிரிப்பும் அதிகமாயின. ராஜாவிடம் மனம் விட்டுப் பேசினாள்.

''ஜானு! இப்போதுதான் நீ என் பழைய ஜானு!'' என்று அவன் பூரித்துப் போனான்.

கலியாணம் நடந்த வீட்டிலேயே நடந்த விருந்துக்குப் பிறகு, பதினொரு மணிக்குக் காரில் இருவரும் புறப்பட்டார்கள்.

''நேத்து பூரா எங்கே போறோம்னு கேட்டேன், நீங்கள் பதிலே சொல்லவில்லை.... இப்போ கேட்கிறேன், உங்கள் பெண்டாட்டி என்கிற உரிமையில்.... எங்கே போகிறோம்?'' என்று ஜானு கலகலவெனச் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''இன்னும் ஒரு மணியிலே திருச்சூர். இன்னிக்கு முழுதும் அங்கே இருந்து விட்டு, நாளைக் காலையிலே புறப்படுகிறோம்.... கோயமுத்தூர் வழியாக ஊட்டி, மைசூர், பங்களூர்...... பங்களூரிலிருந்து ப்ளேன்.... பாம்பே! அப்புறம் எனக்கே தெரியாது!''

''ரொம்பப் பெரிய ஹனிமூன் தான்! திருச்சூர்லே என்ன விசேஷம்?''

''வடக்குநாதன் கோவில் விசேஷம்.. அப்புறம் பெரிய பெரிய சர்ப்பங்கள் இருக்கிற ஒரு மிருகக் காட்சிசாலை இருக்கு....!''

''நாம இரண்டு பேரும் சௌகரியமாகத் தங்க ?''

அவளுடைய கேள்வியின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட ராஜா, ''திருச்சூர் அப்படி ஒண்ணும் சின்ன ஊர் இல்லே. ஹோட்டல் இரண்டு மூன்று இருக்கு'' என்றான்.

''என்னைக் கேட்டால் திருச்சூர்லே தங்க வேண்டாம்.... நேரே கோயமுத்தூருக்குப் போய், ராத்திரிக்குள்ளே ஊட்டியை அடையலாம்....''

''நோ... நோ...எனக்கு ரொம்பக் களைப்பா இருக்கு.... இரண்டு நாளா எத்தனை மைல் கார் ஓட்டியிருக்கேன் தெரியுமா ?''

''சரி, உங்கள் இஷ்டம் !''

மூன்று மாடிகள் கொண்ட அந்த ஹோட்டலைப் பார்த்ததும் ஜானு,

''நல்ல ஹோட்டல்தானு?'' என்று கேட்டாள்.

''ஆமாம்....!''

ஹோட்டல் சிப்பந்தி, ''உங்களுக்குப் பத்து ரூபாய் அறை வேண்டுமா, பதினேந்து ரூபாய் அறை வேணுமா?'' என்று கேட்டான்.

''இரண்டுக்கும் என்ன வித்தியாசம் ?'' என்று கேட்டான் ராஜா.

''பதினேந்து ரூபாய் ரூமிலே — ரேடியோவும் டெலிபோனும் இருக்கும்!''

''நமக்கு எதுக்கு போனும் ரேடியோவும் ?'' என்று கேட்டுவிட்டு ஜானு, ''பத்து ரூபாய் அறையே போதும்!'' என்றுள்.

''இரண்டு மணிக்கு ப்ளெயின் காப்பி....நான்கு மணிக்கு மேலே டிபன் காப்பி.....!'' என்று சொன்ன ராஜா, ''ஜானு இப்பொ கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுவோம். நாலரை மணிக்கு மேலே மிருகக்காட்சிச் சாலைக்குப் போகலாம்.....'' என்றுள்.

''ஆல் ரைட்!'' என்றுள் ஜானு. பிறகு, சிப்பந்தியைப் பார்த்து, ''வெளியே வண்டி நிற்கிறது. யாரை யாவது விட்டு நன்னுத் துடைக்கச் சொல்லு!'' என்றுள்.

''ஆமாம்.... நான் மறந்து போய் விட்டேன் சொல்ல!'' என்று கூறிச் சிரித்துக்கொண்ட ராஜா, ''இன்னமே நான் மறந்தாலும் பொறுப்பா ஞாபகம் வைச்சுக்க நீ இருக்கே!'' என்றுன்.

''போதுமே, அசடு வழிகிறது!''

இரண்டாவது மாடியில் இருந்த அறை சகல சௌகரியங்களும் கொண்டு இருந்தது. இரண்டு கட்டில்கள். ஒரு பெரிய மின்சார விசிறி. அறையிலிருந்தே குளியலறைக்கும் வழி. அறைக்கு முன்னுல் ஒரு சிறிய அழகிய பால்கனி. பால்கனியிலிருந்து பார்த்தால், நீண்டு செல்லும் வீதியும், தூரத்தே ஒரு மைதானமும், அதை அடுத்த கோயிலின் சிறு கோபுரமும் தெரியும்.

''ஏன் அங்கேயே நின்னுண்டிருக்கே ஜானு? காப்பி ஆறிப் போறது!'' என்றுன் ராஜா.

''இதோ, வந்துட்டேன்!'' என்று உள்ளே வந்த ஜானுவின் கண்களில், கதவின் தாழ்ப்பாளில் தொங்கிய பூட்டும் சாவியும் பட்டன. மின்னலாக ஓர் எண்ணம் தோன்றி மறைந்தது அவள் மனத்துள்.

''அங்கே நின்னு பார்த்தா ஊரின் அழகு நன்னுத் தெரியறது....!''

''நான் தூங்கப் போறேன்!''

''ஏன் தூக்கம் வர்றதா ?''




''இரண்டு ராத்திரி நான் தூங்கவில்லை.''

''நான் காரிலே கொஞ்சம் தூங்கினேன்...'' என்ற ஜானு அவனுடைய கட்டிலில் கிடந்த போர்வையை எடுத்து உதறிப் போட்டாள்.

''உன் கைங்கரியத்தை இப்போதே ஆரம்பித்து விட்டாயா?'' என்று சிரித்த அவன் கட்டிலில் படுத்துக் கொண்டான்.

''நீயும் தூங்குகிறதானுல் தூங்கு !''

''கொஞ்ச நேரம் பால்கனியிலிருந்து ஊர் ஜனங்களை யெல்லாம் பார்க்கப் போகிறேன்....!''

''என்னமோ செய்....!''

மீண்டும் பால்கனிக்கு வந்த ஜானு, கால்மணி நேரத்துக்கு அசையாமல் தெருவையே பார்த்தவளாய் நின்றுள். அறையிலிருந்து இலேசான குறட்டை ஒலி கேட்டது. அவள் நின்ற இடத்திலிருந்தே தலையை நீட்டிப் பார்த்தாள். ராஜா மறு பக்கம் பார்த்தவனுய், உறங்கிக் கொண்டிருந்தான்.

மெல்ல அடி மேல் அடி வைத்துக் கதவை நோக்கி முன்னேறினுள் ஜானு. பூட்டும் சாவியும் அவளுடைய கைக்கு மாறின. ஓசைப்படுத்தாமல் கதவைத் தாளிட்டுப் பூட்டிக் கொண்டு அவள் மாடிப்படியை நோக்கி ஓடினுள்.

சரியாக இரண்டேமுக்கால் மணிக்கு ஜானு வரவழைத்த போலீஸ் அதிகாரிகள் வந்தார்கள்.

துள்ளிக் கொண்டு எழுந்த ராஜா இரண்டு போலீஸ் அதிகாரிகளையும், இரண்டு கான்ஸ்டபிள்களையும் பார்த்து விழித்தான். அவர்களுக்கு அருகே ஜானு குனிந்த தலை நிமிராமல் நிற்பதைக் கண்டான்.

''ஜானு, பார்த்தாயா உன் அதிர்ஷ்டத்தை. கலியாணம் ஆன அன்னிக்கே, உன் புருஷனை 'அரஸ்ட்' பண்ணி விட்டார்கள்!''

ஜானு தலை நிமிர்ந்து ராஜாவைப் பார்த்தாள்.

''என்னை மன்னித்து விடுங்கள்.... என் அக்கா வாழ வேறு ஒரு வழியும் இல்லை!''

அப்போதுதான் அவனுக்கு விஷயம் புரிந்தது. சலனமற்ற முகத்தோடு நின்ற ஜானுவின் கண்களைச் சந்தித்தன, ராஜாவின் கண்கள்.

அடுத்த விநாடி, ''ஐ ஆம் ரெடி, ஸார்!'' என்று ராஜா எழுந்தான்.

ஜானுவின் தந்தி திருச்சூரிலிருந்து அனுப்பப்பட்டிருக்கிறது என்பதைக் கண்ட சந்தானம், சீதாவையும், அழைத்துக் கொண்டு ரவியின் காரில், அகிலாவுடன் சென்டிரல் ஸ்டேஷனுக்குப் போனான். காலையில் வந்த ஒரு ரயிலிலும் ஜானு காணப்படவில்லை.

ஞாயிற்றுக்கிழமை காலை எட்டரை மணிக்குக் கொச்சி எக்ஸ்பிரஸ் சென்னையை அடைந்தது. அந்த வண்டியில் கண்டிப்பாக ஜானு வருகிறாள்என்று சந்தானம் நம்பியது வீண் போகவில்லை.

ஒரு பெட்டியிலிருந்து மெதுவாக இறங்கிய ஜானுவைப் பார்த்ததுமே அவளை நோக்கி ஓடினான் சந்தானம்.

அவளுடைய கோலமே அவனுக்குப் பெரும் புதிராக இருந்தது.

''ஜானு!'' என்று கத்தினான்.

அவள் புன்னகை தவழ எல்லோரையும் பார்த்தாள். நெற்றி நிறையக் குங்குமம். தலை நிறைய மல்லிகை. அவள் மெல்ல நடக்கும்போது, புதுப் பட்டுப் புடவை சரசரத்தது.

''ஆமாம்! ஜானுவேதான்!'' என்ற அவள், ''அக்கா!'' என்று நாத் தழுதழுக்கக் கூறிக் கொண்டே சீதாவின் தோளைப் பற்றினாள்.

''வீடே அழுகிறது, ஜானு!'' என்று சீதா கேவினாள்.

''எதற்காக அழணும்? நான் சௌக்கியமாகத்தான் இருக்கிறேன். என்னை நீ முதலில் ஆசீர்வதிக்கணும், அக்கா.... எனக்கும் ராஜாவுக்கும் முந்தாநாள் குருவாயூர் க்ஷேத்திரத்தில் கலியாணமாகிவிட்டது.... உனக்கு முன்னால் பண்ணிக் கொண்டதற்கு நீ மன்னிக்கவும் வேண்டும்!''

சந்தானத்தைத் தவிர மற்ற மூவரும் வாயடைத்து நின்றார்கள்.

''வாருங்கள்.... போகும்போது பேசிக் கொள்ளலாம்!'' என்ற சந்தானம் மெதுவாக நகர்ந்தான். மௌனமாக எல்லாரும் பின்தொடர்ந்தார்கள்.

காரை ஓட்டிய ரவியிடம், ''தயை செய்து முதலில் திருவான்மியூர் போக முடியுமா?'' என்று திடீரெனக் கேட்டாள் ஜானு.

''அப்படியே!''

''முதல்லே அம்மாவைப் பார்க்கணும், ஜானு!'' என்றாள் சீதா.

''நீ வேணும்னு மயிலாப்பூரிலே இறங்கித் தகவலைச் சொல்லு.... என் கணவருடைய தாயாரைப் பார்த்து நான் நமஸ்காரம்செய்யவேண்டாமா?''

ஒன்றும் புரியாமல் இதுவரையில் பேசாமலேயே இருந்த அகிலா, ''இப்போ ராஜா எங்கே?'' என்று கேட்டாள்.

''நான் வந்த ரயிலிலேதான் வந்திருக்கிறார்.....''

''நாங்கள் பார்க்கவில்லையே!''

சந்தானத்துக்கு விளங்கி விட்டது. அவன் கேள்வி கேட்கவில்லை.

சீதா மயிலாப்பூரில் இறங்கவில்லை. அவளும் திருவான்மியூர் சென்றாள்.

கூடத்தில் உட்கார்ந்திருந்த லட்சுமி அம்மாள், தன் வீட்டு முன்னால் ஒரு பிரும்மாண்டமான கார் நிற்பதைக் கண்டு பதைபதைத்துப் போய் வாசலுக்கு வந்தாள்.

ஜானுவைப் பார்த்த போது அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அருகே நின்ற லக்ஷ்மி அம்மாளின் கணவருக்கும் ஒன்றும் புரியவில்லை.

ஜானு மெதுவாகப் படியேறினாள். அவள் முன்னேறி வருவதைக் கண்ட லட்சுமி அம்மாள், கூடத்தை அடைந்து நின்றாள்.

''உங்கள் மருமகளை ஆசீர்வாதம் செய்யுங்கள்!''

லட்சுமி அம்மாளின் உடலே நடுங்கியது. கைகள் பரபரக்க அவள் ஜானுவின் கைகளைப் பிடித்து, மெதுவாக நிற்க வைத்தாள்.

''என்ன ஜானு சொல்றே?''

''எங்களுக்குக் கலியாணம் ஆகிவிட்டது, அம்மா!''

பின்னாலிருந்த கூடத்தில் அவள் தன் பிள்ளையைத் தேடினாள்.

அவளது பார்வையைப் புரிந்து கொண்ட ஜானு, ''அவர் எப்போ

இந்த வீட்டுக்குத் திரும்பி வருவார்னு என்னுலே நிச்சயமா சொல்ல முடியாது. ஆனு கண்டிப்பா வருவார்.... நானும் அது வரையிலே, உங்க காலடியிலேயே கிடந்து, உங்க மனசுக்கும் ஒரு மருந் தாக, காத்திருப்பேன்....'' என்றுன். நெகிழ்ச்சியில் அவனுடைய குரலே மாறியது. பிறகு, ''நான் செய்த காரியம் தப்புன்னு, அதுக்கு இனிமேல் எந்தப் பிராயச்சித்தமும் செய்ய முடியாது.... ஆனு என் புருஷனிடம் எவ்வளவு அன்பும் மரியாதையும் வைச்சிருக்கேன்னு உங்களுக்குப் போகப் போகத் தெரியும்.... என் அக்காவும் வாழனும் என்கிற வெறி என்னைப் பிடிச்சு உலுக்கி விட்டது.... அதனுலே நான் கண்மூடித்தனமா இந்தக் காரியத்தைச் செய்தேன்னு நினைக்காதே யுங்கோ.... அவள் வாழ வேறு ஒரு வழியும் எனக்குப் புலப்படலே!'' என்று கூறினுள்.

சீதாவின் விசும்பல் ஒலியை அடக்கிக் கொண்டு கணீரென்ற குரல் எழுந்தது. லட்சுமி அம்மாள் ஸ்பஷ்டமாகப் பேசினுள்.

''உன் இடத்திலே நான் இருந்தால், நீ செய்த காரியத்தை மனசிலே நினைக்கவும் எனக்குத் தென்பும் தைரியமும் இருக்குமோ என்னமோ! ஆனுல், நீ செய்ததில் எனக்கு ஒரு வருத்தமும் சங்கடமும் இல்லே...அவனுக்கு இப்படி நடக்கும்னு நான் எதிர்பார்த்ததுதான். ஒருவிதத்துக்கு இது நல்லதுதான். குத்தம் செய்தவன் யாரானுலும் அதற்குண்டான தண்டனையை அநுபவிக்காமப் போனு, தான் செய்தது குத்தமில்லே, சுலபமாகத் தப்பிக்கலாம் என்கிற நெனைப்பிலேயே சீரழிஞ்சு போய்விடுவான். அவன் இப்போ எங்கே இருந்தாலும், நீ இப்போ இந்த வீட்டிலே விளக்கேற்ற வந்துவிட்டே!''

லட்சுமி அம்மாளின் முகத்தில் அலாதியானதோர் ஒளி வீசியது. கூடமே ஒரு பயங்கர மௌனத்தில் ஆழ்ந்தது. அவள் மேலும் தொடர்ந்தாள்:

''நீ செய்திருக்கிற காரியம் இருக்கே, அதை இந்த உலகத்தாலே புரிஞ்சுக்க முடியாது..... உன் கண்ணை நீயே பிடுங்கிண்டேன்னுகூடச் சொல்லும்.... நீ இந்த உலகத்தை லட்சியம் செய்யாம இரு... ஒரு உசிரைக் காப்பாத்தியாகணும் என்கிற ஒரு நிலே வர்றப்போ, தன் கண்ணைத் தானே பிடுங்கிண்டாத்தான், அது முடியும்னு தோணினு ஒரு கண் என்ன ரெண்டு கண்ணையும் பிடுங்கிக் கொள்ளலாம்.....''

சந்தானம்தான், இப்போது மெதுவாக ஆரம்பித்தான்.

''மாமி! ஜானு இன்னும் தன் அம்மாவைப் பார்த்தாகவில்லே. உங்களைத்தான் முதலில் பார்க்கணும்னு சொன்னு.... உங்க அனுமதியோடே நாங்கள் அவளை அழைச்சுண்டு போகிறோம்......!''

''அப்படியா!'' என்ற லட்சுமி அம்மாள், ''முதலிலே நீங்கள் எல்லோரும் நான் தரும் காப்பியைச் சாப்பிடுங்கள்!'' என்றுள்.

## பின்னுரை

**ர**வி ராஜா மீது கொடுத்திருந்த புகாரை வாபஸ் பெற முயன்றுன். ஆனுல் ஜானுவே அது வேண்டாம் என்று கூறி விட்டாள்.

ஜானுவின் செய்கை அகிலாவைப் பல நாட்களாகச் சிந்திக்கச் செய்தது.

''இந்த மாட்டின் கொம்புகள் ஒவ்வொன்னும் ஒவ்வொரு பக்கமா திரும்பிகிட்டு இருக்கே ஏன்?''

''ஒரு கொம்புக்கு தி. மு. க. வர்ணமும் இன்னொண்ணுக்குக் காங்கிரஸ் வர்ணமும் அடிச்சேன். அதிலிருந்து இப்படித் திரும்பிக் கிட்டுதுங்க!''



ஒரு பெண் சகோதரியின் மீதுள்ள பாசத்தினால் இத்தகைய மகத்தான, யாரும் கனவிலும் எதிர்பார்க்க முடியாத, ஒரு விபரீதமான தியாகத்தைச் செய்ய முடியுமா என்று இரவும் பகலும் அதிசயித்தாள்.

''அகிலா! நீ உன்னை அவள் ஸ்தானத்தில் வைத்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். பதினேழு வயசிலே ஓர் அக்கா மணக்கோலத்துடன் நின்றாள். அந்தக் கோலம் அழிந்தது. மணம் உடைய, மனமும் உடைந்தது. அப்புறம் அந்த அக்கா தன் இரண்டு தங்கைகளையும் விதவைத் தாயாரையும் காப்பாற்றப் படாத பாடுபட்டாள். வாழ்க்கையில் சுகம் என்றால் என்ன என்றே தெரியாத பெண்ணான அவளுக்கு மீண்டும் இரண்டாம் தடவையாக ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.... ஆனால் அதுவும் கடைசி நிமிஷத்தில், மண்பாத்திரம் விழுந்து உடைவதுமாதிரி உடைந்து போயிற்று.... இந்த இரண்டாம் சோகத்திலிருந்து அவள் மீளுவதற்குள், தெய்வ கடாட்சம் போல், மூன்றாவது சந்தர்ப்பம்.... அதுவே வீட்டு வாசலில் கதவைத் தட்டிக் கொண்டு வந்த சந்தர்ப்பம்.... இந்த மணக்கோலத்தையும் அழிக்க விதி வழி வகுக்க ஆரம்பித்தது..... அந்த விதியை எதிர்க்க ஒரு பலி, ஒரு தியாகம் தேவையாக இருந்தால், அதை யாரால் செய்ய முடியும்? அந்தப் பெண்ணுக்கு வாழ்நாள் முழுதும் அன்பினாலும் பாசத்தாலும் அடிமையாகிவிட்ட இன்னொரு ஜீவனால்தான்.... அந்த ஜீவன் தான் ஜானு! என்னால் இந்தத் தியாகத்தை — ஆனால், தான் செய்து விட்டது தியாகம்னு ஜானு ஒரு போதும் சொல்ல மாட்டாள் — பரிபூரணமாக நம்ப முடிகிறது! ராஜாவால் ஜானுவை மறக்க முடியாது..... அதே சமயத்தில் தன் அக்காவின் சோக வாழ்க்கைக்கும் விடிவு உண்டாக வேண்டும் என்ற வெறியும் அவள் மனத்தில் அக்கினியாக எரிந்திருக்கிறது!''

''மனத்தின் போக்கை யாராலுமே நிர்ணயிக்க முடியாது.....!''

''ஒருவர் தாம் நினைப்பதைப் போலவே இன்னொருவரும் நினைக்காவிட்டால், ஒரு நொடியில் மற்றவர் அசம்பாவிதமாக நினைக்கிறார்னு சொல்லி விடுகிறார்.....கோடாநு கோடி முகங்களில் கோடாநு கோடி வித்தியாசங்கள் இருக்கலாம் என்றால், கோடாநு கோடி உள்ளங்களில், கோடாநு கோடி வித உணர்ச்சிகள் விநாடிக்கொரு தடவை கொப்புளிக்கின்றனவே, அவற்றில் வித்தியாசம் இருக்கக் கூடாதா? இருப்பதுதான் மனித குணத்தின் விசேஷம்...!

''ஜானுவின் வாழ்க்கையே உன்னுடைய ஒரு பெரிய நாவலுக்குக் கரு. கதையிலே ஜானுவின் செய்கையை அங்கீகரிப்பார்களோ என்னவோ ஆங்கிலத்திலே இருக்கிற பழமொழிதான் உனக்குத் தெரியுமே! 'கற்பனையை விட உண்மை ஆச்சரியமாயிருக்கும்!' ''

''அப்போ, நான் இந்த நாவலை எழுதவில்லை!'' என்ற அகிலா எழுந்தாள். பிறகு ''ஜானு வரும் நேரமாகி விட்டது!'' என்றாள்.

ரவி தன் வாக்குறுதியைக் காப்பாற்றி விட்டான். ஆயிரம் வாக்குவாதங்களுக்குப் பிறகு சந்தானம் தனது நெடுநாளைய பிரம்மச்சரியத்தை அகிலாவுக்காகத் தியாகம் செய்தான்.

போலீஸ் தரப்பு வக்கீலே சம்பந்தப்பட்ட குடும்பங்களின் நிலையை அறிந்து ராஜாவுக்குக் குறைந்த தண்டனையைக் கேட்டு வாங்கி அளித்தார்.

ஆறும் மாதம் விடுதலை பெற்று 'வெளியே' வந்த ராஜாவை ஜானுவும் மற்றோரும் அழைத்து வரச் சென்றபோது ரவியைப் பார்த்து அவன் நாக் குழறச் சொன்னான்:

''என்னை மன்னித்துவிடு ரவி!''

இரண்டு மணக் கோலங்களை விட அந்த இரண்டுக்குமே ஆதாரமாக இருந்த தன் மணக் கோலம்தான், குருவாயூர் க்ஷேத்திரத்தில் பாலகிருஷ்ணனுக்கு முன்னால் அவள் கொண்ட மணக்கோலம் தான் ஜானுவின் மனக் கண்களுக்கு அதிக ரம்மியத்துடன் காட்சியளித்தது.

ஜானு ஆனந்த பரவசத்தில் கண்களை மூடிக் கொண்டாள்.

''ஜானு, ஆரத்தி எடுக்க உன்னைக் கூப்பிடறா!'' என்று கமலா வந்து சொன்னபோது, ''அடுத்தபடி உன் கல்யாணம்தான்!'' என்று கூறியவாறு எழுந்தாள் ஜானு.






நெடுங்கதை

# நடு வழியில் ஒரு பயல

ஸ்ரீவேணுகோபாலன்



கூல் சன்னல் துவாரத்தின் வழியே பண்டு வெளி உலகைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஒரே இருள்! கூப்பிடு தூரத்துக்கு ஒரே வெட்ட வெளியாக இருந்ததால், அங்கங்கே உதிரிகளாக நிற்கும் பனை மரங்களையும், வேம்பு, பூவரசு மரங்களையும் மெல்லிய வரி வடிவங்களாகக் காண முடிந்தது. பனைகள் யாவும் மூட்டோடு ஆடிக்கொண் டிருந்தன. வேம்புகள் தலை விரித்துக் கரகம் ஆடிக் கொண்டிருந்தன.

“இய்...ய்...” என்று ஓர் இரைச்சல். காற்றின் வேகம் கணத்துக்குக் கணம் ஏறிக் கொண்டிருந்தது. வானமெல்லாம் அம்புகள் பாய்ந்து போவது போல் உரசல்! ஏதோ இடிந்து விழுவது போலவும் முறிந்து விழுவது போலவும் சத்தங்கள்! இயற்கை உன்மத்தமாகி விட்டது. பெரிய பிரம்பைச் சுழற்றி

யாரோ பூமியையே அடிப்பதுபோலிருந்தது. அவ்வப்போது 'பளார் பளார்' என்று ஓசைகள். மழையும் தாரை தாரையாய்க் கொட்டிக் கொண்டிருந்தது.

ஒரு மின்னல்! வானமெல்லாம் கிழிந்து வடதிசையில் ஓடி மறைந்து விட்டது. அதிலிருந்து வடித்த வெண் நீல வெளிச்சம் பூமியை ஒரு மாய ஜாலமாய்க் காட்டிவிட்டு மறைந்தது. தண்ணீரெல்லாம் பாதரசமாய் மின்னிக் கொண்டது.

அந்த மின்னல் பிரிந்த அழகும், அது வடித்த அழகும் அவன் கண்களில் குளுமையாகப் பாய்ந்தன. பண்டு தன்னை மறந்து ஒரு தரம் துள்ளிக் குதித்தான். ''வெவ்...வே!'' என்று அவன வாயிலிருந்து விசித்திர ஒலிகள் உதிர்ந்து கொண்டன. இரு கைகளாலும் தன் உடலையே இறுகத் தழுவிக் கொண்டான்.

காலையிலிருந்தே காற்று தொடங்கிவிட்டது. பெரிய பெரிய மேகங்கள் பறந்து கொண்டிருந்தன. கிழக்கிலிருந்து ஜிலுஜிலுவென வீசி வந்த காற்று சிறிது நேரத்தில் வேகம் கூடி ஊளையிட ஆரம்பித்தது. குளத்தங்கரைக்குப் போய்ப் பல் தேய்த்து விட்டு வருவதற்குள் மழை ஆரம்பமாகி விட்டது. ஆகாயம் இடைவெளியில்லாமல் கூடாரமாகிவிட்டது. பூமிமீது திடீரென்று இருள் இறங்க ஆரம்பித்து விட்டது.

பிள்ளையார் கோவிலுக்குப் போய்க் கும்பிடு போட்டு விட்டுத் தேவர் கடைக்குப் போவதற்குள் மழை வலுத்து விட்டது. தேவர் பரபரப்போடு கடையைச் சாத்திக்கொண்டிருந்தார். ''டேய், கிழக்கத்தி வண்டி வரல்லே! புசல் அடிக்கிறாப் போல இருக்கு! இன்னிக்கு வியாபாரம் வேணாம்!'' என்று கூறிக்கொண்டே பலகாரக் கடையின் முன் வாசலைக் 'கிளிக்' என்று பூட்டிவிட்டு, கையில் கல்லாப் பெட்டியை எடுத்து இடுக்கிக் கொண்டு ஓட ஆரம்பித்தார். கூரை வேய்ந்த அந்தப் பலகாரக் கடையையும், அருகில் வெறுமை வழிய நின்றிருக்கும் ரயில் நிலையத்தையும் ஒருதரம் பார்த்துவிட்டு மழையில் நனைந்து கொண்டே திரும்பி வந்தான். அப்போதே லயமாகிக் கிடந்த இந்தப் பிள்ளையார் கோவிலின் பிராகாரத்தில் ஏறி, நின்று கொண்டதுதான்! மழையாவது மழை! சொல்ல முடியாது! கூடவே ''ஓ'' வென்ற இரைச்சல்!' கோவிலின் கல் கட்டடத்தைக் காற்று உரசிக் கொண்டு ஓடுவது நன்றாகக் கேட்டது! இப்போது பகலோ, இரவோ! மணிக் கணக்காய் மழையும் காற்றும் அடித்துக் கொண்டிருக்கின்றன.

தேவருக்கு இன்றைக்கு நஷ்டம்! வியாபாரம் கிடையாது! கிழக்கத்தி வண்டி வரவில்லையாம்! ஐந்து ரூபாய் சில்லறை வியாபாரம் ஆகியிருக்கும்! சமயங்களில் பத்து ரூபாய்க்குக் கூட சரக்குகள் விற்பனையாவது உண்டு! இன்றைக்கு எல்லாம் பூஜ்யமாகி விட்டது. முக்கியமாக அவனுக்கு ஒரு பொழுதுபோக்குப் போய் விட்டது. மசால் வடையையும் முறுக்கையும் தட்டில் தூக்கிக் கொண்டு பெட்டி பெட்டியாய்ப் போய் விற்கும் முக்கியமான அலுவல் இன்று போய் விட்டது! ''ஏ, மசால் வடை!'' என்று பிரயாணிகள் அவனை அழைக்கும்போதுதான் அவனுக்கு எவ்வளவு உற்சாகம்! கர்வம்! ரயில் நிலைய ஸ்டேஷன் மாஸ்டரைப் போல் தானும் ஒரு முக்கியமான பணியைச் செய்வதாக ஒரு பூரிப்பு! சில்லறையைக் கொடுத்து விட்டு அங்குமிங்கும் ஓடி விற்பனை செய்வான். பிறகு அன்று விற்பனை செய்த நிகழ்ச்சிகள் முழுவதையும் நாளெல்லாம் நினைத்துப் பொழுது போக்குவான்! இன்றைக்கு அது முடியாமல் போய்விட்டது!

மீண்டும் மின்னல்! பிராகாரத்தின் கல் சன்னலின் துவாரங்களின் வழியாக எதிர்ச் சுவரில் மூன்று வட்டங்களாய் ஒளி! வெள்ளித் தாம்பாளங்கள் போல் கண் பறிப்பு! பண்டு துள்ளிக் கொண்டான்! சன்னல் வழியே வெளியே நோக்கினான். அடிவாரத்தில் இன்னும் துடித்துக் கொண்டிருந்த மின்னல் வாளின் ஒளியில், வெளி உலகம், படம் பார்ப்பது போல் தெரிந்தது. அடேயப்பா! ஒரே தண்ணீர்! பூவரசுகளின் அடி மரங்களைக் காணவில்லை. பார்வை தெரிந்த வரை சமதளமாய் நீர்! பூமியையே நீர் மூடி வருகிறதோ?



பண்டு பெரிய துள்ளலாகத் துள்ளினன். வேகம் அதிகம்! 'நங்'கென்று மேலே கல் தளம் தலையில் இடித்தது. சரியான அடி! முகம் கோணிற்று. தலையைப் பிடித்தவாறு கீழே உட்கார்ந்து விட்டான்.

காதுக்குள் சிள்ளிரைச்சல்! கண்கள் முன் மத்தாப்புக்களாய்த் தீப்பொறிகள்! உச்சந் தலையில் எரிவது போல் உஷ்ணம்!

இந்தத் தடவை அவன் மீண்டும் எழுந்திருக்கவில்லை. சுவர் ஓரமாக 'ட' போல் மடங்கி உட்கார்ந்து கொண்டான். தாக்கலின் வலி நரம்புகளில் கடைசித் துடிப்புக்களாய் வடிந்து கொண்டிருந்தது. ஆசுவாசமடையப் பல நிமிடங்கள் ஆயின. மூடிய கண்களை மெதுவாகத் திறந்தான். ஓர் அமைதி! துறுதுறுவென்று திரிந்த உயிரை அடித்துக் கீழே கிடத்தியது போல் அமைதி.

இம்மாதிரி இயக்கங்களே இல்லாத அமைதி, எப்போதாவது துர்லபமாய்த்தான் அவனுக்கு ஏற்படுவதுண்டு. அந்த அமைதியின் லயிப்பில் சில கணங்கள் தோயும்போது, சீராகப் படிந்த அவன் மனத் தளத்தில் எழும் ஒரே ஒரு நினைவு வசந்தரம்தான்!

அவளைப் பற்றிய எல்லாமே கனவுகள் போலத்தான் தோன்றும். மனத்தில் நிலை நிறுத்த முடியாதபடி அவளது சில தோற்றங்கள் ஓடி மறைந்து விடும்! சிறிது நேரம் நிலைத்து நிற்கும் ஒரே ஒரு தோற்றம், அவள் தயக்கமாய் எதையோ பார்ப்பதுபோல் நிற்கும் ஒரே ஒரு காட்சிதான்!

அந்தத் தயக்கமே அவளுக்கு அழகு!

அங்குமிங்கும் புழங்கிக் கொண்டிருக்கும் போது, திடீரெனச் சித்திரம் உறைந்தாற் போல் அவள் நிற்கும் காட்சி... ஓடும் கணங்களில் ஒன்று நிலைத்து நின்றுவிட்டது போல், கிண்ணைக் குழியில் நீர் தங்கிவிட்டதுபோல் ஆடாது, அசையாது... நெஞ்சத்தில் அந்த வடிவம்தான் தங்கி நிற்கிறது.

அவளிடம் பேச வேண்டும் என்று எவ்வளவு ஆவல்! ஆனால் நெருங்கிச் சந்திக்கும் சந்தர்ப்பங்கள் உண்டாவதில்லை. உண்டாக்க விடுவதுமில்லை. இந்த அப்பா இருக்கிறாரே...

ஒருதரம் அவள் சாப்பிட்டு விட்டு வரும் போது, தொழுவில் நின்று கொண்டு மிக மெல்லிய குரலில் 'வசந்தரம்!'' என்று அழைத்தான். தலை நிமிர்ந்து பார்த்தாள். பார்த்த வேகத்திலேயே குனிந்துகொண்டாள். கண்கள் ஏன் அவன் மீது லயிக்க மாட்டேனென்கின்றன? பிடிக்காததைக் கண்டுவிட்டது போல் அவள் ஏன் தலை குனிகிறாள்?

வீட்டில் அப்பாவோ, அண்ணியோ இல்லாத சந்தர்ப்பங்கள் குறைவாகவே இருக்கின்றன. அந்தச் சமயத்தில் மெள்ள அணுகி அவளிடம் பேச நினைத்தால்... அவனுக்கே அந்தத் துணிவு இல்லை. அவளும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

இன்னும் நினைவு இருக்கிறது. பூரங்கம் அன்று அபூர்வமாகப் பக்கத்து ஊர் திருவிழாவுக்குப் போய்விட்டார். அண்ணி அரிக்கன் சட்டியை எடுத்துக் கொண்டு மாவு மில்லுக்குப் போய்விட்டாள். பண்டு அன்று வேலை முடிந்து முன் மாலையிலேயே வீட்டுக்கு வந்து விட்டான்.

அப்பாவும் அண்ணியும் வீட்டுக்குள் இல்லை என்பதைப் புரிந்து கொண்டு விட்டான். ஒரே பரபரப்பு! வீட்டுக்குள் நுழைந்து முன் புறத்திலிருந்து கொல்லை வரை ஒரு தரம் போய் வந்தான். வசந்தரத்தைக் காணவில்லை. வீடு திறந்து போட்டபடி கிடந்தது. எங்கே போயிருப்பாள்?

யோசித்தபடியே உள்ளே வந்தபோது, குச்சிலுக்குள் ஒரு விசிப்பு! மெள்ளப் போய்ப் பார்த்தான். கதவோரத்தில் வசந்தரம் உட்கார்ந்திருந்தாள். உச்சந்தலையின் நடு ரேகை பளீரென்று தெரிய, குனிந்துகொண்டிருந்தாள். கழுத்தும், தோள் சரிவும் சந்தனமாய் வழிந்திருந்தன.

''வசந்தரம்!''

தலையை நிமிர்த்திவிட்டுக் குனிந்துகொண்டாள். அவனுக்குப் 'பக்'கென்றது. அந்தப் பக்கமும், இந்தப் பக்கமும் மிரண்டு பார்வையைத் திருப்பிக் கொண்டான். அழுகை வரும் போலிருந்தது. கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

''ஏன் அழுவறே, வசந்தரம்?''

அவள் பேசவில்லை. மெதுவாகக் குனிந்து அவளது ஒரு கையை எடுக்கப் போனான். அவள் உதறிக் கொண்டாள்.

''ஏன் அழுவறே...?''

அவள் நிமிர்ந்தபோது பார்வை சீறிக் கொண்டு கிளம்பியது.

''இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தால் வேறு என்னதான் செய்ய முடியும்?''

அவன் வெலவெலத்து நின்றான். அவள் எழுந்து நகர்ந்து கொண்டாள். அவன் வெறுமையாய்ப் பார்த்தவாறு தலையைச் சொறிந்து கொண்டான். அதற்குள் வாசலில் அண்ணி ''என்ன...'' என்று இழுத்து வரிந்து பிலாக்கணம் பாடிக் கொண்டு வருவதைக் கண்டதும், கூடத்தில் நுழைந்து கொல்லைப்புறம் ஓடி விட்டான்.

அவனுக்குக் கூட அலட்சியமா?...அல்லது மனக் கஷ்டத்தால் ஏற்பட்ட வெறுப்பா? அவனைக் கண்டாலேயே அவளுக்குப் பிடிக்கவில்லையோ?

அவன் பிறப்பு அப்படி! பிறந்த பிறப்பே ஊரில் சலசலப்பு எழுப்பிய பிறப்பு! அப்பா பூரங்கத்துக்கு அப்போது ஐம்பத்தெட்டு வயது! 'இந்த வயசிலே குழந்தையா?' என்று சிரிப்பு. பிறந்த நான்காவது நாளில் தாயாருக்குச் சீட்டுக் கிழித்தாகி விட்டது. துரும்பாய் மெலிந்து கிடந்த குழந்தை, எலும்புக் கூடு மேலும் கீழும் ஏறி இறங்க மூச்சு விடுவதைப் பார்க்கும்போது பூரங்கம் ''ம்...ம்... இது தக்காது! இதுவும் பூடும்..'' என்று சொல்லிக் கொண்டே மனத்துக்குள் திருப்திப்பட்டுக் கொண்டிருந்தார்.

ஆனால் பிள்ளை தக்கி விட்டது. நோஞ்சான் பிள்ளையாய் வளர்ந்து வந்தது. சோனிப் பண்டு என்று ஊரில் எல்லோரும் அழைத்தார்கள். சர்க்குச்சி போல் கால்கள்! கழுத்து நீளம்! இதனால் ஒரு நெட்டையான தோற்றம்! சருகு இலை போல் கூடு தெரிந்த மார்பு! முகத்தில் சதா ஒரு பேந்தல் பார்வை! எப்போதும் மிரளும் ஒரு மிரட்சி!

பூரங்கத்துக்கு எரிச்சல்தான். ''டேய், உதவாக்கரை!'' என்று கூப்பிட்டு வேலை

மேல் வேலை ஏவிக் கொண்டிருந்தார். சிறு தவறு செய்து விட்டால் கூடச் செதும்பாக அடி. ஒருதரம் சதை கன்னிப் போய்ப் பிளந்து விட்டது. சீழ் வைத்துப் பெரிதாகிப் பிறகு ஆறுவதற்கு மூன்று மாதங்களாகி விட்டன.

மூத்த பிள்ளைகள் யாவரும் படித்து, சின்னச் சின்ன உத்தியோகங்களில் வெளியூர் போய்விட்டார்கள். பண்டுவுக்கு மட்டும் படிப்பு வரவில்லை. ஏழாவதுக்கு மேல் இம்மியும் ஏற முடியவில்லை. வகுப்புப் பிள்ளைகள் வேறு, ''சோனி!... கோணக் காலா.... தேவாங்கு ராஜா!'' என்று பட்டம் சூட்டி விட்டார்கள்; ஒதுக்கியும் விட்டார்கள். வெட்கம், பயம், நடுக்கம் எல்லாம் கூடாவத்திலேயே உண்டு! வீட்டில் கவனக் குறைவு வேறு சேர்ந்து கொள்ளவே, இருபது வயது களைத் தாண்டிய பின்னும், பண்டு மனத்தில் பூஞ்சையாக வளர்ந்தது மட்டுமின்றி, வடிவத்திலும் ஓர் அசட்டுத் தோற்றத்துடன் வளர்ந்து விட்டான்.

அவனுக்கு வயது ஏற ஏற வீட்டில் அண்ணியின் நச்சரிப்பு கூடிக் கொண்டே வந்தது.

''இந்த எருமையை வச்சுக்கிட்டு என்ன செய்யறதுன்னு தெரியல்லியே! இதுக்கு ஒரு வழி பிறக்காதா?'' என்று அண்ணி தைரியமாகவே பூரங்கத்திடம் அவனைப் பற்றிப் புகார் செய்ய ஆரம்பித்தாள்.

''எல்லாம் கொஞ்ச நாளைக்குத்தான்! லோகோ ஷெட்டு நாயுடுகிட்டே சொல் விட்டேன்! வேலை வாங்கிக் கொடுத்திடுவாரு! அப்புறம் அவனுக்கு ஒரு பெண்ணைக் கட்டி வச்சுட்டா என் கடமை தீர்ந்து போயிடும். பண்ணறதெல்லாம் பண்ணியாச்சு. இனிமே வாழ்ந்துக்கோடான்னு பிரிச்சுத் தனியே அனுப்ப வேண்டியது தான்!'' என்று பூரங்கமும் வெறுப்போடு கூறிக் கொண்டார்.

லோகோ ஷெட்டில் வேலையும் கிடைத்து விட்டது. நாயுடு ஏமகாதகர். இனசரிக் கூலியாளாக அவனை நியமித்து அவன் ஊதியத்தில் பாதியை எடுத்துக் கொண்டு, கையெழுத்துப் போடச் சொல்லிக் கொடுத்து விடுவார். வேலையும் கடுமை! பட்டறையில் சம்மட்டி அடிப்பதிலிருந்து ரயில் இஞ்சின் மீதுள்ள புகைக் கரியை யெல்லாம் 'கிளீன்' பண்ணுகிறவரை ஏதாவது ஒரு வேலை! அண்ணி கட்டிக் கொடுத்த சோறு அரை வயிற்றுக்கும் காணாது. சாப்பிட்ட ஒரு மணி நேரத்துக்கெல்லாம் கடும் பசி வயிற்றைக் கிள்ள ஆரம்பித்து விடும். அப்போதெல்லாம் அவனுக்குக் குறுக்குச் சம்பாத்தியம் ஒன்று தோன்றியிருந்தது. ரயில் நிலைய யார்டில் 'கூட்ஸ்' வண்டிகளைப் பிரித்துச் சேர்க்கும் ஷண்டிங் இஞ்சின்களில், பயர்மேன் உத்தியோகம்தான் அது! இதெல்லாம் 'அனுமத்து' வேலை! நிரந்தர பயர்மேன் யாருக்காவது எங்காவது போக வேண்டி வந்தால், ஒரு நாலணாவைக் கொடுத்துப் பண்டுவை உட்கார்த்திவிட்டு முழு நேரமும் 'கம்பி' நீட்டி விடுவார்கள். இஞ்சினில் வேலை செய்வதில் பண்டுவுக்கு ஆசை! பிரளயமே வந்தாலும் வெளி உலகைக் கவனிக்காமல் கரியை அள்ளி அள்ளித் துவாரத்துக்குள் சிதற விட்டுக் கொண்டே யிருப்பான். அருகில் நிற்கும் டிரைவர்தான் அடிக்கடி அதட்டி அவனை நிறுத்தி வைப்பார். 'திமுதிமு' வென்று ஒரே ரத்தக் குழம்பாய் உள்ளே தீ எரிவதைப் பார்ப்பதில் ஒரு மகிழ்ச்சி! அப்புறம் பிரேக் கட்டையை விரைவாகச் சுழற்றிக் கொண்டே டிரைவர் உள்ளே என்னென்ன விசைகளை எப்படி இயக்கு கிறார் என்பதை உன்னிப்பாகக் கவனிப்பான். டிரைவர் ஒரு மந்திரவாதியைப் போல் அவனுக்குத் தோன்றுவார். இஞ்சின் அவர் கையில் அடங்கிய பூதம் போல் தோன்றும். நீராவி வீசும் ஓசையும், பிஸ்டனின் 'களாங் களாங்' என்ற சத்தமும், லயன் மாறும் வண்டியின் 'கிச் கிச்' ஒலிகளும் அவன் செவிகளில் இன்ப மயமாய்ப் பாய்ந்துகொண்டிருந்தன. அந்தி நேரத்தில் வேலை முடிந்து இறங்கும்போது, 'ஏண்டா இறங்குகிறோம்' என்ற மன வருத்தத்துடனேயே இஞ்சினை விட்டு இறங்குவான்.

இந்த வேலையைக் காட்டித்தான் அப்பா, பூட்டு கண்ணப்பரின் பெண்ணைப் பேசிக் கல்யாணத்தை முடித்து வைத்து விட்டார். கல்யாணம் ஆகி ஆறு மாதங்கள் ஓடி விட்டன. இன்னும் பூரங்கம் பண்டுவைத் தனிக் குடித்தனம் வைத்து அனுப்பவில்லை. அண்ணியின் எரிச்சலோ நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. அவனோடு சேர்த்து வீட்டில் உள்ள அந்தப் பெண்ணையும் திட்ட ஆரம்பித்து விட்டாள்.

சமயங்களில் பூரங்கத்தைப் பார்த்து, ''கல்யாணமும் கட்டியாச்சே, இன்னமும் எத்தினி நான்தான் இப்படி...'' என்று இழுத்துக் கொண்டாள்.

''இன்னும் 'அனுமத்து' வேலையிலேதானே இருக்கான். வேலை மட்டும் காயம் ஆகட்டும்! தனிக் குடித்தனம் போட்டு அவனை அனுப்பி விடலாம். அதுக்கு இடையிலே அவன் குழந்தை குட்டியைப் போட்டுக் குடும்பத்தைப் பெருக்கிடப் போறானேன்னுதான் கண்காணிப்பிலே வச்சிருக்கேன்...'' என்று பூரங்கமும் இழுத்து நிறுத்தி விட்டு அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டார்.

வீட்டுக்கு வசந்தரம் வந்து ஐந்து மாதங்கள் ஆகப்போகின்றன. எனினும் அவள் அவனுக்குத் தொலைவுப் பொருளாகவே இருந்து வந்தாள். எப்போதாவது அவள் கொல்லைப்புறம் நிற்பதைக் கண்டு, அங்கே போக எத்தனிக்கையில் பூரங்கம் அவனை முறைத்துப் பார்க்கும் பார்வை...

ஓர் இரவு! வெளியே தூறிக்கொண்டிருந்தது. பண்டு வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான். வீட்டுக்குள் அப்பாவின் குரல் கேட்டுக் கொண்டிருந்தது. உடல் முழுதும் ஒரு நடுக்கம்! உள்ளே போகாமல் வெளியே திண்ணை மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான். அருகில் சன்னலில் சத்தம் கேட்கவே உள்ளே எட்டிப் பார்த்தான்.

உள்ளே மெல்லிய விளக்கொளியில் வசந்தரம் சன்னல் ஓரமாய் நிற்பது தெரிந்தது. சன்னல் மேடையில் காலைத் தூக்கி வைத்துக்கொண்டு, நீண்ட நாடாத் துணியால் கால் விரலைக் கட்டிக் கொண்டிருந்தாள்.

''காயம் பட்டுடிச்சா?''

அவன் நிமிர்ந்து விட்டு உடன் குனிந்து விட்டாள். ரத்தத்தைத் துடைப்பதில் ஈடு பட்டாள். வெண்மை வழிந்த பாதங்களில் சிவப்பின் துளிர்ப்பு செக்கச் செவேலென்று தெரிந்தது. பார்ப்பதற்கே புல்லரித்தது. விரல் நகங்கள் கூட என்ன அழகு? வரிசை யாய் அரும்பு பூத்தது போல்...

அவனுக்கு நினைவு வந்தது. லோகோ ஷெட்டில் காயங்களுக்காகத் தடவ வைத் திருக்கும் களிம்பைக் கொணர்ந்து விட்டு நுழைவாயில் பாக் கட்டையில் வைத்திருந் தான். எழுந்து போய், அதை எடுத்து வந்து அவள் முன்னால் பிரித்தான். பிறகு அவளைக் கூடப் பொருட்படுத்தாமல் களிம்பை எடுத்து அவள் விரலில் தடவ ஆரம்பித்தான்.

''எவ்வளவு பெரிய வெட்டு! எப்படி வந்திச்சு?''

''இமே அரிவாள்மணை தெரியாமக் காலே வச்சுட்டேன்.''

காலைக அவள் பிடுங்கிக் கொள்ளவில்லை. காயத்தின் மீது அவன் துணியையும் சுற்றி விட்டான். விரல்களில் படும்போதெல்லாம் கையில் அல்லித் தண்டாகக் குளிர்ச்சி ஏறியது.

அவள் முகத்தைப் பார்த்தான். தயக்க மாய் அவள் விழிகள் இமை அடிவாரத்தில் தங்கிவிட்டன. அந்தப் பார்வையின் பாவத் திலிருந்து விடுபட்ட ஒரு பொறி அவன் நெஞ்சத்தில் தீப்பற்றிய வாணம் போல் சுறுசுறுவென ஓடியது. உள்ளமெல்லாம் பூப்பொறிகள்!

ஒரு கணந்தான்! சன்னல் இடுக்கு வழி யாக அவள் கையைச் சட்டென்று பிடித் தான். பிறகு தன் பக்கமாய் இழுக்க ஆரம் பித்தான். அவள் திமிறினாள்.

''வசந்தரம்! வசந்தரம்!'' அவன் மெது வாக இரைந்தான்.

''கையை விடுங்க!''

அவள் இழுக்க, அவன் இழுக்க,...ஒடுக்கிக் கொண்ட மூச்சு அவ்வப்போது ''ஸ்ஸ்'' ''ஸ்ஸ்'' என்ற சீறலாய் வெளிவிட, கூடத்தி லிருந்து ''என்னுமது?'' என்று அண்ணியின் பிலாக்கணம் கேட்க...

உள்ளெல்லாம் வெந்து அனல் எரியும் உடம்போடு ஆடிக் கொண்டே அவன் சிறிது நேரம் நின்றான். பிறகு திண்ணையிலிருந்து குதித்து ஓடி விட்டான்.

''விர்....ர்ர்ர்....ர்ர்ர்...'' உள்ளே ஒரு குப்பல் மழைத் துளிகள் தெளித்தன. முகம் நனைந்துவிட்டது. காற்று இப்போது கல் சன்னல் துவாரத்தின் வழியாக உள்ளே அடிக்கிறது. விர்...ர்...ர்...ர்.. மறு தடவை யும் அடித்தது. மேலெல்லாம் நீர்த் துளிகள். சனியன்! ஓர் இடத்தில் இருக்க விடுகிற தில்லே.

''ஹூ ஹூ!'' என்று ஒரு பிராணி கத்து வது போலவே காற்று இரைந்து கொண்டிருக் கிறது. எழுந்து போய் மற்றோர் இடத்தில் ஒதுக்கலாய் உட்கார்ந்தான். இந்த மழை எப்போது விடப் போகிறது?

சுவரில் சாய்ந்தான். மனத்தில் ஏதோ நினைவு விடுபட்டு முண்டமாய் நிற்பதுபோல் பட்டது. என்ன நினைத்தோம்? ஓ.... வசந் தரம்தானே! ஆமாம், ஆமாம்! எல்லாம் ஞாபகத்துக்கு வருகிறது....

அடுத்த வாரம் வசந்தரத்தின் அப்பா ஊரி லிருந்து வந்தார். ''பெண்ணு இப்படித் துரும்பாப் போயிடுச்சே! வீட்டுக்கு அழைச்சுப் போய் உடம்பைத் தேற வைச்சுக் கொண்டு வரேன்!'' என்று கூறி அவளை அழைத்துப் போய் விட்டார்.

அவள் போன கவட்டிலேயே, பண்டு வுக்கு ஜுரம் ஆரம்பித்தது. ஒரு வாரத்தில் வைசூரி என்று தெரிந்துவிட்டது. வாயிலில் வேப்பிலைத் தோரணம் கட்டினார்கள். அண்ணி திட்டிக் கொண்டே பணிவிடை செய்தாள். வயக்காட்டு அம்மன் கோயில் பூசாரி இரவு களில் வந்து மந்திரித்து விட்டுப் போனார்.

ஒரு மாதமாகப் பெரிய அம்மை அவன்மீது விளையாடியது. கடுமையாகப் போய் இப்பவோ அப்பவோ என்றுகூட இருந்தது. ஆனால் பண்டு இந்தத் தடவையும் தக்கி விட்டான்.

பிழைத்து எழுந்தபோது மேலெல்லாம் உளுத்தம்பருப்பு அளவாய்க் குழிகள்! வலது கண்ணில் பூ விழுந்துவிட்டது. கொஞ்ச நாட்கள் பேச்சு வரவேயில்லை. குழறிக் குழறிப் பார்த்தான். கடைசியில் பேச்சு போய்விட்டதென்று தெரிந்தது.

கண்ணாடியில் பார்த்தபோது, தான் இவ் வளவு அவலட்சணமா என்று நினைத்துக் கொண்டான். வசந்தரம் பார்த்தால் என்ன நினைப்பாள்? ஆள்விட்டு அனுப்பியும் அவள் பாட்டில் பிறந்த வீட்டில் தங்கிவிட்டாளே! இனிமேல் திரும்பி வரமாட்டாளோ?

வரவேயில்லை. ஒவ்வொன்றாக, இரண்டு வருடங்களும் போய்விட்டன.

அவளது குடும்பத்தைப் பற்றி சேதிகள் வந்து கொண்டிருந்தன. ஊசிப்பட்டி தரகர் தான் அவ்வப்போது கூறிக் கொண்டிருந் தார். மைத்துனன் அய்யாவு பட்டணத்தில் ஏதோ 'பிஸினஸில்' இறங்கிவிட்டானாம்.... பணம் கொழிக்கிறதாம்! குடும்பமே மாறி வருகிறதாம்! வசந்தரம் மீண்டும் படிக்கத் தொடங்கி விட்டாளாம். கேட்கக் கேட்க ஆச்சரியமாக இருந்தது.

அதற்குப் பிறகு பூரங்கத்தோடு கோர்ட் டுக்குப் போனதுதான் நினைவுக்கு வருகிறது. அப்போது, வசந்தரத்தைப் பிரிந்து கிட்டத் தட்ட இரண்டரை வருடங்கள் ஓடியிருக்கும். கோர்ட்டு வராந்தாவில் அப்பாவோடு நின்ற போது அவன் கண்ட காட்சி கண்களைக் கூசச் செய்தது. விழிகள் தாமாகவே இடுங்கிக் கொண்டன.

எட்டத்தில், தூணருகில் நிற்பது வசந் தரம்தானே! பளீரென்று கோர்ட்டு வராந்தா வில் மின்னல் இறங்கி நிற்பதுபோல் நிற் கிறாள். மேலே, நீல நிறத்து நைலான், கொடியாய்ச் சுற்றி ஏறியிருக்கிறது. கழுத் தில் நெக்லஸ் தீ அழல் போல் ஜொலிக்கிறது. கூந்தலை இரட்டைப் பின்னலாக முன்புறம் தொங்கப் போட்டிருக்கிறாள். கையில் ரிஸ்டு வாட்சு. காலில் செருப்பு! இவள் பழைய வசந்தரமா? அல்லது புதிய ஜன்மம் எடுத்த வேறு வசந்தரமா....?

அவள் அந்தப் பக்கம் நிற்கிறான் என்பதற் காக அவள் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்

கொண்டாள். பூரங்கம் அவனே ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டார்.

பண்டுவுக்குப் பிரமிப்பு தாளவில்லே. உடலெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது. மனத்தில் அடிபட்டவன் போல் வளைந்து கொண்டிருந்தான். வசந்தராமும் மற்றவர் களும் நகர்ந்து அப்பால் போய்விட்டார்கள். பண்டுவின் பார்வை விலகிறது. வெளியே படிக்கட்டுகளின் அருகில் பார்வை போன தும் மீண்டும் திகைப்பு!

அங்கே கார் ஒன்றின் அருகில், பாண்டும், டெரிலின் சட்டையுமாய் நின்று கொண்டிருப் பது மைத்துனன் அய்யாவுதானு? ஜோடிப் பெல்லாம் பிரமாதமாக இருக்கிறதே! முன் எழுந்த கிராப்பு வளையங்களாக நெற்றியில் விழுந்து கொண்டிருந்தது. கையில் ஒரு சிகரெட்! பூமியையே பார்க்காமல் கண்கள் மிதக்கின்றன. பார்வையை ஒரு தரம் நேரில் சந்தித்த போது, பண்டு சிரித்தான், பதிலுக்கு அய்யாவு சிரிக்கவில்லே.

ஊசிப்பட்டித் தரகர் அப்பாவோடு வாதம் பண்ணிக் கொண்டிருந்தார். பூரங்கம் பெரிய சால்வைத் துணியை எடுத்து, மேலெல்லாம் முக்காடு போர்த்திக் கொண்டு கோர்ட்டு கல் பெஞ்சி மேல் சம்மணமிட்டு உட்கார்ந்து கொண்டிருந்தார். பழைய தோரணேக் குரல் போய் விட்டது. ஆஸ்துமா உள்ளே 'கர்கர்' என்று இழுக்கிறது. இருந்தாலும் பேச்சில் இன்னும் காட்டம் இருக்கிறது.

இடையில், ''டேய், பண்டு! இப்படி வாடா!'' என்று அழைத்தார். அவன் போய் நின்ருன்.

''உம்ம கட்சிக்காரன் மகளேக் கட்டின தால்தான் என் பிள்ளேக்கு அம்மை வார்த்து இப்படி இளேச்சுப் போயிட்டான்! மவராசி வீட்டிலே காலே எடுத்து வைத்த வேளேதான்! என் பையன் கண் பூடுத்து! பேச்சு பூடுத்து! வேலேயும் பூடுத்து! நான் ஒண்ணும் அப்படி அடாபுடி பேசறவன் இல்லே! விவாகரத்து பண்ணணும்னு, ரூபாய் இரண்டாயிரம் வள்ளிசாப் பணயம் கொடுத்துடணும்!..... ஆ.....ங்! கம்மாவா? இவன் வீட்டுப் பொண் ணுக்கு ஆறு மாசமாய் என் வீட்டிலே சோறு போட்டிருக்கேன்! கொடுத்தா கொடுக்கட் டும்! இல்லாக்கட்டி, கோர்ட்டிலே விவாக ரத்துக்குச் சம்மதிக்க மாட்டோம்னு ஒரே தீர்மானமா வாதம் பண்ணுவேன்! ஆம்.... மாம்.....!'' பூரங்கம் அழுத்தமாய்க் கூறிக் கொண்டிருந்தார்.

பிறகு ரூபாய் இரண்டாயிரமும் கைமாறிய பிறகுதான் கோர்ட்டுக்கு வெளியே, இரு தரப்பு வக்கீலுமாய்ப் பூரங்கத்தோடு கலந்து முடிவு பண்ணிஞர்கள். பண்டுவைக் கையெழுத்துப் போடச் சொன்னர்கள். பணத்தைப் பையில் திணித்து, 'லாபம்' என்று சொல்லிக் கொண்டே, ''டேய்! விவாகரத்து ஆகிப் போச்சு! இனிமே அவ பக்கம் கண்ணெடுத்தும் பார்க்காதே!'' என்று பண்டுவைப் பார்த்துக் கூறிக் கொண் டிருக்கும் போதே, அவன் அவர் கூறுவதை முதல் தடவையாக நிராகரித்து விட்டு, வசந்தரத்தின் பக்கமே பார்த்துக் கொண்டு போனது நினைவில் இருக்கிறது. அவர்கள் யாவரும் மகிழ்ச்சி பொங்க, காரின் கதவுகளே 'டப் டப்' என்று அடித்து ஏறி உட்கார்ந்து கொண்டு சரளேக்கல் சாலேயில் ''விஸ்'' என்று பறந்து போனது நினேவுக்கு வரு கிறது.



**வ**ருடங்கள்தாம் எப்படி மறை கின்றன? நினேவுகள் எப்படித் தெளிவாகவே இருக்கின்றன!

இதற்குப் பிறகு அவளை ஒரே ஒரு தரம் பார்த்திருக்கிறான். அப்போது, கிடைத்த வேலைகளைச் செய்து கொண்டு, ஊர் ஊராக அவன் சுற்றிக் கொண்டிருந்த காலம்! அப்பா இறந்து விட்டதால், நிர்க்கதியான நிலை! வி — நகர் பெரிய சாலை ஹோட்டல் ஒன்றின் முன் அவள் தென்பட்டாள். அவனுக்கு ஒரே பரபரப்பு! சாலையைக் கடந்து அவளை, நெருங்குமுன், அருகில் உள்ள காரில் அவள் ஏறிப் போய் விட்டாள். அவள் ஏறி அமர்ந்த சாயலின் அழகை அவன் மனத்தில் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டிருந்த போது, மற்றொரு நினைவும் உள்ளே அரித்துக் கொண்டிருந்தது. அவன் யார்? முன் சீட்டில் அவள் அருகில் அமர்ந்து கொண்டு காரை ஓட்டிச் சென்றது யார்?

வசுந்தரத்துக்கு மீண்டும் மணம் செய்விக்க ஏற்பாடுகள் நடப்பதாக அவன் கேள்விப்பட்டிருக்கிறான். அருகில் இருந்தது அவள் கணவராக இருக்க வேண்டும்! வட்ட முகத்தோடு, களையாய், கிராப்புத் தலை குவியலாய்க் கலைந்து விழ, எடுப்பான தோற்றத்துடன் காணப்பட்டார்! பெரிய படிப்பாளியாக இருக்க வேண்டும்!

''போகட்டும்! எங்கேயாவது சுகமாக வாழட்டும்! நான் அவளுக்குத் தகுதி அல்ல! அவள் ராஜகுமாரி!''

நினைக்கும்போதெல்லாம் கண்களில் நீர்! கடைசியாகப் பார்த்த அவள் உருவம் மனத்தில் நிலைத்துவிட்டது. ஊரெல்லாம் திரிந்து வரும்போது, நினைவில் அவளைச் சுற்றி வருவதிலேயே ஓர் அமைதி! ஒரு குளிர்ச்சி!

ஒரு மின்னல் சொடுக்கி விட்டது. அரைத் தூக்கம் போல் மூடிய அவன் கண்ணை அது தோண்டி எடுப்பதுபோல் வெளிச்சத்தைப் பாய்ச்சியது. பண்டு உதறிக் கொண்டு எழுந்தான். வெறும் நினைவுகளால் பின்னிய பிரமை அவிழ்ந்து கொண்டது. குறுகிய பிராகாரத்தில் இப்போது கிழக்கு மேற்கு கூடத் தெரியவில்லை. அவ்வளவு இருள்!

காலை ஓர் அடி எடுத்து வைத்தபோது, தண்ணென்று ஏதோ பட்டது. பயந்து போய்த் துள்ளிக் குதித்தான். ''பே... பே..'' என்று வார்த்தைகள் உதிர்ந்தன. சிறிது நேரம் ஒன்றுமே ஓடவில்லை. பிறகு குறுகுறுவென்று சத்தம் கேட்டதும், சுவர் ஓரமாய்க் காலால் மெல்ல அளைந்து பார்த்தான். 'சலசல' வெனத் தண்ணீர் பெயர்ந்து கொண்டது. உள்ளே நீர் வந்து விட்டதா?

கல் துவாரத்தின் அருகே வந்து நின்று கொண்டு, மின்னலுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் மின்னல் அடித்தது. திடீரென்று அவனுக்கு உள்ளே குடல் சுருண்டு பாய்வது போலிருந்தது! இதென்ன சமுத்திரமா? மரங்களையெல்லாம் காணவில்லை. வெகுநேரம் வரையில் ஏரி போல் தண்ணீர் அலைமோதிக் கொண்டிருந்தது.

உள்ளூற உதறல்! மனத்தில் பயம்! ஒரு தீவில் நிற்பதுபோல் பிரமை! அங்குமிங்கும் அல்லாடினான். ''பே.... பே....பே.....!'' என்று அலறிக் கொண்டான்.

அழுகையும் புரண்டு வந்தது. கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டான். கோவிலைச் சுற்றி வரக் 'குமுக் குமுக்' என்று நீர் புகும் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. மழை சொட சொடக்கும் சத்தமும், 'ஹோஹ்ஹோ' என்று காற்று இரையும் ஓலமும் சேர்ந்து கொண்டன. ஒரு வேளை கோவிலே தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருக்கிறதோ?

பண்டுவுக்கு ஒரே பீதி! வாசலை நோக்கி ஓடினான். மரக் கதவைத் திறந்ததும் மீண்டும் அலறிக் கொண்டு கதவை மூடினான். மிக மெல்லிய வெளிச்சத்தில், தண்ணீர் மேல் படி மீது ஏறிக் கொண்டிருப்பது தெரிந்தது. கிழக்கே மரம், செடி ஒன்றுமே தெரியவில்லை. ஒரே நீர்ப் பரப்பு!

பண்டு ஓலமிட்டான்! பரபரவென்று உடலெல்லாம் அதிர்ச்சி பரவியது. கோவில் கூரை மேல் ஏறிவிடலாம் என்று தோன்றியது. சுவர் விளிம்புகளைப் பிடித்து ஏற ஆரம்பித்தான். சுலபமாயில்லை! காரை பெயர்ந்து கையோடு வந்தது. கடைசியில் ஓர் எம்பலில் தாவிக் கூரைக்கு மேல் தலை நீட்டிய போது காற்று 'உய்ய்' என்று விசையோடு அடிப்பதை உணர்ந்தான். முட்டங் கால்களை வளைத்துக் கொண்டு நின்று பார்த்தான். மழை சரமாரியாய் அடித்து அவனைக் கீழே அமுக்கித் தள்ளியது. காற்றின் விசை மாறி மாறித் தாக்கியது. இன்னும் நின்றால் அலக்காகத் தூக்கித் தண்ணீரில் எறிந்துவிடும் போல் தோன்றியது. வெலவெலத்துப் போய் மீண்டும் கோவில் பிராகாரத்துள் எவ்விக் குதித்தான். குதித்த வேகத்தில் கால்கள் புரண்டு கொண்டன. எழுந்திருக்கச் சக்தியில்லாமல் சுவரில் சாய்ந்துகொண்டு பண்டு தெய்வங்களை நினைக்க ஆரம்பித்தான்.

சிறிது நேரத்தில் அவன் உட்கார்ந்த இடத்தில் தண்ணீர் புகுந்து விட்டது. இந்தத் தடவை உடல் தண்ணீரில் நனைந்த போது அவன் துள்ளி எழுந்திருக்கவில்லை. பீதி அவனை உறைந்து விட்டது. மரத்துப் போய் உட்கார்ந்திருந்தான். அழுகையும் உறைந்து விட்டது. மெள்ள மெள்ள இதுதான் வாழ்வின் முடிவு என்று தெரிந்து போயிற்று. ஒரே ஒரு நினைவு! மனத்தின் அதலபாதாளத்தில் ஒட்டிக் கொண்டிருந்து எழுந்து மேல் நோக்கி வந்தது. ''மனைவியோடு வாழ்வு வாழாமல் போகிறேனே!'' என்ற நினைவுதான் அது. ''மறு ஜன்மத்திலாவது அது நடக்காதா?'' என்று நினைத்தான். தன் கண்களை மூடிக் கொண்டான்.

அரை நினைவு! மயக்கம்! கனவு! இவற்றினிடையே மனத்தின் சுழல்வு! ஓலங்கள்! ஓசைகள்! செவி நிறைய ஏதோ சத்தங்கள்! நாழிகை போனதே தெரியவில்லை.

முடிவில்லாத பயணத்துக்குப் பிறகு சக்கரங்கள் நின்று கொள்கின்றன. ஓசை நின்றதால் ஏற்பட்ட திடீர் மௌனம் அவன் செவிகளை அழுத்துகின்றன. சுவாசம்கூடக் கேட்கக் கூடிய நுண்ணிய நிசப்தத்தில், அவன் உள் மனம் விழித்து இரண்டு தரம் இறக்கைகளைச் சிலிர்த்துக் கொள்கிறது. சுற்றிவர நிலவியுள்ள மௌனம் அப்போதுதான் ஜனித்துள்ள புதிய பிறப்பு என்று தெரிந்துவிடுகிறது.

இருளின் இறுகிய கறுப்பு; மெள்ளச் சாம்பல் நிறமாய் மாறுகிறது. பிறகு ஓர் ஊதா நெடுகிலும் பரவுகிறது. அதற்குப் பிறகு இளஞ்சிவப்பு! அது அழல்போல் செஞ்சிவப்பாய் மாறுகிறது! அதன் வெம்மையில் அவனது நினைவு பொரிந்து கொள்கிறது.

பண்டு கண்களை விழித்தான். ஓர் அசுர யந்திரம் இயங்கத் தயாராவது போல், அவன் உடலுள் தசைகள் மெள்ளச் சிலும்பிக் கொண்டன.

''கால்.... கால்.....''

ஓர் ஒற்றைக் காகத்தின் கரைதல், வெளி உலக சத்தத்தை அவன் காதுகளில் கொண்டு சேர்த்தன. எங்கேயோ உலகம் கரை தட்டியது போல் அவனுக்குப்பட்டது. தான் இருப்பது பிள்ளையார் கோயிலின் பிராகாரம்தானே என்று உறுதிப்படுத்திக் கொண்டான். சுற்றிவர இருள் தளர்ந்துபோய் ஒரு கலகலப்பு ஏற்பட்டிருந்தது. தரையில் தண்ணீர் வடிந்திருந்தது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சுவரைப் பிடித்துக் கொண்டு எழுந்தான். தோளை வளைத்துச் சோம்பல் முறித்துக் கொண்டான். வேட்டி ஒரே ஈரமாய்க் கனத்தது. கூண்டிலுள்ள உலர்ந்த வேட்டியையும், கிழிசல் பனியனையும் எடுத்து அணிந்து கொண்டான். பிறகு அவன் வாசல்புறம் நோக்கி நடந்தான்.

கதவைத் திறந்து பார்த்த போது இளங்காலை துளிர்த்துக் கொண்டிருந்தது. இருள் இன்னும் அரை மயக்கமாய் நின்று கொண்டிருந்தது. மழையின் ஓசை அடங்கிப் போய், இப்போது தூறலாக உதிர்ந்து கொண்டிருந்தது. பண்டு கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தான். முதலில் ஒரு திகிலும் அதை அடுத்து ஒரு சமாதானமும் அவனிடம் தோன்றியது. சுற்றிலும் மரம் செடி ஒன்றுமே அவன் கண்ணில் படாதது திகிலைக் கொடுத்தது. ஆனால் படிகளிலிருந்து வெள்ளம் வடிந்து பூமியில் ஒரு சாண் உயரமே நின்றுகொண்டிருப்பதைக் கண்டபோது மனத்தில் சமாதானம் ஏற்பட்டது.

நாழிகை ஏறஏறச் சுற்றிவர ஒரு வெளிறல் தோன்றியது. மழை இன்னும் தூறலாகவே சிதறிக் கொண்டிருந்தது. காற்றின் ஓலமெல்லாம் ஒடுங்கி, அவ்வப்போது திடீர் திடீரென வீசும் சீறலாய் மாறியிருந்தது.

பண்டு கோவில் படிகளை விட்டுக் கீழே இறங்கினான். சுற்றி வரப் பார்க்கவே அச்சமாக இருந்தது. தெற்கே வரிசையாக நின்ற பனைமரங்கள் யாவும் முறிந்து வீழ்ந்து கிடந்தன. அருகில் இருந்த குடிசை இரண்டும் எங்கே? அவன் பரபரப்போடு திரும்பினான். அடேடே ! சற்று எட்டத்திலிருந்த குடியானவத் தெருவைக் காணுமே?

எல்லாம் ஒரே நீர்க்காடு ! தூறலைப் பொருட்படுத்தாது பண்டு தண்ணீரில் இறங்கிக் கால் ஊன்றி நின்று கொண்டான். ஆகாயத்தில் பெரிய பெரிய இறக்கைகள் விரித்தாற் போல் மேகங்கள் வேகமாய் ஓடிக் கொண்டிருந்தன. வீசும் காற்று அவனை அவ்வப்போது தள்ளாடச் செய்து கொண்டிருந்தது. ஏதாவது வேறு உலகத்தில் பிறந்துவிட்டோமா? பழக்கப்பட்டது ஒன்றுமே கண்ணுக்குப்படவில்லையே என்று எண்ணிக் கொண்டான். வெள்ளமும், சேறும் அதிசயமாய்த் தோன்றின.

சட்டென்று ஒரு நினைவு ! தேவர் கடையும், ரயில்வே நிலையமும் என்ன கதி ஆகியிருக்கும்?

கோவிலுக்குள் சென்று, பனையோலை ஒன்றை எடுத்துத் தலைமேல் வைத்துக் கொண்டு வெளியே கிளம்பினான்.

தூரத்திலிருந்து ரயில்வே நிலையத்தின் பக்கத்தைப் பார்க்கும்போதே பகீரென்றது. தேவர் கடை எங்கே? ஒன்றையுமே காணவில்லையே ! கடை எந்த இடத்தில் தான் இருந்தது? முருங்கை மரம் எங்கே? அந்த மண்மேடு எப்படி வந்தது ?

தரை யெல்லாம் தண்ணீர் பிய்த்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது. இரவு தேக்கத்துக்குப் பிறகு எங்கேயோ உடைப்பு எடுத்திருக்க வேண்டும் ! இல்லாவிட்டால் இவ்வளவு வெள்ளமும் வடிந்திருக்காது.

தட்டுத் தடுமாறிக் கொண்டே, கடை இருந்த இடத்தை அறுதியிட்டான். தேவர் கல்லாப் பெட்டி வைப்பதற்குக் கட்டிய காரைத் திண்ணை மாத்திரம் மிச்சமிருந்தது. சுற்றிவரத் தென்னங்கூரையின் மூங்கில்களும் பிளாச்சுகளும் சிதறிக் கிடந்தன. வெந்நீர்த் தவலை மட்டிலும் இரு கம்புகளின் கவட்டில் கழுத்தை மாட்டிக் கொண்டு அனாதையாகப் படுத்துக் கிடந்தது.

பண்டு பார்வையைத் திருப்பினான். ரயில் நிலையக் கட்டடம் இடிந்து சரிந்திருந்தது. அருகில் உள்ள இரண்டு குவாட்டர்ஸ்களின் கட்டடங்கள் சின்னாபின்னமாக நொறுங்கியிருந்தன. நிலையத்தில் லாந்தர்க் கம்பம், கிராதி வேலி ஒன்றையும் காணவில்லை.... பெயர்ப் பலகையும் ஒடிந்து விழுந்துவிட்டது. ''மே'' என்ற எழுத்தையுடைய பகுதி மாத்திரம் எஞ்சி நின்று கொண்டிருந்தது. பிளாட்பாரத்தில் கறுப்பாகத் தோன்றுவது என்ன?

அவன் யோசிக்க ஆரம்பித்தான். லயனில் நிற்பது எந்த வண்டி ? எப்போது வந்திருக்கும்? ஏன் இங்கே நிற்கிறது?

ஸ்டேஷன் மேடு ஏறும்போது வழுக்கிவிட்டது. சமாளித்து எழுந்து நின்றான். தலைக்கு மேலிருந்த பனையோலையைக் காற்று அடித்துக் கொண்டு போயிற்று. அவன் கவலைப்படவில்லை. கீழே விழுந்து கிடந்த கிராதி வேலியை ஒரு தாண்டு தாண்டினான். பிளாட்பாரத்துச் சரல் தரையில் நின்று கொண்டு சுற்றிவரப் பார்த்தான். புரிந்துவிட்டது. இது நேற்று காலை எட்டு மணிக்கு வரவேண்டிய பாசஞ்சர் அல்லவா?

வண்டியில் பிரயாணிகள் தென்பட ஆரம்பித்தார்கள். காற்று வீச்சுக்கு இசைவாக இருக்கும் வாடையில் உள்ள சன்னல்களை யெல்லாம் சாத்திவிட்டு, பிளாட்பாரம் பக்கமுள்ள சன்னல்களைத் திறந்து வைத்திருந்தார்கள். வண்டிகள் கடு மழையில் குளித்து, கறுத்து வழிந்தன.

ஒவ்வொரு சன்னலாகப் பார்த்துக் கொண்டே, பண்டு மெதுவாக நகர்ந்தான். பிரயாணிகள் வெளிறிப் போய்ப் பயந்த முகத்துடன் தென்பட்டனர். அநேகர் விழிகளில் கவலை தோய்ந்திருந்தது. தலையெல்லாம்

கலைந்து அலங்கோலமாகத் தென்பட்டனர். இரவில் மழையும் காற்றும் அவர்களை உலுக்கி எடுத்திருக்க வேண்டும்!

தூறலில் நனைந்து கொண்டே ஒவ்வொரு பெட்டியாக நகர்ந்தான். அநேகர் சன்னல்களுக்கு வெளியே முகத்தை நீட்டி, ஓடும் மேகத்தையும், விழும் தூறலையும் பார்த்துவிட்டு, உதட்டைப் பிதுக்கிக் கொண்டே, தலையை உள்ளிழுத்துக் கொண்டார்கள். அநேகர், மழையில் வேடிக்கை போல் நனைந்து கொண்டு வரும் அவனை ஏதோ விநோதப் பிராணியைப் பார்ப்பதுபோல் பார்த்தார்கள்.

அநேக பெட்டிகளில், ''அம்மா...!'' என்று குழந்தைகளின் அழுகுரல்தான் பெரும் ஓலமாக இருந்தது. பெண்கள் அவர்களைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பெட்டியில், ''இறங்குங்கள்! இறங்குங்கள்!'' என்ற குரல் கேட்டுக் கொண்டிருந்தது. அதை அடுத்து ஆண்கள் கீழே இறங்கி, விழும் மழைத் தூறலில் உடம்பைச் சாணாகக் குறுக்கிக் கொண்டு, அடுத்த பெட்டியை நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள். பண்டு சிறிது நின்றான். உள்ளே, ''ஹும்...மா, ஹும்மாஆ....!'' என்று ஒரு பெண்ணின் முனகல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. பிரசவ வேதனை என்று புரிந்துவிட்டது. வெளியே படிக்கட்டில், ஓர் அப்பாவி மனிதர் — பெண்ணின் கணவராக இருக்க வேண்டும் — கையைப் பிசைந்தவாறு உட்கார்ந்து கொண்டிருந்தார்.

அடுத்த வண்டியில் பெரியவர் ஒருவர் 'கொல், கொல்' என்று இருமிக் கொண்டிருந்தார். உள்ளே ஹார்மோனியத்தை இழுத்துவிட்டாற்போல் சளி ரீங்கரித்துக் கொண்டிருந்தது. ''யம்மா.... யம்மா....... கொஞ்சம் வெந்நீர் இருந்தால் தொண்டைக்கு இதமாயிருக்கும்!'' என்று கூறிக் கொண்டே மேலும் இரும ஆரம்பித்தார்.

''ஏண்டா, கத்தறே! நாசமாய்ப் போறவனே! உனக்குப் பசிக்கிறதுன்னு என்ன செய்யறது? இந்தக் காட்டிலே சோறு கிடைக்கவா போறது? பேசாமல் கிட!'' — இது ஒரு பெட்டியில்.

அடுத்த பெட்டியில் ஒரேயடியாக உள்ளே ஒழுகிக் கொண்டிருந்தது. அதில் நிறையப் பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைப் பார்ப்பதற்கே பரிதாபமாக இருந்தது. ஒழுகல் விழும் பகுதிகளை ஒதுக்கிவிட்டு, மற்ற இடங்களில் அவர்கள் நெருக்கியடித்து உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஒழுகிய நீர், பெட்டியின் தளத்தின் வழியாகச் சிறு ஓடை போலவே வெளியே விழுந்து கொண்டிருந்தது. இரு பெண்கள் வாயிலில் நின்று கொண்டு தங்கள் புடவைத் தலைப்புகளைப் பிழிந்து கொண்டிருந்தார்கள். அவனைப் பார்த்ததும் வெறுப்போடு முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள்.

அடுத்த பெட்டியில் ஆண்கள் ஒரே கூட்டமாக உட்கார்ந்திருந்தார்கள். அவனைக் கண்டதும் சிலர், ''போ..... போ... போ !'' என்று பிச்சைக்காரனை விரட்டுவது போல் விரட்டிவிட்டார்கள். ''இடைச்சதைக் கருட்டலாம்னு வந்துட்டான்போலிருக்கு!'' என்று அவர்கள் கூறிக் கொள்வது தெளிவாகக் கேட்டது.

கடைசியில் இஞ்சின்! அது மௌனமாய் நின்று கொண்டிருந்தது. புகையில்லை, நீராவியில்லை, தீயில்லை! வெறுமையாய் நிற்கும் போது அதிலே ஒரு சோகம் கூடக் காணப்பட்டது. டிரைவர் எங்கே? பயர்மென்கள் எங்கே? இஞ்சினின் பாதிக் கூரை ஏன் இப்படி நொறுங்கி உள்ளே விழுந்திருக்கிறது?

ஸ்டேஷனில் நீண்டு குறுகலான ஒரே ஒரு தாழ்வாரம்! அது மட்டும் கூரையோடு தப்பிவிட்டது. அதில் அநேக பிரயாணிகள் நின்று கொண்டு தூறும் மழையையும், வீசும் காற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பண்டு அவர்களோடு போய்க் கலந்து கொண்டான்.

இஞ்சினில் விபத்து ஏற்பட்டுவிட்டதாம். அவர்கள் பேச்சிலிருந்து தெரிந்தது. வண்டி நேற்றுப் பகல் பன்னிரண்டு மணிக்கு இந்த நிலையத்தை அடைந்ததாம். வண்டியில் உள்ள பிரயாணிகள் யாவரும் அரைப் பட்டினி, முழுப் பட்டினியாம். இரவு மழையும் புயலும் அவர்களை வாட்டி எடுத்துவிட்டதாம். வண்டிக்குள் இருப்பதற்கே பயமாக இருந்ததாம். நேற்றுப் பிற்பகலிலேயே புயலில் நிலையக் கட்டடம் கீழே விழுந்து விட்டதாம்.

பண்டு யோசித்துக் கொண்டேயிருந்தான். வண்டியிலிருந்து பசியால் அழும் குழந்தைகளின் அழுகுரல்கள் அவன் செவிகளில் தெளிவாக விழுந்தன. தேவர் கடை மட்டும் தப்பியிருந்தால்....எல்லோருக்கும் மசால்வடை 'சப்ளை' செய்திருக்கலாம்!

சட்டென்று நினைவு வந்தது. ஊத்தம் போட வேண்டிய வாழைக் குலைகளைத் தேவர், திண்ணையின் கீழிருக்கும் பரணில்தானே வைக்கோலைச் சுற்றி வைத்திருப்பார்? அந்தக் குலைகள் இப்போது இருக்குமா?

பண்டு தாழ்வாரத்தை விட்டு வெளியே ஓடினான். திண்ணை மீது மூங்கில்களும், பிளாச்சுகளும் பின்னி விழுந்து கிடந்தன. அவைகளைப் பண்டு மெதுவாக நகர்த்த



ஆரம்பித்தான். திண்ணையில் உள்ள பரணுக்கு வழி வகுத்து விட்டான். ஆனல் திண்ணையின் முக்கால் உயரம் வரை மண் மூடியிருந்தது. மண்வெட்டியோ கிடையாது. மண்ணை எப்படி அகற்றுவது? பரணின் கதவை எப்படித் திறப்பது? சுற்றி வரப் பார்த்தான். உடைந்த ஓடுகள் இரண்டு அருகில் கிடந்தன. அவைகளை எடுத்து மண்வெட்டிபோல் வைத்துக் கொண்டு தோண்ட ஆரம்பித்தான்.

பரணின் கதவு வெறும் மரக் கதவு! அது திறக்கும் அளவுக்கு மண்ணைத் தோண்டியாகி விட்டது. கதவை மூக்களிந்துத் திறந்து கொண்டு உள்ளே கையை நீட்டினன். நல்ல வேளை!! உள்ளே மண் ஏறவில்லை. மழைத் தண்ணீர்தான் சேர்ந்திருந்தது. கையில் இரண்டு குலைகள் தட்டுப்பட்டன. அவற்றை மெதுவாக வெளியே இழுத்தான். பளபளவென்று மஞ்சள் நிறமாய் வாழைப் பழங்கள் மின்னிக் கொண்டிருந்தன. அவனது ஒற்றைக் கண் பளிரிட்டது. குலைகளைத் தோளில் தூக்கிக் கொண்டு நிலையத்தை நோக்கித் தாவி நடக்கலானன்.

எல்லோருக்கும் ஆச்சரியம்! சுற்றிவரப் புல்பூண்டுகூட ஒன்றும் தெரியவில்லை. அந்த நிலையத்தின் பெயரையுடைய கிராமம் மூன்று மைல் தொலைவில் இருக்கிறது என்று அனுபவஸ்தர்கள் கூறினர்கள். ரயில் நிலையம் அனதை போல் இப்படித் தனியாக நின்றிருக்கும்போது யாரோ ஒருவன் வாழைக் குலைகளைக் கொண்டு வருவதைப் பார்க்கப் பிரயாணிகளுக்கு அதிசயமாக இருந்தது.

பிளாட்பாரத்துத் தரையில் தண்ணீர் சலசலத்து ஓடும் இடத்தில் குலைகளை நன்ருகக் கழுவி எடுத்துக் கொண்டு பண்டு ஒவ்வொரு பெட்டியாகச் செல்ல ஆரம்பித்தான். ஒவ்வொரு குழந்தைக்கும் இரண்டு பழங்கள்! அவன் கொடுப்பதை வாங்கிக் கொண்டு சிறுவர் சிறுமியர் வாயடைத்து நின்றனர்கள். சிலர் அவனுக்குக் காசு கொடுக்க முற்பட்டபோது, அவன் ''வேண்டாம்'' என்பதற்கு இணங்கப் பலமாகத் தலை அசைத்தான். குழந்தைகளுக்குக் கொடுத்த பிறகு சில வயதானவர்களுக்கும் பிய்த்துக் கொடுத்தான். இரண்டு குலைகளும் விரைவில் தீர்ந்து போயின.

இருநாள் வேதனை எடுத்த பெண்மணிக்குக் குழந்தை பிறந்துவிட்டது. இருமுகிற கிழவர், ''யம்மாடி.... லொக்.... லொக்... யம்மாடி.....!'' என்று இருமிக் கொண்டேயிருந்தார்.

பண்டு யோசனை செய்யலானன். காற்று இன்னும் 'விர் விர்' என்று அடித்துக் கொண்டிருந்தது. தூறல் இன்னும் ஊசியாய் விழுந்து கொண்டே இருந்தது. வண்டியில் பிரயாணிகள் பலர் குளிர் தாங்காது நடுங்கிக் கொண்டிருந்தனர். இவர்களுக்கெல்லாம் வெந்நீர் கிடைத்தால்....

வெந்நீர்த் தவலையின் நினைவு வந்தது. சட்டென்று தாழ்வாரத்திலிருந்து இறங்கி, கடை விழுந்து கிடந்த இடத்துக்கு ஓடினன்' கம்புகளின் கவட்டில் சிக்கியிருந்த தவலையை விடுவித்து எடுத்துக் கொண்டு திரும்பி வந்தான். இப்போது நல்ல தண்ணீருக்கு எங்கே போவது? இஞ்சின் டாங்கியிலிருந்து பிடித்துக் கொண்டால் என்ன? யோசனை பளிச்சிடவே இஞ்சினை நோக்கி ஓடினன். இஞ்சினில் ஏறி டெண்டர் அருகிலுள்ள குழாயைத்



திறந்து பார்த்தான். தண்ணீர் வேகத்தோடு விழுந்து கொண்டது. தவலையை ஒருதரம் கழுவிவிட்டுத் தண்ணீரால் நிரப்பிக் கொண்டான்! ஆகா! இந்தச் சமயத்தில் இஞ்சின் பாய்லர் வேலை செய்யாமல் போய்விட்டதே! எவ்வளவு வெந்நீர் வேண்டுமானாலும் அதிலிருந்து பிடித்துக் கொள்ளலாமே!

தவலையோடு தாழ்வாரத்துக்கு வந்தான்! சிதறிக் கிடந்த கற்களை எடுத்து முக்கட்டியாக வைத்துக் கொண்டான்! அதன் மேல் தவலையை ஏற்றி வைத்ததும் வீசும் காற்றின் நினைவு வந்தது! இதைத் தடுக்க என்ன செய்யலாம்! நிலையத்துக் கூரையின் அஸ்பெஸ்டாஸ் ஷீட்டுகள் அங்கங்கே சிதறி விழுந்து கிடந்தன. அவற்றில் மூன்று ஷீட்டுகளை எடுத்து வந்து சுற்றிவர முட்டுக் கொடுத்து நிறுத்தி ஒரு சிறு அறை போல் செய்து கொண்டான். இனி காற்று அடுப்பை ஒன்றும் செய்யாது!

பிறகு தாழ்வாரக் கூரையில் பலகைகளுக்கு இடையே சொருகி வைத்திருந்த தென்னம்குச்சி துடைப்பங்களையும், சவுரிகளையும், நார்ப் பொச்சங்களையும், விளக்குத் துடைக்கும் கந்தல் துணிகளையும் எடுத்துக் கொண்டான்! ஒன்றிலும் ஈரம் இன்னும் படவில்லை. பிரயாணி ஒருவரிடமிருந்து தீப்பெட்டி வாங்கி வந்து அவைகளைக் கொளுத்திக் கொண்டான். கொஞ்சம் கொஞ்சமாக அவற்றை அடுப்பில் கொடுத்துத் தீயை நன்ருக எரியச் செய்தான். அரை மணி ஓடியிருக்கும். தண்ணீர் நன்ருகக் கொதித்து விட்டது.

ஓட்டமாய் ஓடி, இருமும் கிழவருக்கு ஒரு டம்ளர் நீர் வார்த்தான். வெந்நீரின் வெம்மை தொண்டையை நனைத்ததும், "அப்பாடா" என்ருர் கிழவர். அவர் கண்களில் இதம் பெருகி ஒளி ஏறியது.

பிறகு பண்டு ஒவ்வொரு வண்டியாக ஏறி வேண்டுகிறவர்களுக்கு நீர் வழங்க ஆரம்பித்தான். இஞ்சினில் உள்ள வாளியை எடுத்து வந்து கடைசியாக நிரப்பி அதைப் பிரசவம் நடந்த பெட்டியில் கொடுத்துவிட்டு, மீண்டும் தாழ்வாரத்துக்கு வந்து நின்றுகொண்டான்.

இப்போது பண்டுவை யாவரும் புதுமையாகப் பார்த்தார்கள். மழையையும், குளிர் காற்றையும் பொருட்படுத்தாது, ஒவ்வொரு பெட்டிக்கும் சென்று, "வே.... வே....!" என்று உளறிக் கொண்டே பணிவிடை செய்வதை எல்லோரும் உற்றுக் கவனித்தார்கள்.

தாழ்வாரத்துக்கு வந்த பண்டு, துறுதுறுவென்று வேறு என்ன செய்யலாம் என யோசித்துக் கொண்டிருந்தான். அங்கு நின்றிருந்த ஒரு பிரயாணியை அணுகி, "வண்டி ஏன் அங்கே நின்று விட்டது?" என்று சமிக்ஞையால் வினவிக் கேட்டான். அந்தப் பிரயாணி அவனை ஏற இறங்கப் பார்த்தான். "இஞ்சின் காவு வாங்கிவிட்டது" என்ருர். பண்டுவின் கண் விரிந்தது.

பிரயாணி கூற ஆரம்பித்தார். பண்டுவின் மனத்தில் காட்சிகள் படர்ந்து கொண்டன.

"மோ—" என்ற அந்த ரயில் நிலையத்துக்குக் கிழக்கே மூன்ருவது மைலில்தான் விபத்து நிகழ்ந்தது. முன் தினம் காலை ஏழு மணிக்கு அந்த இடத்தில் வண்டி வந்து கொண்டிருந்தது. விடியற்காலையிலிருந்தே காற்றும் மழையும் தொடங்கிவிட்டன. வண்டி மெதுவாக ஓடிக் கொண்டிருந்தது.

ரயில் பாதை அந்த இடத்தில், ஒரு கால்வாய்போல் குழிவு செய்யப்பட்ட பள்ளத்தாக்கில் ஓடுகிறது. மேட்டுப் பூமியை இரண்டாக வகிர்ந்து செல்லும் அந்தப் பள்ளம் சுமார் நான்கு பர்லாங்கு தூரம் ஓடுகிறது. அந்த மேட்டு நிலத்தில் கனிப் பொருள்கள் கிடைக்கின்றன என்ற நம்பிக்கையில் அரசாங்க கனிப் பொருள் இலாகாவினர் விரிவான ஆராய்ச்சிகள் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். ஆராய்ச்சிக்குரிய டிரில்லிங் இயந்திரங்களைத் தரை மார்க்கமாய் எடுத்துச் செல்லும் போது, ரயில் பாதையுள்ள இந்தக் குழிவுப் பகுதியைக் கடக்க வேண்டி வந்தது. அதற்காகப் பள்ளத்தின் உச்சி விளிம்பில் இரண்டு இரும்பு கர்டர்களைப் பொருத்தித் தாற்காலிகமாக அமைத்திருந்தார்கள். இது ரயில்வேக்காரர்கள் அனுமதியின் பேரிலேயே செய்யப்பட்டது.

அந்த மேம்பாலப் பகுதியருகில் வண்டி போன போதுதான் விபத்து நடந்தது. இரண்டு இரும்பு கர்டர்களில் ஒன்றைத் தாங்கிக் கொண்டிருந்த பெரும் கல், இடைவிடாத மழை அரிப்பினுலும், காற்றினுலும் நகர்ந்து கொடுக்கவே, கர்டர் மிகுந்த வேகத்துடன் வண்டி மீது விழுந்தது. அது விழுந்த இடம் சரியாக இஞ்சினின் கூரைப் பகுதியாகும்.

இஞ்சின் ஒரு தரம் துள்ளிக் குதித்தது. 'டடால்' என்று சத்தத்தின் வெடிப்பு! பின்னல் நறநறவென்று நொறுங்கல்! டிரைவரை யாரோ முரட்டுத்தனமாய்த் தள்ளுவது போலிருந்தது. சுருண்டு கீழே விழுந்தார்.

"ஐயோ, ஐயோ!" என்று குரல்! கேட்ட மறுகணத்திலேயே அது அணைந்தது. டிரைவர் பரபரப்புடன் எழுந்து வண்டியை நிறுத்தினர். பிறகு திரும்பிப் பார்த்தால்....

இஞ்சின் இரண்டு தனித்தனிப் பகுதிகளைக் கொண்டது. ஒன்று இஞ்சின் பகுதி, மற்றொன்று கரி, தண்ணீர் ஏற்றிச் செல்லும் டெண்டர் பகுதி! இஞ்சினிலுள்ள கேபின் கூரை, ஒரு பாதி டெண்டர் பகுதியைச் சேர்ந்தது. மறு பாதி இஞ்சின் பகுதியைச் சேர்ந்தது. இந்த இரு பாதிக் கூரைகளும் சிறிது இடைவெளியோடு சேர்ந்து, பார்ப்பதற்கு ஒரே முழுக் கூரை போல் தோற்றமளிக்கும். இதில் டெண்டர் பகுதிக் கூரையை நொறுக்கிக் கொண்டுதான் இரும்பு கர்டர் விழுந்து விட்டது.

கர்டருக்கு அடியில் கூரை! கூரைக்கு அடியில் இரு பயர்மேன்கள்! டிரைவர் உடல் நடுங்கியது! இதற்குள் பிரயாணிகள் சிலர் ஓடி வந்தார்கள். ஒரு பயர்மேனை மெதுவாக தெம்பி எடுத்தார்கள். மேலெல்லாம் ரத்த விளாறுய் அவர் வெளிப்பட்டார்.

மற்றொருவரிடம் பேச்சு மூச்சில்லை. அவர் தான் சரியாக மாட்டிக் கொண்டிருந்தார். வெளியே அவரது ஒரு கையும், இரு கால்களும்தான் தெரிந்தன. சுற்றிவர ரத்தம் சிதறியிருந்தது.

விழுந்த கர்டரை அவர்கள் யாவரும் ஒன்றுகூடி நகர்த்த ஆரம்பித்தார்கள். சிறிது

சிறிதாகத்தான் நகர்த்த முடிந்தது. இவ்வளவுக்கும் கார்டரின் நுனிப் பகுதிதான் கூரையில் விழுந்திருந்தது.

பதினைந்து நிமிடங்களாக நகர்த்தி, கார்டரை இஞ்சினுக்கு வெளியே தள்ளினார்கள். பிறகு கூரைத் தகடுகளை ஒதுக்கி, பார்த்தபோது பயர்மேன் இறந்து கிடப்பது தெரிந்தது.

காற்று கூடியது. மழைத் தூறல் பலத்தது. பிரயாணிகள் அனுதாபித்தார்கள். குற்றுயிராகக் கிடந்த பயர்மேனைத் தூக்கிச் சென்று முதல் வகுப்புப் பெட்டியில் படுக்க வைத்தார்கள். இறந்தவரை லக்கேஜ் வானில் கிடத்தினார்கள். இஞ்சின் ஒழுங்காக இயங்குமா என்று டிரைவர் பரிசோதித்தார். எப்படியும் மூன்று மைல்களைக் கடந்து 'மோ'வை அடைந்துவிட வேண்டும் என்று எண்ணினார். தோளில் விழுந்த அடி. இடது கையை இயங்க விடாமல் செய்தது.

பிரயாணிகள் யாவரையும் கீழே இறங்கி, மேம்பாலத்துக்கு மறுபக்கம் போகச் சொன்னார்கள். பிறகு டிரைவர் இஞ்சினை மெதுவாக இயங்க வைத்து, காலிப் பெட்டிகளை மேம்பாலத்துக்கு மறுபக்கம் கொணர்ந்தார். மீண்டும் பிரயாணிகள் பெட்டிகளில் ஏறிக் கொண்டார்கள். ஒற்றைக் கையாலேயே பாடுபட்டு, வண்டியை — 'மோ—'வுக்குக் கொண்டு வந்தார் டிரைவர். பிறகு உபாதை தாங்க முடியாமல் பிளாட்பாரத்தில் சுருண்டு விழுந்தார்.

பிரயாணிகள் அவரையும் முதல் வகுப்புப் பெட்டியில் கிடத்தினார்கள். அவரது சட்டையைக் கழற்றிய போதுதான் இடது தோளில் குபுகுபுவென்று ரத்தம் பொங்கி வருவது தெரிந்தது. விபத்தில் அவர் தோள் எலும்பு நொறுங்கி விட்டது.

''மோ—'' நிலையத்துக்கு வந்த பிறகுதான் வண்டியில் உள்ள கார்டைக் காணவில்லை என்பது தெரிந்தது. கார்டு இருக்கும் கடைசிப் பெட்டியின் கதவு ஒன்றை காற்று முறித்து எறிந்திருந்தது.

நடந்ததைப் பற்றிய செய்தி கண்ட்ரோலுக்குத் தெரிவிக்கப்பட்டது. சிறிது நேரத்தில் கண்ட்ரோலோடு தொடர்பும் அறுந்து விட்டது. செய்திக் கம்பிகள் துண்டிக்கப்பட்டிருக்க வேண்டும்.

வண்டி வந்து சேர்ந்த அரை மணி நேரத்தில் கண்ட்ரோலோடு தொடர்பும் அறுந்து விட்டது. செய்திக் கம்பிகள் துண்டிக்கப்பட்டிருக்க வேண்டும்.

வண்டி வந்து சேர்ந்த அரைமணி நேரத்தில் புயல் அதிகமாகி விட்டது. மழையும் பலக்கத் தொடங்கியது. பிரளயம் வந்தாற் போல் ஒரே ஓலங்கள்! தண்டவாளத்தில் பெட்டிகளே ஆடிக் கொண்டிருந்தன.

இரவில் புயலும் மழையும் மேலும் பெருகி விட்டன. பெட்டிகள் இரண்டாகப் பிளந்துவிடுமோ என்று பயம்! அநேக மரச் சன்னல்கள் பல இடங்களில் ஒழுக ஆரம்பித்தன. பீதியோடு யாவரும் விழித்திருந்தார்கள்.

மறு நாள் காலை! புயல் வடிய ஆரம்பித்தது. மழையின் சீறலும் ஆறத் தொடங்கியது. சிறிது சிறிதாக இயற்கையின் வெறி அடங்கி, அமைதி பிறப்பது போல் இருந்தது.

சுற்றி வரப் பார்த்தால் சேதங்கள். நிலையத்தின் கட்டடமே இடிந்து கிடந்தது. குவார்ட்டர்ஸ்கள் கூரையோடு சரிந்திருந்தன. ஸ்டேஷன்மாஸ்டர் காலில் பலத்த காயத்துடன், இருப்பதற்கு இடமில்லாமல் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

புயலின் ஓசையும், மழையின் ஆர்ப்பரிப்பும் ஓரளவாக அடங்கிய பிறகு, பிரயாணி ஒருவர் வைத்திருந்த டிரான்ஸிஸ்டரில் தமிழ்ச் செய்தி நன்றாகக் கேட்டது. புயல் நூறு மைல் வேகத்தில் வீசியது என்றும், 'மோ—'வை அடைந்த அந்தப் பாஸஞ்சர் வண்டியைப் பற்றிய செய்தி ஒன்றும் கிடைக்கவில்லை என்றும் அந்த வண்டிக்கு நேர்ந்த கதியை அறிய வி—நகர் சந்திப்பிலிருந்து புறப்பட்ட ரிலீப் ஸ்பெஷல், வழியில் ரயில் பாதை உடைப்பு ஏற்பட்டிருந்த காரணத்தால் மேலே போக முடியாமல், நின்றுவிட்டதென்றும் ரேடியோ அறிவிப்புக் கூறியது. ரஸ்தா மூலம் 'மோ—' நிலையத்தை அடைய முடியாமல் தாம்போதிகள் நீரில் மூழ்கிவிட்டன என்றும், மொத்தத்தில் அந்த நிலையம் புற உலகத் தொடர்புகள் யாவற்றினின்றும் துண்டிக்கப்பட்ட பிரதேசமாக இருப்பதாகவும் செய்தி அறிவித்தது. மேலும் அந்தப் பாசஞ்சர் வண்டி 'மோ—'விலிருந்து புறப்பட்டு அடுத்த நிலையமாகிய 'தை—'யூரை அடையும் பட்சத்தில் அங்கிருந்த பிரயாணிகளை பஸ்கள் மூலம் ஏற்றிச் செல்ல எல்லா வசதிகளும் செய்யப்பட்டிருப்பதாகவும் செய்தி அறிவித்தது.

நேரம் ஆக ஆகப் புயல் அடங்கிக் கொண்டிருந்தது. பீதி விலகி எல்லோர் கண்ணிலும் ஒரு நிம்மதி பிறந்தது.

நடந்ததைக் கூறுவதில் பிரயாணிகள் மிகுந்த ஆர்வத்தைக் காட்டினார்கள். ஏதோ பெரும் ஆபத்திலிருந்து தப்பித்து வந்த அதிர்ஷ்டக்காரர்கள் என்ற உணர்வு அவர்கள் பேச்சில் விரவி யிருந்தது.

பண்டு யோசித்தவாறு இருந்தான். எண்ணங்கள் நாலா பக்கங்களிலும் சிதறிக் கொண்டன. கண் முன்னால் ஒரு சமூகமே அந்த வண்டித் தொடரில் அகப்பட்டுப் பரிதவிப்பது போல் தோன்றியது.

இந்த நிலையத்தில் ரயில் வந்து நின்று ஒரு நாளாகப் போகிறது. குழந்தைகளிலிருந்து எல்லோரும் பட்டினி. இனிமேலும் இவர்கள் தாங்குவார்களா? அடுத்த நிலையம் 'தை'யூரில் எல்லா வசதிகளும் காத்திருக்கின்றனவாம். இவர்கள் எல்லோரையும் அங்கு கொண்டு சேர்த்து விட முடியுமா? 'தை'யூர் ஒரு சிறு நகரம். ஆஸ்பத்திரி, ஹோட்டல்' எல்லாம் இருக்கின்றன. 'மோ—'வைப் போல் அது வெறும் பட்டிக்காடு அல்ல. அங்கே கொண்டுபோய்ப் பிரயாணிகளைச் சேர்த்து விட்டால் அவர்களுக்கு எவ்வளவு சௌகரியமாக இருக்கும்?

இஞ்சினை இயக்க முடியுமா?

பண்டு எழுந்தான். தூறலில் நடந்து இஞ்சின் அருகில் வந்தான். மௌனமே கனத்து நிற்பதுபோல் இஞ்சின் நின்று கொண்டிருந்தது. பாதிக் கூரை உடைந்து

கிடந்ததில் ஐயனார் கோயில் சிலைகளைப் பார்ப்பது போல் ஒரு கோரமும் தோன்றியது.

படிகளில் ஏறி, காபினினுள் நுழைந்தான். நொறுங்கி விழுந்த கூரை இசைவுப் பிசகாக டென்டர் பகுதி மீது வியாபித்திருந்தது. இஞ்சினை இயக்க நினைத்தால் டென்டரிலிருந்து கரியை எடுத்துப் போடுவது கடினம். இப்போது என்ன செய்ய?

ஆயுதப் பெட்டியுள் கையை விட்டு ஸ்பானர், கத்தியலை எடுத்தான். பிறகு கீழே கிடந்த ஷோவலையும் எடுத்து, அதுங்கிக் கிடந்த கூரைத் தகட்டை ஓங்கி அடிக்க ஆரம்பித்தான்.

''டணங் டணங்''என்று உலோக ஓசைகள்! பண்டு ஓர் அசுரனைப் போல் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டிருந்தான். இஞ்சினைச் சுற்றி அநேகர் கூடிவிட்டார்கள். அவன் செய்வதைப் பார்க்கப் பார்க்க அவர்களுக்கு ஆச்சரியம் தோன்றியது.

''டணங் டணங்!''

சம்மட்டி விழுவது போல் அடிகள். கத்தியலைக் கொண்டு அங்கங்கே தட்டு! மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கிற்று! ''ம்ம்ம்...'' என்று 'தம்' பிடித்து ஷோவலைக் கொடுத்துப் பண்டு, அதுங்கிய தகட்டை நெம்பிக் கொண்டிருந்தான்.

''ம்ம்ம்ம்...'' வியர்வை கசிந்தது. பனியன் 'டர்ர்ர்ர்' என்று முதுகில் கிழிந்தது. பண்டு கழுத்தைக் கொடுத்து நெம்பினான். நாளங்கள் புடைத்து ரத்தக் குழாய்கள் வீங்கின. ''ம்ம்ம்...'' கண்கள் கோணின. முகம் கிறிவிட்டது. ''அங்...அங்...அங்...''

''டணல்'' என்ற ஓசையுடன் கூரைத் தகடு பெயர்ந்து வந்தது. பண்டு வேகத்தோடு விழுந்தான். மறு கணம் சமாளித்து எழுந்தான். இடது கையில் அங்கங்கே கீறி ரத்தக் கசிவு. முகத்தில் வேர்வை கப்பிப் பளபளப்பு! பனியனின் கையைச் சரி செய்து கொண்டு கூரைத் தகட்டை இழுத்து வெளியே எறிந்தான். பிறகு எல்லோரையும் நோக்கிக் கையை உயர்த்தினான்.

''வே....வே....வே....''

அவன் சமிக்ஞைகள் செய்ய ஆரம்பித்தான்.

''ரயிலே ஓட்டிவிடுவானாம்!'' என்றார் ஒருவர். பண்டு தலையை அசைத்தான்.

''ஏம்பா, ரயில் என்ன ஒற்றைக் காளை வண்டின்னு நினைச்சியா?''

''எருமையாவது ஓட்டத் தெரியுமாடா டேய்!''

எல்லோரும் சிரித்தார்கள். பண்டு விடவில்லை. முன்னும் பின்னும் போய்ச் சைகைகள் செய்தான்.

அவனைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே ஒரு கண்ணாடிக்காரர் முன் வந்தார். அவனை ஏற இறங்கப் பார்த்தார்.

''டிரைவர்கிட்டே வரயாப்பா கேட்கலாம்?''

பண்டு தலையை அசைத்தான். இருவரும் முதல் வகுப்புப் பெட்டியை நோக்கி நடந்தார்கள்.

கண்ணாடிக்காரர் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார். உள்ளே தோன்றிய காட்சி பண்டுவை நடுங்க வைத்தது. ஒரு பக்கம் படுக்கையில் பயர்மேனையும், மறுபக்கப் படுக்கையில் டிரைவரையும் கிடத்தியிருந்தார்கள். மேலெல்லாம் துணிமணிகளைப் போட்டுப் போர்த்தியிருந்தார்கள். முகம் கூடத் தெரியவில்லை. அவர்கள் இருவரையும் கவனித்துக் கொள்ளப் பிரயாணி ஒருவர் அந்தப் பெட்டியிலேயே கீழே உட்கார்ந்திருந்தார்.

பயர்மேன் முனகிக் கொண்டிருந்தார். மூச்சில் ''ம்ம்ம்...ம்ம்'' என்று ஒரு ராகம் எழுந்து கொண்டிருந்தது. கண்ணாடிக்காரர் டிரைவர் அருகில் சென்றார். முகத்தை மூடியிருந்த துணியை மெதுவாக நீக்கிப் பார்த்தார். டிரைவரின் ஜுர வேட்கை சுரீரென அவர் கையைத் தகித்தது.

''ஸார்....ஸார்....''

பதிலில்லை.

''ராவுலேந்தே ஜுரம். கையிலே உபாதை வேறே! பேச்சு மூச்சே யில்லே!'' என்றார் அங்கிருந்த பிரயாணி.

கண்ணாடிக்காரர் மீண்டும் போர்த்திவிட்டார்.

அவ்வளவுதான்! பண்டுவுக்கு அங்கு ஒரு கணம் கூட நிற்கத் தோன்றவில்லை. இவர்கள் இப்படிக் குற்றுயிராய்க் கிடக்கிறார்கள். இவர்களுக்கு வைத்திய உதவி சீக்கிரமாகவே கிடைக்க வேண்டும். இல்லாவிட்டால்...

எல்லாமே அவசரந்தான்! பண்டு கீழே குதித்தான்.. மனத்தில் ''சீக்கிரம் சீக்கிரம்!'' என்று இரைச்சல் கேட்டது. துள்ளிக் கொண்டு இஞ்சினை நோக்கி ஓடினான். காபினுக்குள் பரபரப்பாக ஏறினான்.

முதலில் கருவிகளைக் கண்ணோட்டம் விட்டான். எல்லாம் சரியாகவே தோன்றின. இந்த இஞ்சினில் 'ரிவேர்ஸ் லிவர்' ஒரு சுழல் சக்கரத்தால் இயங்குகிறது. மற்றப்படி வேறு வித்தியாசமில்லை. ஓட்ட முடியுமா? அனுபவம் இல்லை! பரவாயில்லை! எப்படியும் ஓட்டியாக வேண்டும்!

முதலில் இஞ்சின் ஓட்டுவதற்குத் தேவையானது நீர்! டென்டரில் உள்ள டாங்கியில் போதிய நீர் இருக்கிறது என்பது அருகேயுள்ள பைப்பைத் திறந்ததும் விழும் நீர் விசையால் தெரிந்தது.

சட்டென்று பாய்லரில் நீர் மட்டத்தைக் காட்டும் கண்ணாடிக் குழாயைப் பார்த்தான். போதிய நீர் இருப்பது தெரிந்தது. அதுவரை நிம்மதி! பாய்லரில் இனி நீராவியை உற்பத்தி செய்து விட்டு மற்றவைகளைக் கவனிக்கலாம்.

பயர்பாக்ஸைத் திறந்து சாம்பலையெல்லாம் கீழே சிண்டி விட்டான். இறங்கிப் போய் ஸ்டேஷன் தாழ்வாரக் கூரையில் மூட்டையாக ஏற்றி வைத்திருந்த தென்னஞ் சவுரிகளைக் கொண்டு வந்தான். சவுரிகளில் தீயை மூட்டித் துவாரம் வழியே திணிக்கலானான்.

தீ உள்ளே எரிய ஆரம்பித்தது. பண்டு கரியை வாரிச் சிதறவிட்டான். இஞ்சின் குழாய் வழியாக மெள்ளப் புகை எழுந்தது. அவன் யோசித்தான். கரி எரிந்து சூடு பிடித்து, நீராவி அழுத்தம் ஏற்படுவதற்கு இந்த முறையில் இன்னும் ஆறு மணி நேரமாவது பிடிக்கும். இப்போது தேவைப்படு

வது 'அவசரம்!' எவ்வளவு சீக்கிரம் வண்டியை இயக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்தாக வேண்டும். ஆறு மணி நேரம் காக்க முடியாது.

பண்டு மீண்டும் கீழே குதித்து இடிந்து கிடந்த நிலையக் கட்டிடத்தை நோக்கி ஓடினான். ஸ்டோர் அறை பாதி இடிந்து கிடந்தது. கதவு கீல் கழன்று அந்தரத்தில் சாய்ந்து கிடந்தது. பண்டு மேலும் கீழும் பார்த்தான். பக்க வாட்டத்தில் போய்க் கதவை இழுத்துக் கீழே தள்ளினான். காரைத் துண்டுகள் பெயர்ந்து உதிர்ந்தன. இடிந்த சுவர் மீது ஏறி, உள்ளே தாண்டிக் குதித்தான். அவன் பார்வை மூலையை நோக்கி ஓடியது. ஸ்டேஷன் விளக்குகளை ஏற்றுவதற்காக வைத்துள்ள மண்ணெண்ணெய் டின்கள் இரண்டு தென்பட்டன. முகமெல்லாம் மகிழ்ச்சி. டின்கள் அதுங்கிக் கிடந்தனவே தவிர எண்ணெய் ஒழுகிப் போய்விடவில்லை. டின்களோடு இஞ்சினுக்குத் திரும்பினான்.

ஒவ்வொரு ஷோவல் கரியிலும் எண்ணெய் தெளித்து பயர்பாக்ஸுள் சிதற விட்டான். உள்ளே தீ 'திகுதிகு'வென்று எரிந்தது. பிறகு கதவை மூடிவிட்டு எண்ணெய்க் கேனை எடுத்துக் கீழே இறங்கி இன்ஜினின் வெளிப்புறம் நோட்டம் விட ஆரம்பித்தான்.

பிஸ்டன் தண்டுகளிலும், மூட்டுக்களிலும் வால்வுஇயக்கிகளிலும், குனிந்து எண்ணெய் போட ஆரம்பித்தான். மழைத்தூறல் லேசாக அவ்வப்போது உதிர்ந்து கொண்டிருந்தது. வானத்தில் மேகங்கள் பெரும்படைகள் போல் ஒரே வேகத்தில் தெற்கு நோக்கி ஓடிக் கொண்டிருந்தன. சூரிய ஒளி தென்படாமல் எங்கும் ஒரே மூட்டமாகவே இருந்தது.

பண்டு அவ்வப்போது இஞ்சினில் ஏறி பயர்பாக்ஸைத் திறந்து கரியை வீசி எறிந்து கொண்டிருந்தான். தீ நன்றாக வளர்ந்து சிவப்புப் பிழம்பாய்த் தெரிந்தது. உள்ளே பாய்லரில் சிறு இரைச்சலுடன் தண்ணீர் கொதிக்க ஆரம்பித்தது.

சிறிது நேரத்தில் பண்டு ஆயுதப் பெட்டியிலிருந்து சுத்தியலை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினான். ஒவ்வொரு பெட்டிக்கு அருகில் சென்று இடுப்பை வளைத்துக் குனிந்து ஒவ்வொரு சக்கரமாகத் தட்டிப் பார்த்தான். விபத்திலிருந்து தப்பித்து வந்திருக்கும் வண்டியின் சக்கரங்கள் எங்கேயாவது உடைசல் கண்டிருக்கக் கூடாதே என்று பயம்!

''கிணங் கிணங்!''

'விரிசல் ஏதும் இல்லாமல் இருக்கிறோம்' என்பதைத் தெரிவிக்கச் சக்கரங்கள் நல்ல மணிச் சப்தத்தை உண்டுபண்ணின.

''ஹ ஹ ஹா....ஹா!''

பண்டு மேலே நிமிர்ந்தான். மேலே சன்னல்களில் எல்லாம் பெண்கள்! அவனையே உற்றுப் பார்த்தார்கள். 'குறும்புக்காரிகள்' என்று நினைத்துக் கொண்டே பண்டு பரபரப்போடு நகர்ந்தான். கடைசிவரை போய்விட்டு, மறு பக்கத்து வழியே சக்கரங்களைச் சோதித்து விட்டு இஞ்சினுக்கு வந்தான்.

உள்ளே ''இஸ்....ஸ்...'' என்ற இரைச்சல் எழுந்தது. அவனுக்கு மகிழ்ச்சி புரண்டது. அளவுமானியை ஆவலோடு பார்த்தான். நீராவி 90 பவுண்டுக்கு ஏறியிருந்தது. கைகளைப் பலமாகக் கொட்டிக் கொண்டான்.

அடுத்த ஒன்றரை மணி நேரத்துக்கு இஞ்சினிலேயே இருந்து கொண்டு தீயைக் கவனிக்கலானான். ஷோவலும் கையுமாக பயர்பாக்ஸைத் திறப்பதும் மூடுவதுமாக ஒரே பம்பரச் சுழலாய் விளங்கினான்.

நீராவி அழுத்தம் காட்டும் முள் 180 பவுண்டுக்கு வந்தது. பண்டு மகிழ்ச்சியில் ஒரு தரம் துள்ளிக் குதித்தான். பிறகு ஆவலோடு விசிலின் விசையை இழுத்தான். ''வீ.....வீ.....வீ....!'' இஞ்சின் இரைந்தது.



இஞ்சின் அலறிய சத்தம் எல்லோரையும் உலுப்பி எழுப்பியது. சிலர் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தார்கள். சிலர் கீழே இறங்கிப் பார்த்தார்கள்.

பண்டு கைகளைத் தூக்கி ''வே...வே...'' என்று இரைந்தான். பிறகு எல்லோருக்கும் 'டாட்டா' காட்டிவிட்டு ஒரு கணம் கூடப் பொறுக்காமல் கருவிகள் பக்கம் திரும்பிக் கொண்டான். நீராவி எழுந்து விட்டது. இஞ்சினில் உள்ள எல்லாச் சாதனங்களும் பிரேக்கிலிருந்து டைனமோ வரை எல்லாம் நீராவி உதவியாலேயே இயங்குபவை. இந்தச் சாதனங்கள் யாவும் சரியாக இயங்குகின்றனவா என்று பார்த்துவிட வேண்டும்.

முதன் முதலில் டாங்கியிலிருந்து பாய்லருக்கு நீரை ஏற்றும் இன்ஜெக்டர் வேலை செய்கிறதா என்று சோதித்தான். கொடகொடவென்ற நீராவியின் விசை தண்ணீரைத் தள்ளிக் கொண்டு ஓடும் சத்தம் கேட்டது. பண்டுவுக்கு ஒரே மகிழ்ச்சி!

அடுத்தாற்போல் டைனமோ இயக்கும் விசையை விளையாட்டாக இழுத்தான். ''இர்ர்ர்...ர்ர்'' என்று இரைச்சல். காபினுக்குள் தொங்கிய மின்சார பல்பு எரிந்தது. ஒருதரம் கும்பிட்டுவிட்டு டைனமோவை நிறுத்தினான்.

பிறகு வாக்குவம் பிரேக் அருகில் வந்தான். விசையை இழுத்துப் பரிசோதிக்கிறான். அளவுகாட்டியில் முள் ஐந்துக்கு மேல் ஏறாமல் நின்று விட்டது.

அவனுக்குக் கவலை ஏற்பட்டது. வாக்குவம் காஜின் முள் இருபது பவுண்டுக்கு மேல் அதிகமாகக் காட்டினால்தான், ரயில் வண்டியின் பிரேக்குகளைச் சரியாக இயக்கி உபயோகிக்க முடியும். முள் இப்படி ஐந்துக்குக் கீழ் விழுகிறதே! எங்கேயாவது குழாய்களில் 'லீக்' இருக்குமோ?

பண்டு கீழே குதித்தான். ஒவ்வொரு பெட்டியையும் இணைக்கும் கப்ளிங்குகளின் அருகே சென்று, இரண்டு பெட்டிகளின் 'டிரெயின் குழாய்களும் நன்றாகப் பொருந்தியிருக்கின்றனவா என்று பார்க்கலானான். கூடவே, அபாயச் சங்கிலியை யாராவது இழுப்பதால், ரயில் பெட்டிக்கு வெளியே தள்ளிக் கொள்ளும் நாக்கு எந்தப் பெட்டியிலாவது நீட்டிக் கொண்டிருக்கிறதா என்று கவனித்தான்.

கடைசிப் பெட்டி வரை சென்று திரும்பி விட்டான். எல்லாம் சரியாக இருப்பதாகவே தோன்றின. இஞ்சினில் ஏறி விசையை ஆவலோடு இழுத்தான். முள் ஐந்துக்கு மேல் ஏறவில்லை.

பண்டுவுக்குக் கவலை கவ்வியது. கீழே இறங்கினான். தலையைச் சொறிந்தவாறு நின்றான். பிரேக் இல்லாமல் வண்டியை இயக்குவதா? ஆபத்தாயிற்றே! இஞ்சினுக்கு மட்டிலும் தனியாக உள்ள நீராவி பிரேக்கை உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால் மற்ற வண்டிச் சக்கரங்களிலுள்ள பிரேக்குகள் இயங்காவிட்டால், வண்டிகள் தறி கெட்டு ஓட ஆரம்பிக்குமே! வெறும் இஞ்சின் பிரேக்கை மாத்திரம் வைத்துக் கொண்டு, வண்டித் தொடரை நினைத்த இடத்தில் நிறுத்த முடியாதே! பிரேக்குகளில்லாத வண்டிகளின் வேகம் இஞ்சினையும் முன்தள்ளிக் கொண்டு போய்விடுமே! இப்போது என்ன செய்ய?

இந்த ஆபத்தை நீக்குவதற்கு, வண்டியை வேண்டுமானால் அதிக வேகமில்லாமல் மெதுவாக ஓட்டிக் கொண்டு செல்லலாம். அது ஒன்றுதான் வழி! அப்படியும் டௌன் கிரேடியண்ட் (சரிவுப் பாதை) ஏதாவதில் அகப்பட்டு விட்டால்... பள்ளத்தை நோக்கி வண்டி பிரேக் இல்லாமல் ஓடிக் கொண்டிருக்குமே!

பண்டு பலவிதத்திலும் யோசித்தான். குழாய்களில் எங்கேயாவது கட்டாயம் 'லீக்' இருக்க வேண்டும்! எந்த இடத்தில் இருக்கும்?

ஒவ்வொரு பெட்டியாகச் சோதித்து விடுவது என்று முடிவுக்கு வந்தான். இஞ்சினுக்குப் பின்புறம் வந்தான். கப்ளிங் அருகில் சென்று மறுபெட்டியோடு இணைத்துள்ள தொய்வுக் குழாயைக் கழற்றினான். இஞ்சின் பக்கக் குழாயை அதற்கு அருகிலே நீட்டிக் கொண்டிருக்கும் குமிழில் சொருகி, வாய்த் துவாரத்தை இறுக மூடினான். இப்போது இஞ்சினில் ஏறி விசையை இயக்கியதில், முள் விர்ரென்று இருபத்தைந்துக்கு ஓடியது. இஞ்சின் பகுதி வரை வாக்குவம் குழாய் சரியாக இயங்குகிறது என்று தெரிந்து விட்டது.

இவ்விதம் ஒவ்வொரு பெட்டிக் குழாயாகக் கழற்றி, அங்கங்கே குழாயருகில் நீட்டிக் கொண்டிருக்கும் குமிழில் சொருகி, மீண்டும் மீண்டும் இஞ்சினுக்கு ஓடி வந்து விசையை இழுத்துப் பார்த்தான். முள் இருபத்தைந்துக்கு ஏறிக் கொண்டிருந்தது.

ஒவ்வொரு பெட்டியாகச் செல்லச் செல்லக் களைப்புத்தான் மேலிட்டது. மூச்சு வாங்கியது. பிரயாணிகளுக்கு அவன் என்ன செய்கிறான் என்பது புரியவில்லை. குறுக்கும் நெடுக்குமாக அவன் நூறு தடவை ஓடுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஆறு பெட்டிகள் பரிசோதிக்கும் வரை, இஞ்சினிலுள்ள வாக்குவம் காஜின் முள் இருபத்தைந்துக்குச் சாதாரணமாக ஓடியது. ஏழாவது பெட்டியைப் பொருத்திப் பார்த்த போது, முள் முன் போல் ஐந்துக்கு மேல் ஏறாமல் நின்று விட்டது. அந்தப் பெட்டியில் தான் ஏதோ 'லீக்' என்று புரிந்து விட்டது.

ஏழாவது பெட்டியின் குழாயைச் சிறிது நேரம் கூர்ந்து சோதித்தான். அவனுக்கு ஒன்றும் புலப்படுவதாக இல்லை. இனிமேலும் இதில் அவகாசத்தை வீணாக்க விரும்பவில்லை. ஆறு பெட்டிகளில் பிரேக் சரியாக இயங்கினால் அது போதும், சமாளித்துக் கொள்ளலாம்! மீதி ஐந்து பெட்டிகள் பிரேக் இல்லாமல் இயங்கிக் கொண்டிருக்கும்! பரவாயில்லை! வண்டியை மிதமான வேகத்தில் ஓட்டினால் இந்த ஆறு வண்டி பிரேக்குகளே போதுமான அளவு எதிர்ப்புச் சக்தியைக் கொடுத்து, ரயில் தொடரை நிறுத்திவிடும்!

ஆறாவது பெட்டிக் குழாயைக் குமிழில் சொருகி அதன் வாயை அடைத்துவிட்டு, ''அப்பாடா!'' என்று எழுந்தான் பண்டு. முதுகு ஒடிந்துவிடுவது போல் வலி! தள்ளாடியவாறு இஞ்சினுக்குச் சென்றான்.

இஞ்சினருகில் அநேக பிரயாணிகள் கும்பலாக நின்று கொண்டிருந்தார்கள். பண்டுவுக்கு யோசனை தோன்றியது. இஞ்சினை மெதுவான வேகத்தில் ஓட்ட நினைத்தாலும், அவனுக்குப் பக்கபலமாக ஓர் உதவியாள் தேவை! இதற்கு என்ன செய்வது?

கும்பலில் அவன் பார்வை சென்றது. திடகாத்திரமான உருவத்துடன் நின்றிருந்த ஒரு வாலிபன் அருகில் சென்றான். அவனைத் தன்னுடன் இஞ்சினில் ஏறும்படி சைகை செய்தான். வாலிபன் தயங்கிப் பின்வாங்கினான்.

''ம்.... ம்.... ஏறிக் கொள்ளுங்க! அவன் என்னதான் செய்யறான் பார்க்கலாம்!'' என்றார் ஒருவர்.

வாலிபன் பயந்து கொண்டே இஞ்சினுள் ஏறினான். பண்டு அவனைத் தொடர்ந்தான். உள்ளே பயர்பாக்ஸில் எப்படிக் கரி அள்ளிப் போடுவது என்பதைச் செய்து காட்டினான். வாலிபன் கையில் ஷோவலைக் கொடுத்து,

அவன் கரி அள்ளிப் போடுவதையும் பார்த்து, சரியான முறையைக் கற்பிக்க, பல தடவை அவனைத் திருத்தினான்.

பிறகு பண்டு விசிலை நீண்டு இழுத்துவிட்டான். வீ....ச....ச.... என்று குரல் வளையை இடுக்கிக் கொண்டு இஞ்சின் கத்தியது. வாயில் பக்கம் எட்டிப் பார்த்து எல்லாரையும் ஏறிக் கொள்ளும்படி கையைக் காட்டினான் பண்டு. கீழே நின்றிருந்தவர்கள் தம் தம் பெட்டிகளுக்கு விரைந்தார்கள்.

கடைசியாக நீராவி அழுத்தத்தைப் பார்த்த போது, முள் 210 பவுண்டைத் தாண்டிக் கொண்டிருந்தது. பாதுகாப்பு வால்வு வழியாக நீராவி பிய்த்துக் கொண்டு ஓட ஆரம்பித்தது. பண்டு விசிலை இழுத்துவிட்டான். கீச்சுக் குரல் காற்றில் சிதறிச் சென்றது. எல்லோரும் ஏறிக் கொண்டார்களா என்று பண்டு தலையை நீட்டிக் கவனித்துப் பார்த்தான். பிறகு உள்ளே திரும்பி இஞ்சினை ஒரு தரம் தொட்டுக் கும்பிட்டான். உடன் 'ரெகுலேட்ட'ரை மேல் நோக்கி ஓர் இழு இழுத்தான். 'கப்' என்ற சத்தத்துடன் நீராவி விடுபட்டு ஸிலிண்டருக்குள் நுழைந்தது.

"ம்.... ம்.... ம்.... ம்.... ..ம்.ம்."

ஒரு பெரிய உறுமல் எழுந்தது. வாலிபன் பயத்தோடு பண்டுவைப் பார்த்தான். வண்டி நகரவில்லை. பண்டு ரெகுலேட்டரை மேலும் சிறிது நகர்த்தினான். "ம்...ம்...ம்..."

வண்டி நகரவில்லை. பண்டுவுக்குப் புரிந்தது. பிஸ்டன் தண்டு ஸிலிண்டரில் எக்கச்சக்கமான நிலையில் மாட்டிக் கொண்டிருக்கிறது. வண்டியைப் பின்னுக்குச் சற்று நகரவைத்த பிறகுதான் முன்னுக்குக் கொண்டு வர வேண்டும்.

'ரிவேர்ஸ் கியரை' விரைவாகச் சுற்றிவிட்டான். "இஸ்....ஸ்.....ஸ்...." என்று பேரிரைச்சல். தடைப்பட்ட ஏதோ ஒன்று திடீரென்று ஏதோ வழி கிடைத்து ஓடுவது போல் ஒரு சத்தம். வண்டி மெள்ளப் பின்னுக்கு நகர்ந்தது.

சிறிது நேரம் நகர்ந்தபின், முன்னுக்குப் போக வேண்டி, ரிவேர்ஸ்கியரை மீண்டும் எதிர்த் திசையில் சுற்றி விட்டான். மறுபடியும் "ம்ம்...ம்ம்ம்ம்ம்ம்ம்..." என்று உறுமல். பிறகு, "திரு திரு திரு" வென்று ஒரு பேரோசை! சக்கரங்கள் இருந்த இடத்திலேயே சுழன்று கொண்டன. இஞ்சின் முழுவதும் அதிர்ந்தது. வண்டி முன்னுக்கு ஓர் அடிகூட நகரவில்லை.

வாலிபன் பண்டுவைப் பார்த்தான்! யந்திரத்தின் உள்ளே இருப்பதன் உணர்வு, நீராவி கிளப்பும் ஓசை, தீ எரியும் கோலம், வெட்கை, அதிர்ச்சி, கடைசியில் ஓர் உலுக்கல் யாவுமே அவனை நிலைகுலையச் செய்தன.

பண்டு ரெகுலேட்டரை இன்னும் இழுத்தான். ஓர் அழுத்தமான "ம்ம்ம்ம்ம்.." சக்கரங்கள் மீளவும் தண்டவாளத்தில் ஒரே இடத்தில் சுற்றின. இஞ்சின் பெரும் அதிர்ச்சியில் உலுக்கிக் கொண்டது. வண்டி நகரவில்லை.

அவ்வளவுதான்! வாலிபன் பீதியோடு வெளியே குதித்தான். பண்டு ஒருகணம் திகைத்தான். மறுகணம் அவனும் கீழே குதித்து, வாலிபன் கைகளைப் பற்றிக் கொண்டு மேலே வரும்படி இழுத்தான்.

"வேண்டாமப்பா! நான் வரவில்லை!" என்று கூறிவிட்டு வாலிபன் திமிறிக் கொண்டு நகர ஆரம்பித்தான். பண்டு அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தான். இதற்குள் நிலைமை ஏதோ மோசமாகி யிருக்கிறது என்று நினைத்துஒருவர் கீழே இறங்கி வந்தார்.

"டேய், உனக்கு வண்டி ஓட்டத் தெரியுமா? நீ வேறு ஏதாவது அபாத்திலே எங்களை மாட்டிவிடப் போகிறாய்!" என்று இரைந்து கூறிவிட்டு, மழைத் தூறலைத் தாங்காமல் மீண்டும் விரைவாகப் போய்ப் பெட்டியில் ஏறிக் கொண்டார்.

பண்டுவுக்குத் துக்கம் பொங்கி வந்தது. கண்ணீர் வழியலாயிற்று. தலையைக் கவிழ்ந்து கொண்டு தரையில் உட்கார்ந்தான். தன் முயற்சிகளெல்லாம் அந்தச் சிறு நிகழ்ச்சியில் தகர்ந்துவிட்டது போல் தோன்றியது. அப்போதுதான் தனக்கு வாய் இல்லாத குறையை அவன் வெகுவாக உணர்ந்தான். வாய் இருந்தால், இஞ்சினின் இயல்புகளை விளக்கி, இது ஒன்றும் புதிதல்ல என்று கூறியிருக்கலாம். இப்போது அவனைப் புரிந்து கொள்ள யாரும் இல்லை. கன்னத்தில் கையைவைத்துக் கொண்டு ஈரத் தரையிலேயே அமிழ்ந்து விட்டான்.

தூறல் 'புகபுக'வென்று விழுந்தது! காற்று ஒருசிறு ராகமாக இசைந்துகொண்டது. வானமெல்லாம் மூட்டம்தான். பூமியில் சுற்றிப் பார்க்குமிடமெல்லாம் நீர்க்காடு! அங்கங்கே சிறு திட்டுகள்! அந்த ரயில் நிலையமே ஏதோ தீவில் இருப்பது போல் பட்டது.

"என்னப்பா, என்ன சமாசாரம்?"

கண்ணாடிக்காரர் அருகில் நின்றார். பண்டு அவரை நிமிர்ந்து நோக்கினான். மேலும் இருவர் வந்து சேர்ந்து கொண்டார்கள். பண்டு மெதுவாக எழுந்தான். தனக்கு ஓர் ஆள் தேவை என்று கெஞ்சுவது போல் சைகை செய்தான்.

சிறிது நேரம் மௌனம்! பிறகு ஒருவன், "நான் வருகிறேன்" என்று கூறிக் கொண்டு முன்னுக்கு வந்தான். பண்டுவுக்கு மகிழ்ச்சி பொங்கியது. கைகளைப் பற்றிக் கொண்டு நன்றிப்பெருக்கோடு அவனைப் பார்த்தான். பிறகு அவனை இழுத்துக் கொண்டு இஞ்சினை நோக்கி விரைந்தான்.

இஞ்சின் கூவியது. பண்டு ரெகுலேட்டரை இழுத்தான். மீண்டும் பேரோசை! திமுதிமு என்று ஒரு பெரிய சத்தம்! தண்டவாளத்தில் சக்கரங்கள் ஒரே இடத்திலேயே சுழன்று கொண்டிருந்தன. இஞ்சின் முழுவதும் அதிர்ந்தது. வண்டி முன்னுக்கு நகரவில்லை. உதவியாளன் முகத்தில் ஒரு திகைப்பு! பண்டு அவனைக் கையால் அமர்த்திக் கொண்டான்.

பிறகு மீண்டும் ஒரு முறை ரெகுலேட்டர் இழுக்கப்பட்டது. அதே சத்தங்கள்! சக்கரங்கள் மறுபடியும் அதே இடத்திலேயே சுழன்று கொண்டன. இஞ்சின் நகரவில்லை.

பண்டுவுக்கே திகைப்பு ஏற்பட்டது. கீழே இறங்கினான். தண்டவாளத்தை உற்றுக் கவனித்தான். பிறகு யோசித்தான். அவனுக்கு

உண்மை பளிச்சென்று உதயமாகியது. நாள் முழுதும் மழை அடித்துத் தண்டவாளத்தின் மேல் சறுகல் கண்டு விட்டது. தவிர இந்த ரயில் நிலயத்தின் தண்டவாளம் ஒரு நேர் கோடாகச் செல்லாமல், வளைவாகப் போய்க் கொண்டிருக்கிறது. இந்த வளைவு பெரிய எதிர்ப்புச் சக்தியை விளைவிக்கிறது. தண்டவாளம் வேறு சறுகலாக இருக்கவே சக்கரங்கள் மேலே நகராமல் இருந்த இடத்திலேயே சுழலுகின்றன.

காரணத்தை ஊகித்ததும் ஷோவலை எடுத்துக் கொண்டான். கீழே உள்ள ஈரச் சரளை மணலைப் பெயர்த்தெடுத்துத் தண்டவாளங்களின்மீது தூவ ஆரம்பித்தான். ஒரு முப்பதடிவரை தூவிவிட்டு இஞ்சினுக்குள் ஏறினான்.

ரெகுலேட்டரை இழுத்தான். ''ம்....ம்'' என்று ஓர் அசுர விம்மல்! சக்கரங்கள் ஒரு சுற்றல் நழுவிக் கொண்டன. பிறகு தண்டவாளத்தின் மீதுள்ள மணலில் கரகரத்துக் கொண்டு, ஒரு பிடிப்பை ஏற்படுத்திக் கொண்டன. இஞ்சின் வேண்டாவெறுப்புடன் நகர்வது போல் நகர்ந்தது. ''கப்... கப்...!'' புகை போக்கியில் பெரும் முழக்கம்! 'ஸ்ஸ்' என்று சிலிண்டருக்குக் கீழேயுள்ள 'வேஸ்ட் வாட்டர்' குழாயில் நீராவி தப்பியோடும் பேரிரைச்சல்! பிஸ்டன் முதல் தடவை இயங்கிவிட்டது. ''கப்... கப்!'' வண்டி நகர ஆரம்பித்தது.

பண்டு விசிலை நீண்டு இழுத்து, வெளியே நோக்கினான். நகரும் பெட்டிகளிலிருந்து பிரயாணிகள் சன்னல் வழியாக ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தனர்.

''ரிவேர்ஸ் லிவரை'' இயக்கி, ''அட்ஜஸ்ட்'' செய்து கொண்டு ரெகுலேட்டரை மேலும் சற்றுத் தள்ளினான். ''கப்...கப்....'' சத்தங்களின் இடைவெளி குறுகி, அந்த இரைச்சலுக்கே ஒரு தாளகதி ஏற்பட்டது. வேகமும் கூடியது. வண்டி சீராக ஓட ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் ''வேஸ்ட் வாட்டர்'' குழாயை அடைத்து நீராவியின் இரைச்சலை அடக்கினான்.

நிலயத்தின் அவுட்டரைத் தாண்டிவிட்டான். கைகாட்டி மரம் கீழே குப்புற வீழ்ந்து கிடந்தது. பார்க்கும் இடமெல்லாம் பனைகளும், பூவரசுகளும், முள் மரங்களும் முறிந்தும் மூட்டோடு உருவிக் கொண்டும் தரையில் விழுந்து கிடந்தன. தந்திக் கம்பங்கள் யாவும் இருகிக் கொண்டு சிலந்தி வலையில் அகப்பட்டது போல், தம் கம்பிகளின் பின்னல்களிலேயே சிக்கிக் கொண்டு தரையில் உருண்டு கிடந்தன. எட்டியவரை தண்ணீர் விரிப்புகள்தான்! மேலே, ஆகாயத்தில் நிதானமாய் நகரும் கருங்கூட்டங்கள்! சுற்றி வர ஊசிபோல் பொடித் தூறல்கள்!

பண்டு மெதுவாகவே வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான். வேகங்காட்டியில் 10க்கும் 15க்கும் இடையில்தான் முள் துடித்துக் கொண்டிருந்தது.

அவன் மனத்தில் ஒரே கலவரம்! தான் செய்து கொண்டிருப்பது சரியா? ஒருவித ஆபத்தும் இல்லாமல் வண்டியை அடுத்த நிலயத்தில் சேர்த்து விடுவோமா? அல்லது வண்டியை அந்தரத்தில் நிறுத்திவிட்டு..... மனம் துடித்துக் கொண்டது. அடிக்கடி பாதையை உன்னிப்பாகக் கவனித்தான். பின்புறம் நோக்கி வண்டித் தொடரைக் கவனித்தான். இடையே பாய்லரின் நீர் அளவைப் பார்த்துக் கொண்டான். நீராவி அழுத்தத்தைக் காட்டும் அளவுமானியை அடிக்கடி கவனித்தான். பிறகு, பயர்பாக்ஸில் கரி அள்ளிப் போடும்படி உதவியாளருக்குச் சைகை செய்தான்.

இடையில் தன்னையே உற்சாகப்படுத்திக் கொள்ள விசிலை 'வீல்' என்று அடித்துக் கொண்டான். பின்புறம் வண்டித் தொடரை நோக்கினான். பெட்டிகளிலிருந்து அநேகர் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தார்கள். ''ஆகா! இந்தக் குறும்புக்காரிகள் இருக்கிறார்களே.......!''

ஒரு பயம்! பாதையை உன்னிப்பாகப் பார்க்க வேண்டும். பகலானாலும் வெளிச்சம் மந்தம்! இரு பக்கத் தண்டவாளங்கள் மழுங்கிய மினுமினுப்பாய்த் தெரிய, அவற்றின் மேல் தளம் சீராகத் தெரிகின்றனவா என்று கண்ணோட்டம் விட்டுக் கொண்டான். இடையே பாதையின் ஓரத்தில் மேடு, பள்ளம், சமதளம் இவற்றின் தரங்களைக் காட்டும் குறி காட்டிகளையும் கவனத்தோடு பார்த்துக் கொண்டான். ஏதாவது சரிவுப் பாதையில் அகப்பட்டு, அந்தச் சமயத்தில் 'பிரேக்' இயங்காமல் போய்விடுமோ என்று உள்ளூற நடுக்கம்!

''வீ..... வீ......''

''நிறுத்து! வண்டியை நிறுத்து! தண்ணீர் தண்ணீர்!'' பண்டு உள்ளே அளவுமானியைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, உதவியாள் உரக்கக் கத்துவதைக் கேட்டு வெளியே தலையை நீட்டினான். கை முதலில் ரெகுலேட்டரை இழுத்தது. இன்னொரு கை வாக்குவம் பிரேக்கை இழுத்தது.

சற்றுத் தொலைவில் தண்டவாளம் தண்ணீருக்குள் மூழ்கியிருந்தது.

வண்டி நின்றது. பண்டு கீழே குதித்தான். அநேக பிரயாணிகளும் இறங்கினார்கள். முன்னால் முந்நூறு அடி தூரத்துக்குத் தண்ணீர் மூடியிருந்தது! யாவரும் அச்சத்தோடு நின்றார்கள். அந்தப் பழைய பிரயாணி கோபத்தோடு வந்தார். ''ஏனய்யா? ஆபத்திலே கொண்டு மாட்டிவிடுவாய் போல் இருக்கே! ஸ்டேஷனை விட்டு உன்னை யாரய்யா வண்டியைக் கிளப்பச் சொன்னது? நடுக் காட்டிலே விட்டு விட்டுப் போய்விடுவேபோல் இருக்கே......!''

பண்டுவுக்கு வெலவெலத்து விட்டது. அவரையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தான். பிறகு மௌனமாக இஞ்சினைத் தாண்டி முன்புறம் வந்தான். உண்மையில் இது ஆபத்துத்தானா?

லயனில் நடந்து தண்ணீர்ப் பக்கம் வந்தான். தண்ணீர் தேங்கிக் கிடந்ததே ஒழிய ஓடவில்லை. அதுவரை மனத்துக்குத் திருப்தி! கீழே பாலாஸ்டு கற்களோ, மணலோ அரிக்கப்பட்டிருக்காது. தண்டவாளத்தைத் தாங்கும் ஸ்லீப்பர் கட்டைகள் மீது கால் வைத்து, தண்ணீருக்குள் நடக்க ஆரம்பித்தான். லயனின் மீது இரண்டு அங்குல உயரத்துக்குத்

தான் நீர்! இது மழை நீரா? ஓடை நீரா? ஆற்று நீரா ?

இந்த நிலையத்தின் இரண்டு மைல் சுற்றளவு வரை அவனுக்கு எல்லாம் தெரியும்.

நாலாவது மைலில்தான் அந்தச் சூறையாறு இருக்கிறது. இங்கே.... ஓடையும் கிடையாது! குளமும் கிடையாது. தண்ணீர் வெறும் தேங்கல் தண்ணீர்தான்! வடிகால் எங்கேயோ வாய்ப்பாக இல்லை. அதனால் நீர் தேங்கி விட்டது. பாதைக்குக் கேடு ஒன்றும் ஏற்பட்டிருக்காது. எனினும், நீருள் சூழ்ந்திருக்கும், தண்டவாளச் சேர்ப்புகளைப் பிணைக்கும் பிஷ்பிளேட்டுகளைப் பரிசோதித்துவிட வேண்டும். கவனக் குறைவு கூடாது.

பண்டு தண்ணீருக்குள் கையை விட்டு இரு பக்க பிஷ்பிளேட்டுகளையும் விரல்களால் உணர்ந்து கொண்டே போனான். குனிந்து, குனிந்து அவன் சோதனை செய்வதை யாவரும் பிரமிப்போடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். தண்ணீர் தங்கிய முழு நீளமும் போய்விட்டுத் திரும்பி வந்ததும் பிரயாணிகளை நோக்கி, மகிழ்ச்சியோடு கையைத் தூக்கினான். பிறகு இஞ்சினில் ஏறி விசிலை இழுத்தான்.

வண்டி மீண்டும் புறப்பட்டது. சக்கரங்கள் தண்ணீருக்குள் கிழித்துக் கொண்டன. அநேகர் வேடிக்கையாகப் பார்த்தார்கள். அநேகர் பயத்தோடு பார்த்தார்கள். 'கப் கப்' என்று தாளம் இசைய, நீராவி ''இஸ்ஸ்'' என்று சிதறிக் கொள்ள, இஞ்சின் கருங்குன்று நகர்வது போல் நகர்ந்தது. தண்ணீர் பெரிய பெரிய வரிகளாக அலைவீசிக் கொண்டது. வண்டி கரை ஏறிய பிறகுதான் எல்லோருக்கும் ஒரு நிம்மதி ஏற்பட்டது.

பிறகு ஒரு மைல்வரை சமதளம்தான். பண்டுவுக்குக் கண்காணிப்பு செய்வதைவிட வேறு ஒருவிதத் தொல்லையுமில்லை. மெதுவாகவே ஓட்டிச் சென்றான். அரை மணியில் அவன் கண்களுக்குச் சரிவு தென்பட்டது. பாதை ஓரமுள்ள குறிகாட்டியின் கீழ் நோக்கிய கையில் இருநூறு என்று போட்டிருந்தது. பாதை இருநூறு அடிக்கு ஓர் அடி கீழே இறங்குகிறது என்று புரிந்து கொண்ட பண்டு, ரெகுலேட்டரைக் கீழே தள்ளி, வண்டியின் வேகத்தைக் குறைத்துக் கொண்டான்.

சிறிது தூரம் சென்றதும் 150 என்ற எண்ணுள்ள கீழ் நோக்கிய குறியீட்டைக் கண்டதும் பண்டுவுக்குப் பரபரப்பு ஏற்பட்டது. பாதை மேலும் கீழே இறங்குகிறது. இந்தச் சரிவின் முடிவில்தான் அந்தச் சூறையாறு இருக்க வேண்டும் !

சூறையாறு! நல்ல பெயர் வைத்திருக்கிறார்கள். பெயரைப் போலவே அது மனித ஜீவன்களையே சூறையாடி விடுமாம். எப்போது பெருக்கெடுக்கும் என்பது தெரியாதாம். திடீர் திடீர் என்று தோன்றி, அது போல் திடீரெனவே வற்றி விடுமாம். அது பாயும் வழியையும் அடிக்கடி மாற்றிக் கொள்ளுமாம். ஒரு தரம் அம்மாதிரி மாற்றிக் கொண்டு ரயில் பாலத்தையே சுவீகரம் செய்து விட்டதாம். ஐந்து வருடங்களுக்கு முன் இது நடந்ததாம். இந்தப் புதிய ரயில் பாலத்தை பழைய பாலத்துக்குக் கிழக்கே இரண்டு பர்லாங்கு தள்ளிக் கட்டியிருக்கிறார்களாம்.

பண்டுவுக்கு உதறல் எடுத்தது. வெகு தூரத்துவரை எட்டிய அவன் பார்வை, பூமி அந்த இடத்தில் இறங்கி ஒரு பள்ளத்தாக்காக மாறுவதை உணர்ந்து கொண்டான். வெகு தொலைவில் முள் மரங்களின் உச்சிப் பகுதிகள் மாத்திரம், அவனது கீழ் சரிந்த பார்வையில் விழுந்தன. அந்த இறக்கத்தைப் பார்த்தபோது, எல்லாவற்றுக்கும் மேலே அவன் பறந்து கொண்டிருப்பது போல் தோன்றியது.

பாதை இன்னும் இறங்கிக் கொண்டது. பண்டு நீராவியை அடைத்து விட்டான். ரயில் மெதுவாக, தன் சுய கனத்திலேயே முன்னேறிக் கொண்டிருந்தது. அவன் பாதையை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டு போனான். அடைபட்ட நீராவி பாதுகாப்பு வால்வு வழியாகப் பீய்த்து ஓடிக் கொண்டிருந்தது. பிஸ்டன் தண்டுகள் உரமில்லாமல், ''களாங் களாங்'' என்று அடித்துக் கொண்டிருந்தன.



தூரத்தில் திடீரென வெள்ளப் பெருக்கின் மினுமினுப்பு தெரிந்தது. உடன் உடலெங்கும் மயிர் சிலிர்த்துக் கொண்டது. அதன் பரந்த பரப்பைப் பார்க்கும்போது, இஞ்சினையும், ரயில் தொடரையும் சாதாரணமாக விழுங்கி ஏப்பம் விட்டுவிடும் போலிருந்தது. அந்தக் காட்சி தந்த பயத்தின் அதிர்வில் கண்களில் நீர் வந்து விட்டது. ஒரு கணம் வண்டியும் அவனும் உலகத்தையே விட்டு வேறு எங்கேயோ பிரயாணம் செய்வதுபோல் இருந்தது.

இப்படியே வண்டி நகர்ந்து கொண்டிருந்து. அதை நிறுத்த வழியில்லாமல் போய் ரயில் பாலமும் நடுவில் உடைந்து போயிருந்தால்.....?

பண்டுவுக்கு உடம்பு அதிர்ச்சியில் சொடுக்கிக் கொண்டது. ஒருகணம் உதவியாளை உற்று நோக்கினான். வெளிப்புற அழகை அவன் ரசித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ஆபத்தான சூழ்நிலையை உணராமல் அவன் அப்படிப் பார்த்துக் கொண்டிருப்பது பண்டுவுக்கு ஆச்சரியமாகப் பட்டது.

பயத்தின் ஓர் அலை பண்டுவைத் தாக்கியது. ஏதோ வெறி கொண்டவன் போல் அவன் விசிலை இழுத்து, ''வீ.... வீ... வீ...'' என்று அதிருமாறு சத்தத்தைக் கிளப்பினான். உதவியாள் காதுகளைப் பொத்திக் கொண்டு அவனை வெறுப்போடு பார்த்தான். காற்றின் எதிர்வேகம் விசிலின் சத்தத்தை அதன் வாயிலிருந்து பிடுங்கிக் கொண்டு ஓடி மறைந்து கொண்டிருந்தது.

பாதை ஒரு சிறு வளைவில் திரும்பியது. பண்டுவின் முன்புறப் பார்வையில் ஒரு காட்சி பரந்த கோணத்தில் விரிந்து கிடந்தது. கண்கள் மிதந்து வெகுதூரம் ஓடின. புறுபுறுவென்று உணர்வில் ஓர் ஊறல்! தொலைவில் தெரிவது என்ன?

தூரத்தில் இரும்புக் கூண்டோடு பாலத்தின் உருவம் சிறியதாகப் புலப்பட்டது. இவ்விருந்து பார்த்தால் ஒரு சாண் அளவுக்கு ஒரு பொம்மைப் பாலத்தை வைத்திருப்பது போல் தெரிந்தது. அதற்கு இரு பக்கங்களிலும் உள்ள நீர்ப் பரப்பைப் பார்க்கும் போது.....அப்பா !

நெருங்க நெருங்கக் கண்கள் நிலையாக நிற்கத் தொடங்கின. கை, அவ்வப்போது நீராவியைத் திறந்து கொண்டும் அடைத்துக் கொண்டும் இருந்தது. வண்டி சிறிது சிறிதாக முன்னேறிக் கொண்டிருந்தது. இரு பக்கங்களிலும் முள் மரங்கள் நின்று கொண்டும், படுத்துக் கொண்டும் இருந்தன. நகர்ந்து போகிற ரயிலை, ''இப்படித் தனியாகப் போகிறதே !'' என்று அதிசயத்துடன் பார்ப்பது போலிருந்தது.

இருபது நிமிடங்கள் ஓடியிருக்கும். பண்டு பின்புறம் திரும்பிப் பார்த்தான். இவ்வளவு தூரமா கீழே இறங்கிவிட்டோம்? விட்டுச் சென்ற பகுதி பின்புறத்தில் வானை அளாவிக் கொண்டிருந்தது. வண்டி எங்கேயோ கீழே, கீழே பாதாளத்தில் இறங்கிக் கொண்டிருந்தது. ஒருவேளை பூமியின் கர்ப்பத்துக்குள்ளேயே இறங்கிக் கொண்டிருக்கிறோமோ?

பாதை சமதளத்தில் ஓடுகிறது என்பதைக் காட்டும் 'லெவல்' குறியீடு தென்பட்டது. பண்டு முன்புறம் நோக்கினான். சட்டென்று முள் புதர்களுக்கு அப்பால் பாலத்தின் இரும்புக் கவசம் தெரிந்தது. பெரிய பெரிய கர்டர்களின் பின்னல்களோடு பாலத்தின் மேற்கூண்டு வண்டியை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. அதை அடுத்து ஓடும் நீரின் பரப்பு விரிந்து பெரிதாகிக் கொண்டே வந்தது. கரைக்குக் கரை விம்மித் தொட்டுப் பூமியைக் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை மறைத்து, சீறிப் புரண்டு செல்லும் ஆற்றைப் பார்த்தால்.... மேலெல்லாம் புல்லரித்தது.

**வ**ண்டி நகர்ந்தது. கூண்டுப் பாலம் வாயைத் திறந்து கொண்டு அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. பண்டு பிரேக்கை இழுத்தான். பாலத்துக்கு இருநூறு அடி தொலைவில் வண்டியை நிறுத்திக் கொண்டான். பிறகு மெள்ளக் கீழே இறங்கினான்.

வண்டியின் ஓசை நின்று விட்டதால், வேறுவிதப் புது ஓசைகள் திடீரென்று முழங்கின. வேறு உலகத்தில் இறங்கி விட்டோமோ?

விர்.....ர்ர்.....ர்ர்....ர்ர்... காற்றின் முனகல், ஆற்றின் சலசலப்பு, இரைச்சல் யாவும் கோவையாய்ச் சேர்ந்து கொண்டன. ஒருவித அடக்கமாய் எழுந்த அந்தச் சத்தத்தின் பின்னணியில் ஒரு கொடுமை, சீறக் காத்திருப்பது போல் தோன்றியது.

பண்டு முன்னும் பின்னும் வண்டித் தொடரை நோக்கினான். அந்த முன்காட்டின் வகிடு போல் பிளந்து ஓடிய அந்த ரயில் பாதையில் வண்டித் தொடர் அநாதையாக நிற்பது போல் தோன்றியது.

அவன் உடலில் ஒரு நடுக்கம் ஓடியது. வண்டி நிறைய சனங்கள் இருந்தாலும், அவன் செய்ய முற்பட்ட காரியத்தில் அவன் ஒருவன் மாத்திரம் ஈடுபட்டிருப்பதால், மனத்துக்குள்ளே திடீரென்று ஒரு தனிமை தோன்றிக் கொண்டது. சுற்றிவரத் திகிலோடு பார்த்தான்.

சன்னல் வழியாக எத்தனையோ தலைகள் தென்பட்டன. அவர்களையெல்லாம் சுற்றுப் பார்க்கும்போது..... 'இந்தக் குறும்புக் காரிகள்..... இவர்களைப் பாரேன்... தலைகளை வெளியே நீட்டி, பின்னல்கள் கீழே, பட்டத்து வால்போல் தொங்கவிட்டு, நிச்சிந்தையாய் வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். கொஞ்சமாவது கவலை இருக்கிறதா ?'

இவர்கள் எல்லோரது உயிரும் தன் கையில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்று எண்ணும்போது, பண்டுவுக்கு ஓர் உயிர்ப்பு தோன்றிக் கொண்டது. கைகளை உதறிக் கொண்டான். பாலத்தை நோக்கி நடக்கலானான்.

பாலத்தின் தொடக்கத்தில் வந்து நின்று கொண்டான். குனிந்து நோக்கிய போது, சில அடிகளுக்குக் கீழே வெள்ளம் சுழிப்புக்களுடன் இழுத்துப் பறித்து ஓடிக் கொண்டிருந்தது. ஒரு கணம் தண்ணீர் நிற்பது போலவும், பாலம் வேகமாக நகர்ந்து ஓடுவது போலவும் தோன்றியது. தலை சுற்றியது. இரண்டடி பின்னுக்கு நகர்ந்து கொண்டான்.

இருமருங்கிலும் நதி நீரும், மழை நீரும் கலந்து, கடல் போல் விரிந்திருந்தது. பண்டு யோசித்தவாறு நின்றான். பிறகு இஞ்சினுக்கு விரைவாகத் திரும்பி வந்தான். ஆயுதப் பெட்டியிலிருந்து, ஸ்பானர் ஒன்றை எடுத்து அதில் ஒரு நீளக் கயிற்றைக் கட்டிக் கழுத்திலிருந்து தொங்கப் போட்டுக் கொண்டான். மீண்டும் பாலத்தை நோக்கிச் சென்று 'ஸ்லீப்பர்' கட்டைகளின் மீது நடக்கலானான்.

எட்டு வளைவுகளைக் கொண்ட பாலம் அது. பண்டுவுக்குக் கீழே வெள்ளத்தைப் பார்க்கவே பயமாக இருந்தது. காற்றின் வேகம் அவனைத் தள்ளிவிடவே, பண்டு சட்டென்று ஸ்லீப்பர்மீது உட்கார்ந்து கொண்டான். பிறகு ஒவ்வொரு மரக்கட்டை மீதாகக் கால்களையும் கைகளையும் பிராணி போல் வைத்து நகர்ந்து மேலே செல்லலானான். தண்டவாளங்களின் சேர்ப்புகள் வரும்போது அவைகளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டான். சேர்ப்புக்களை இணைக்கும் பிஷ் பிளேட்டுகளில் நட்டுகள் சரியாகத் திருகியிருக்கின்றனவா, கழன்றிருக்கின்றனவா

என்று ஸ்பானர் உதவியோடு சோதித்துக் கொண்டான். அப்படிப் போகும்போது காற்றின் வேகம் அதிகரிக்கும்போதெல்லாம் தரை மட்டமாகப் படுத்துக் கொண்டு, ஸ்லீப்பர் கட்டையை இறுகப் பற்றிக் கொண்டான். சோதனை நிகழ்த்தியவாறு பாலத்தின் மறுமுனை வரையில் போய்விட்டு மீண்டும் அளந்தவாறு திரும்பி வந்தான்.

பாலத்தின் தொடக்கத்துக்கு வந்தபோது, பகீரென்றது. அவன் கண்கள் பாலச் சுவர் மீது தாமாகச் சென்றன. அங்கே எச். எப். எல். என்று எழுத்துக்கள் தெரிந்தன. அதற்குக் கீழே உள்ள அம்புக் குறியின் நுனிப் பகுதி வெள்ளத்தில் மறைந்து விட்டிருந்தது. பண்டுவுக்கு இதன் விளக்கம் தெரியும். உயர்ந்த வெள்ள மட்டத்தைக் காட்டும் கோடுகளைத் தாண்டியும் வெள்ளம் ஏறி விட்டது. இது ஆபத்தோ, என்னவோ?

பண்டு பரபரப்போடு யோசிக்கலானான். இப்போதுதான் வெள்ள மட்டம் ஏறியிருக்க வேண்டும். சீக்கிரமே வண்டியை மறு பக்கம் கொண்டு விட வேண்டும். அதற்குள் மற்றொரு பரிசோதனை. பாலத்தின் மீது தண்டவாளங்களும் அவற்றின் சேர்க்கைகளும் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்தாகி விட்டது. ஆனால் பாலத்தின் வளைவுகளைத் தாங்கும் அஸ்திவாரங்கள் சரியாக இருக்குமா? அல்லது வெள்ள நீர் சூழ் பறித்து அவற்றைத் தோண்டி எடுத்திருக்குமா? அஸ்திவாரங்கள் பாதி அரிக்கப் பட்டு, வண்டியின் கனம் பட்டதும் திடீரென்று பொடிந்து விழுந்து விடுமா?



வண்டித் தொடருக்கு வந்தான். ஷோவலை எடுத்து இறங்கிப் பின்பக்கம் போய், சேர்ப்புக் கப்ளிங்குகளைக் கழற்றி இஞ்சினைப் பெட்டிகளிலிருந்து பிரித்துக் கொண்டான். பிறகு உதவியாளை இறங்கச் செய்து விட்டு, இஞ்சினை மாத்திரம் சற்றுத் தூரம் முன் ஓட்டினான். பிறகு நிறுத்திவிட்டு, கீழே இறங்கித் துண்டிக்கப்பட்ட வண்டித் தொடரைக் கூர்ந்து கவனித்தான். இஞ்சினுடைய கனம் கழன்ற பிறகு, ஆகர்ஷண சக்தியிலாவது, காற்றின் வேகத்திலாவது வண்டிகள் முன்னுக்குத் தள்ளப்படுகின்றனவா என்று ஆழ்ந்து நோக்கினான். இரண்டு மூன்று நிமிடங்கள் நின்று பார்த்தும் வண்டிகள் நகரவில்லை. பிறகு அவன் இஞ்சினில் ஏறிக் கொண்டு இயக்கலானான்.

''கப்.... கப்....கப்......''

மெதுவாக இஞ்சின் நகர்ந்தது. அவன் உள்ளத்தில் ஒரு பிரார்த்தனை. ''கடவுளே ! எல்லாம் சரியாக இருக்க வேண்டுமே!''

க...... கப்..... கப்......

இஞ்சினது பளுவைப் பாலம் தாங்குமா என்பதைக் கவனிக்கவே அவன் இஞ்சினை இயக்கிக் கொண்டிருந்தான். அப்படிப் பாலம் இடிந்து விழுகிறதாக இருந்தாலும், அவனும் அந்த இஞ்சினும் வெள்ளத்தில் மூழ்கிப் போனால் போதுமே! மற்றவர்கள் தப்பித்து விடலாமே !

''கப்..... கப்....... கப்...... !''

பாலத்தின் முதல் அடியில் இஞ்சின் நுழைந்தது. ''தடங்.... தடங்....'' என்று ஓர் அழுத்தலான சத்தம். பண்டு ரெகுலேட்டரில் கைவைத்துக் கொண்டு பயத்தோடு முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டான்.

தடங்...... தடங்......

அவன் இதயமும் அடித்துக் கொண்டது. கீழே ஸ்லீப்பர் கட்டைகளின் நுனிகள் வரிசையாகத் தெரிந்தன.

பாதி தூரம் போனதும் அவனும் இஞ்சினும் அந்தரத்தில் மிதப்பதுபோல் இருந்தது. ''கடவுளே! காளியம்மா!....'' பண்டு உறுதியாய் வாயிற் கம்பியைப் பற்றிக் கொண்டான்.

இஞ்சின் மறுகரையை அடைந்தது. பண்டுவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. இஞ்சினை நிறுத்தினான். ரெகுலேட்டரின் நீண்ட பிடிப்பைத் தழுவிக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

திரும்பிப் பார்த்த போது மறு கரையில் வண்டித் தொடர் அப்படியே நிற்பது தெரிந்தது. மீண்டும் பின்னால் போவதற்காகப் பண்டு ரிவேர்ஸ் லீவரை வேகமாகச் சுற்றி விட்டான். நீராவியைத் திறந்ததும், இஞ்சின் பின்னுக்குப் போக ஆரம்பித்தது.

பாலத்தை இஞ்சின் தாண்டி விட்டது. வண்டித் தொடர் அருகில் வந்ததும் வேகத்தைக் குறைத்துக் கொண்டான். உதவியாள் துணை கொண்டு பெட்டிகளோடு இஞ்சினை இணைத்து விட்டான்.

கீழே நின்றிருந்த பிரயாணிகள் யாவரும் அவன் செய்வதையெல்லாம் உன்னிப்பாகக் கவனித்தார்கள். பண்டு அவர்களை நோக்கிக் கையை உயர்த்தியதும், அவர்கள் ஆமோதிப்பது போல் தலையை ஆட்டினார்கள்.

எல்லோரையும் ஏற்றிக் கொண்ட பிறகு விசிலை இழுத்தான். முன்னால் போவதற்காக ரிவேர்ஸ் லீவரைச் சுற்றிவிட்டு, நீராவியைத் திறந்தான். ''கப் கப்'' என்று இஞ்சின் நகர, வண்டித் தொடரும் நகர்ந்தது.

கப்.... கப்...... கப்....

நீராவியை மேலும் திறந்தான். நெஞ்சம் பலமாக அடித்துக் கொண்டது. இஞ்சின், பாலத்தை மிதித்து ஓட ஆரம்பித்தது. பண்டு மனத்தில் பிரார்த்தனை! ''இஸ்ஸ் இஸ்!'' என்று நீராவி ஓசை ! தடங்... தடங்... என்று பாலத்தின் கர்டர்கள்மீது உறுமல்கள்!




ரிவேர்ஸ் லீவரையும் சுழற்றி "அட்ஜெஸ்ட்" செய்து கொண்டான்.

"கப்..... கப்......!" என்று இடைவெளி விட்டு முனகிக் கொண்டு, இஞ்சின் வண்டித் தொடரை முறித்து இழுக்க ஆரம்பித்தது. அவனுக்குக் குஷி! தன்னையறியாமல் அந்தத் தாளத்துக் கேற்பக் கால்களை மாற்றி மாற்றி வைத்துக் குதிக்க ஆரம்பித்தான். பின்னால் ஒரு தரம் திரும்பிக் கடைசிவரை பார்த்தான். எல்லாப் பிரயாணிகளும், சன்னல்வழியாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர். 'இந்தக் குறும்புக்காரிகளைப் பார் ! சிரிக்கிறார்களே! எத்தகைய ஆபத்திலிருந்து தப்பியிருக்கிறார்கள்?....கொஞ்சமாவது கவலை இருக்கிறதா?....'

தண்டவாளச் சேர்க்கைகளில் 'டக் டக்' என்று பெட்டிகளின் தாளங்கள் !

ஒவ்வொரு பெட்டியாகப் பாலத்தில் நுழைந்து கொண்டது. பண்டு பின்புறம் பார்த்துக் கொண்டே வந்தான். தொடர்ந்தவாறு அழுந்தும் கனத்தைப் பாலம் தாங்கிக் கொள்ளுமா ?

எல்லாப் பெட்டிகளும் பாலத்துள் வந்து விட்டன. இஞ்சின் பாதிப் பாலத்தைத் தாண்டி விட்டது.

கப்.... கப்.... கப்.....

முக்கால் பாலம் தாண்டிவிட்டது. பண்டு கவனத்தோடு பின்னால் பார்த்துக் கொண்டான். விரைவில் பாலத்தைக் கடந்துவிட வேண்டும் என்ற பரபரப்பும் மனத்தில் எழுந்தது. நீராவியை மேலும் திறந்து விட்டான். வேகமும் கூடியது. சிறிது நேரந்தான். இஞ்சின் பாலத்துக்கு வெளியே வந்து விட்டது.

பண்டு அவசரத்தோடு வெளியே நோக்கினான். ஒவ்வொரு வண்டியாகப் பாலத்தைக் கடந்து வந்து கொண்டிருந்தது. அவன் மனத்தில் நிம்மதி. முகத்தை நன்றாக வெளியே நீட்டிக் கடைசி வண்டியைக் கவனித்தான். இதோ... இதோ.... பாலத்தின் கூண்டிலிருந்து உரிந்து வருவது போல் வண்டி வெளியே பிதுங்கி வந்து கொண்டிருந்தது.

பின் தங்கிய குழந்தை நடந்து வருவது போல் கடைசிப் பெட்டியும் பாலத்தைவிட்டு ஓடி வந்து மண்ணை மிதித்துவிட்டது. பண்டுவுக்கு மகிழ்ச்சி ! "வீ.... வீ....." என்று விசிலைச் சிதற விட்டான். பிறகு உதவியாளின் கரங்களை இறுகப் பிடித்துக் குலுக்கலானான். ரயில் வேகத்துடன் முன்னேறியது. பாலமும், அதன் வெறுமை வழிந்த கூண்டும் பின்னுக்குப் போய்க் கொண்டிருந்தன. நேரம் போகப் போக அதன் உருவம் சிறுத்து மறைந்து விட்டது.

அதற்குப் பிறகு அப்கிரேடியண்டு ! குறி காட்டிக் கையைத் தூக்கி, பாதை 200க்கு ஓர் அடி மேலே ஏறுகிறது என்பதைக் காட்டியது. பண்டு நீராவியை மேலும் இழுத்தான்.

"கப்....கப்....கப்...." தாளகதி !.... பிஸ்டனின் சுழல்வு!.... சீறும் நீராவி..... அரைக்கும் சக்கரங்கள்... இஞ்சின் உடலில் அதிர்வு !.... பின்னால் 'டக் டக்' என்று குதித்து வரும் டெண்டர் வண்டி.... நீள, நீள முன்னால் பூமியைச் சுற்றி வளையம் போல் ஓடிய தண்டவாளம்... மேலே இன்னும் அடர்த்தி குறையா மேகங்கள்.... விஸ் என்று அடித்து ஓடும் காற்று.....

மைல்கள் ஓடிக்கொண்டிருந்தன. புயல் காற்று இந்தப் பிரதேசம் முழுவதையும் சூறையாடியிருக்கிறது. அருகிலுள்ள மரங்கள் யாவும் முறிந்து கிடந்தன. தந்திக் கம்பங்கள் வளைந்தும், திருகியும் கிடந்தன. தொலைவில் தெரிந்த சாலையோர மரங்கள் எல்லாம் பெரிய மரங்கள் — வேரோடு சாய்ந்து தரையில் கிடந்தன. பெரிய போர் நடந்திருப்பது போன்ற காட்சி ! அங்கங்கே நீர்த் தகடுகள்! புது ஓடைகள்! புது ஓட்டங்கள்! குபுகுபு என்று அதன் சத்தங்கள்!

வண்டி மைல்களைக் கடந்து கொண்டிருந்தது. அதே நிதானம்.... அதே வேகம். உள்ளே அதே கண்காணிப்பு!

ஒரு மணி நேரம் ஆகியது. இடையில் சிறு பாலம் வந்தால்கூடப் பண்டு வண்டியை நிறுத்திக் கொண்டான். தானே கீழே இறங்கிப் பாலத்தின் நிலைமையை நன்றாகக் கவனித்த பிறகே வண்டியை மேலே இயக்கினான்.

மேலும் அரைமணி ஓடியிருக்கும்! பண்டுவுக்கு மூச்சு இளைத்தது. உள்ளே பம்பரமாய்ச் சுழன்று, நீராவி அழுத்தம் பார்த்து, பாய்லரில் நீர்மட்டத்தைப் பார்த்து, வேண்டியபோதெல்லாம் டாங்கிலிருந்து இஞ்செக்டர் மூலமாகப் பாய்லருக்கு நீர் ஏற்றி, பயர்பாக்ஸைத் திறந்து, அதில் உதவியாளன் ஒழுங்காகவும் சீராகவும் கரியைச் சிதறுகிறானா என்று கண்காணித்து....இவைகளுக்கு இடையில் முன்புறம் பாதையைப் பார்த்து, பின்புறம் வண்டித் தொடரையும் கவனித்து, சிறிது நேரமும் அயராது உழன்று உழன்று, ஓர் இயந்திரச் சக்கரத்தின் சுழற்சி போல் இயக்கப் பிழம்பாய் மாறிக் கொண்டிருந்தான் பண்டு.

தூரத்தில் ''தை–ஹூர்'' ரயில் நிலையம் பட்டுவிட்டது. பண்டு மகிழ்ச்சி பொங்க வெளியே தலை நீட்டினான்.

நகரை நெருங்க நெருங்க அங்கே சூறாவளியில் நிகழ்ந்துள்ள சேதம் முழுவதும் பயங்கரமாய்க் கண்களுக்குப் பட்டன.

நகரின் வெளிப்புறங்களில் நின்றுகொண்டிருக்கும் உதிரியான வீடுகள் பல நொறுங்கிக் கிடந்தன. ஓர் இடத்தில் ஒரு பெரிய லாரி குப்புற விழுந்து கிடந்தது. சில இடங்களில் எருமை மாடு, கன்று, நாய் இவைகளின் சடலங்கள் தென்பட்டன. முக்கியமாக, பார்க்கும் இடமெல்லாம் காக்கைகள் நிறைய இறந்து கிடந்தன. இப்படிக் கும்பல் கும்பலாய் இறந்து கிடக்கும் சடலங்களை அவன் இதுவரை கண்டதில்லை.

வண்டி மெதுவாக இயங்கிக் கொண்டிருந்தது. மழை நின்றுவிட்டதால் அங்கங்கே சனங்கள் தென்பட்டுக் கொண்டிருந்தனர். ஒருசிலர் பழக்கப்படாத அந்த வேளையில் கூரை ஒடிந்த இஞ்சினோடு போய்க் கொண்டிருக்கும் அந்த வண்டியை ஆச்சரியத்தோடு பார்த்தார்கள்.

அவுட்டருக்கு வந்தபோது கைகாட்டி தரையோடு சாய்ந்து கிடந்தது. பண்டு, விசிலின் சத்தத்தை அலற விட்டவாறு வண்டியைச் செலுத்தினான். அடிக்கடி முன்னே செல்லும் பாதையை, அது நிலையத்தை அடையும் நீளம் முழுவதுமாகக் கண்ணோட்டம் விட்டான்.

ஹோம் சிக்னலும் வந்துவிட்டது. அந்தக் கம்பம் வளைந்துபோய்க் கீழ் நோக்கித் தொங்கிக் கொண்டிருந்தது. சிறிது தூரம் தள்ளி லூப் லைனும் பிரிய ஆரம்பித்தது. வண்டியை நிறுத்திவிட்டு பண்டு கீழே இறங்கினான். பாயிண்டு எந்த லைனுக்கு அடிக்கப்பட்டிருக்கிறதென்று கவனித்தான். மெயின் லைனுக்குத்தான் என்று தெரிந்ததும் மீண்டும் ஏறி வண்டியை இயக்கலானான்.

விசிலைப் பிடித்து 'ஓ'வென்று அலறச் செய்து கொண்டே வண்டியைச் செலுத்தினான். இடைவெளி கொடுக்காமல் விசிலை அலற விட்டுக் கொண்டே முன்புறம் பார்த்துக் கொண்டிருந்தான். உதவியாள் காதுகளைப் பொத்திக் கொண்டான். வண்டி நிலையத்தை அணுகிக் கொண்டிருந்தது.

'இஸ்...இஸ்...'என்று தாள இசையுடன் பிஸ்டன் லாகவமாய் முன்னும் பின்னும் இயங்கி, மூன்று பெரிய சக்கரங்களை அனாயாசமாய்ச் சுற்றி இழுக்க, பாதுகாப்பு வால்வு வழியே பீய்த்துக் கொண்டு வரும் நீராவியின் தோற்றம், தலை முடியில் அணிந்த வெண்ணிறகு போல் இலங்க, பவனி வரும் மன்னன்போல் கம்பீரமாய், இஞ்சின் பிளாட்பாரத்துள் நுழைந்து கொண்டிருந்தது.

பிளாட்பாரத்தில் ஏற்கனவே ஒரு கூட்டம் கூடியிருந்தது. யாவருமே அதிசயத்தோடு உள்ளே வரும் வண்டியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பண்டு நீராவியை அடைத்து விட்டான். பிரேக்கைச் சிறிது

## காற்றடைத்த பையடா!












சிறிதாக இழுத்தவாறு, பிளாட்பாரத்தில் நிற்கும் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டே போனான். அவர்கள் முகங்களில் தோன்றுவது அதிசயமா? கவலையா? பயமா? மகிழ்ச்சியா?

வண்டி நின்றது!

ஒரே ஆரவாரம்! இரைச்சல்! உதவியாளன் அவனைப் பார்த்துக் கையை உயர்த்திவிட்டுக் கீழே குதித்து ஓடினான். பெட்டியிலிருந்து பிரயாணிகள் தொப் தொப்பென்று கீழே குதித்தார்கள்.

பிரயாணிகளை வி—நகர் சந்திப்புக்கு ரஸ்தா மூலமாக அழைத்துச் செல்லப் பஸ்கள் வாயிலில் காத்திருந்தன. விபத்தைப் பற்றிய செய்தி பரவி அருகில் உள்ள ஊர்களிலிருந்து அநேக பிரயாணிகள் உறவினர்களும் நண்பர்களும் பிளாட்பாரத்தில் ஏராளமாய்க் கூடியிருந்தார்கள்.

திடீரென ஒரு பெரிய அடைப்பைத் திறந்ததுபோல், வாரி இறைத்து, சத்தங்களும், பேச்சுகளும், சிரிப்புகளும் கூவல்களும் வெளி வந்து திமிலோகப்பட்டன. பிரயாணிகள் வெளியே பஸ்ஸை நோக்கிப் பெட்டி படுக்கைகளோடு ஓடினார்கள். பலர் சிற்றுண்டிச் சாலையை நோக்கி விரைந்தார்கள். ஒரே பரபரப்பு!

பண்டு இன்ஜினில் நின்றவாறே எல்லாவற்றையும் கவனித்தான்.

முதல் வகுப்புப் பெட்டியில் படுக்க வைத்திருந்த டிரைவரையும், பயர்மேனையும் ஸ்ட்ரெச்சரில் எடுத்துச் சென்றார்கள். பிறகு பிரசவித்த பெண்மணியையும் எடுத்துச் சென்றார்கள்.

ஏதோ புது உலகத்தில் புதிதாய்ப் பிறந்தவர்கள் போல் எல்லோரும் இரைந்து பேசி ஆரவாரப்பட்டார்கள்.

இதெல்லாம் ஒரு பதினைந்து இருபது நிமிடங்கள் வரை நடைபெற்றன.

இப்போது பண்டுவுக்கு ஓர் ஏக்கம்! மனத்தில் சிறிதாக எழுந்த அது அந்தக் கடைசி பத்து நிமிடங்களில் பெரிதாகப் படர்ந்து விட்டது. எந்த ஒரு பிரயாணியாவது அவன் செய்த செய்கைகளைப் பாராட்டி நேரில் வந்து நன்றி தெரிவித்தார்களா?... அவனோடு வந்த உதவியாள் குதித்து ஓடிவிட்டான். பெட்டிகளிலிருந்து கீழே இறங்கிய பிரயாணிகள் வெளியே பஸ் நிற்பதைக் கேள்விப்பட்டு, இடம் பிடிக்கச் சாமான்களோடு ஓடினார்கள். பலர் உறவினர்களைச் சந்தித்தார்கள். பலர் நண்பர்களுடன் உரையாடினார்கள். எல்லோரும் ஏதோ திடீரெனப் பற்றிக் கொண்ட உத்சாகத்தில் நடந்தவாவற்றையுமே மறந்து விட்டார்கள். அவ்வளவுதான்!

இந்தப் பெண்கள்... நினைத்தது சரிதான்! குறும்புக்காரிகள்தான். இங்கிருந்து பார்த்தால் தூரத்தில் அவர்கள் கீச் பீச் சென்று பேசிக் களிப்பது தெரிந்தது. எல்லோரும் ஒரே யூனிபாரமாய், பச்சைப் புடவையும், பச்சை ரவிக்கையும் அணிந்திருந்தார்கள். கீழே இறங்கியதும் குனிந்து குனிந்து பொருள்களை எண்ணிக் கொண்டார்கள். பிறகு கூட்டத்தை இடித்துத் தள்ளிக் கொண்டு ஸ்டேஷன் வெளி நோக்கிப் போய் விட்டார்கள்.

அவனிடமிருந்து பழங்களைப் பெற்றுக் கொண்ட குழந்தைகளும் போனார்கள்.. அவர்களுடைய பெற்றோர்களும் நடந்து போனார்கள். அந்தக் கிழவர் திரும்பி திரும்பிக் கஷ்டப்பட்ட அந்தக் கிழவர் — அவர்கூடக் கடைசியாகக் கைத்தடியை ஊன்றி மெல்ல மெல்ல நடந்து போனார்.

எல்லோரும் போய்விட்டார்கள்! எல்லோருக்கும் அவசரம்! உத்சாகம்! ஆனந்தம்! நிம்மதி! இவற்றில் திளைத்து அவர்கள் போய்விட்டார்கள். அவர்களைக் குறை கூறி என்ன பயன்?... போகட்டும்!... நலமாக வாழட்டும்!

அவனை நோக்கி வெள்ளை உடை தரித்த ரயில் அதிகாரி நடந்து வந்தார். அருகில் வந்ததும், ''யாரு மேன் நீ? உன்னை யார் வண்டியை ஓட்டச் சொன்னது? ஆபத்திலே சிக்கியிருந்தால் எல்லோரும் என்ன ஆகிறது?'' என்று கேட்டார்.

பண்டு வெலவெலத்துப் போய் நின்றான். அவனிடமிருந்து பதில் வராமல் போகவே அதிகாரி காத்திராமல் அவசரமாய் நகர்ந்து போய்விட்டார்.

பண்டு மெதுவாகக் கீழே இறங்கினான். மேலிருந்து கீழ்வரை வலி! முகம் கை கால் எல்லாம் கரி. அங்குமிங்கும் ஓடி ஆடிய களைப்பு! கண்ணிலும், தலையிலும் சிவுசிவு என்று எரிச்சல்! கீழே சுருண்டு விழலாம் போலிருந்தது!

எதிரே தென்பட்ட பிரயாணிகள் குளிக்கும் அறைக்குச் சென்றான். அங்குள்ள குழாயைத் திறந்துவிட்டு, முகம் கால்கைகளைக் கழுவ ஆரம்பித்தான். இவ்வளவு கரியா? நீர் கருப்பாக மாறி ஓடிற்று. நன்றாகக் கழுவிக் கொண்ட பிறகு மேலே துடைக்கத் துண்டு இல்லை. வெறும் நிஜார் பனியனோடு ஏறியது. அவைமீதெல்லாம் கரி! அப்படியே சொட்டச் சொட்ட நின்றான். வயிற்றில் திகுதிகுவென்று ஒரு காந்தல். அப்போது தான் திடீரென்று தோன்றியது போல் எரிந்தது! நேற்று உச்சிப் பொழுதில் கடைசியாகச் சாப்பிட்டது! இதுவரை பசி தெரியவில்லை. இப்போது பசி வயிற்றைக் கவ்வி இழுத்தது.

கையில் காசு ஏது? யாரிடம் போய்க் கேட்பது? யார் என்ன கொடுப்பார்கள்? பசி எப்படித் தணியப் போகிறது?

'தன்னை எல்லோரும் அநாதையாக விட்டுச் செல்கிறார்களோ?' என்ற அந்த ஏக்கம் இப்போது அசுர உருவமாய் எழுந்தது. அன்றும் அநாதை! இன்றும் அநாதை! தனியாக வாழ்வதற்குத்தான் அவன் பிறந்தவனா? ...

இன்றுதான், இந்தக் கணந்தான், இப்படி ஒரு பெரும் உலகில், மக்கள் நிரம்பி வழியும் உலகில் அவன் மட்டிலும் ஒதுங்கி, விலகி, தனித்து வாழ்பவன் என்ற நினைவு ஒரு பெருத்த புயல்போல் மனத்தில் வீசியது.

என்றுமில்லாத அந்த நினைவு கண்ணில் நீரை வருவித்தது.

''அவர் வரவில்லையா, டிரைவர்?''

குரல் கேட்டதும் அவன் சிலிர்த்தான். தடுப்புக்கு அடுத்த பக்கமுள்ள வாயில் வழியில் ஒரு பெண்ணின் குரல்!

''வரல்லீங்க... வி—நகரிலே தங்கிவிட்டாருங்க!''

''ஏன்?''

''பெரிய கார் கிடைக்கவில்லே! 'ஜீப்' தான் கிடைச்சுது. 'மழை குளிரிலே என் உடம்பு தாளாது. நீயே ஜீப்பை எடுத்துண்டு போய் அம்மாவை அழைச்சிக்கிட்டு வந்துடு. டிரைவர்'னு ஐயா என்னை அனுப்பிச்சுட்டாரு!''

''ம்!'' — பெண்ணின் அங்கலாய்ப்பு. என்னடா ஒருத்தி ரயில் பிரயாணத்திலே ஆபத்திலே மாட்டிக் கொண்டு விட்டாளே, அவளை நேரில் போய்ப் பார்ப்போம்னு தோணித்தா? அவருக்கு அவர் உடம்புதான் பெரிசாப் போச்சு! மழையும் குளிரும் ஒரு நாள்கூட மேலே படக் கூடாது..... நீ பெட்டிகளை எடுத்துக் காரிலே வை டிரைவர்! நான் இதோ வரேன்!'' அவள் குரல் படிப் படியாக மறைந்தது.

பண்டுவுக்கு மீண்டும் சிலிர்த்தது. இது யார் குரல்? அவள் குரலா? எங்கேயோ அவன் பிளாட்பாரத்துக்குள்ளே போனது போல் கால் ஓசை கேட்டது. இடத்தை விட்டு அசையாது அப்படியே நின்றான். கண் மட்டும் வாயிலை நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தது.

இரண்டு மூன்று நிமிடங்கள் ஆகியிருக்கும். அது அவனுக்கு யுகமாகப் பட்டது. இதற்குள் அவள் போயிருக்க வேண்டும்! இனிமேல் வெளியே வரலாம்!

திடீரென்று அந்த அறை வாசலில் அவள் நிற்பது தெரிந்தது. அவன் பிரமித்தான். உடல் எங்கும் ஒரு பதற்றம்! இதயம் 'பக்' கென்றது. கண்கள் வெறித்து நின்றன.

அவள்தான்! கம்பீரமாய், உயரமாய், அழகாய், வெண் துகில் பறந்து வீச இரக்கம் கலந்த முறுவலோடு வாசல் முழுதும் வியாபித்து நின்றாள்.

''இங்கேயா இருக்கிறீர்கள்?''

அவள் உள்ளே வந்தாள்.



அந்த வெண்மை வழிந்து ஒளியில் வீசிய வதனம் அவளுடையதா? திடீரென ஒரு தேவதை வருவதைப் போல் மெள்ள நடையிட்டு வருகிறாள். யார் இவள்? தனக்கு ஒரு காலத்தில் வாழ்க்கைப்பட்டிருந்த 'அவள்' தானா?

அவள்தான் அருகில் வந்தாள். அவன் நிமிர்ந்தான். அவள் விழிகள் நிறைய நீர்! அவற்றில் இரண்டு பொறிகள் விழுந்து நட்சத்திரங்களாய் ஜொலித்தன. சிவந்த மெல்லிய மலர்வாய் மலர்ந்திருந்த உதடுகளில் நுண்ணிய நடுக்கம். அவளையே பார்த்து நின்றான். அவனது நெஞ்சம் அடைத்துக் கொண்டது. அவளிடம் பேச வேண்டும் என்று வாயில் துடிப்பு! பேச்சில்லை! மூச்சு நிலை மாறியது.

அவள் தன் கைகளை மெதுவாகத் தாழ வளைத்து, விநயத்தோடு அவன் கைகளைப் பற்றினாள். தன் உள்ளங்கைகளுள் மென்மையாக அணைவித்தாள்.

''நீங்கள் பெரியவர்! இன்று நீங்கள் செய்ததையெல்லாம் கவனித்தேன். உங்களுடன் ரயிலில் பிரயாணம் செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. வாழ்க்கையிலுந்தான். உலகத்தில் உள்ள எந்த ராணியும் உங்கள் மனைவியாவிடத் தகுதி வாய்ந்தவள்! நீங்கள் அவ்வளவு பெரி....யவர்!''

ஆதரவுடன் ஈரம் சொட்டும் அவன் கைகளை மேலே தூக்கினாள். தன் இரு கண்களிலும் அவன் கைகளைப் பயபக்தியுடன் வைத்து ஒற்றிக் கொண்டாள். பிறகு கைகளைக் கீழே இறக்கி விட்டு அவனைக் கருணை பொங்க, இரக்கம் பொங்க, கனிந்து நோக்கினாள். விழி ஓரங்களில் ஒளி உருகி வெம்மையில் தளதளத்தது. அவன் நேராக அவளைப் பார்த்தான். பிரமிப்பிலும், ஒன்றும் புரியாத தன்மையிலும் தெறிக்கும் அவன் கண் பார்வையைத் தாளாது, முதல் தடவையாக விழிகளைத் தாழ்த்திக் கொண்டாள். கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு மெதுவாகத் திரும்பி வாசலை நோக்கி நடந்தாள். அங்கிருந்து விரைவில் மறைந்து விட்டாள்.

அவன் நெஞ்சம் விம்மியது. பசி போய் விட்டது. ஏக்கம் போய்விட்டது. குறைவு போய் ஒரு நிறைவு! நிறைந்தது வயிறா, உள் உணர்வா? திக்குமுக்காடச் செய்யும் ஓர் இன்பம் அலையாய்ச் சுருண்டு வந்தது.

வெளியே அவசரம் அவசரமாய் வந்தான். நிலைவாயிலில் அவள் ஜீப்பில் ஏறுவதைப் பார்த்தான். கண்களில் ஆனந்த நீர்! மனத்தில் ஒரே ஆர்ப்பரிப்பு! பண்டுவா, இவ்வளவு பெரிய சாதனையைச் செய்தான்? வசுந்தரம் வியக்கும் காரியத்தைச் சோணிப் பண்டுவா செய்தான்?

கைகளையும் கால்களையும் வானுற வீசி எறிந்தான். கூட்டத்தையும் நிற்கும் இடத்தையும் பொருட்படுத்தவில்லை. மகிழ்ச்சியோடு, ''நான் பெரியவன்!'' என்று கத்தினான். வார்த்தைகள் வரவில்லை. வெளியில் கேட்ட சத்தமெல்லாம்...''வே...வே...வே''

ஜீப் மறைந்து கொண்டிருந்தது. அவன் கைகளைத் தூக்கி ஆட்டினான்.

''வே....வே...வே...!'' □ □ □




# கண்ணுக்கு வெண்மை
# கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றுமே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெளிரத் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** கரைந்தும் நூலிழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை நீரோடு கரைக்கிறது. வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, என்ன கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

டாடா
தயாரிப்பு

CMTM-10-123-TM

# அவியேனஸ்

## குட்டிக் கதைகள்

தொகுத்தவர் கு. அழகிரிசாமி

(அவியேனஸ் கி. பி. 4-ம் நூற்றாண்டில் வாழ்ந்த இத்தாலிய ஆசிரியர்: லத்தீன் மொழியில் எழுதிய அவருடைய குட்டிக் கதைத் தொகுதி நூல்கள் பள்ளிக்கூடப் பாடப் புத்தகங்களாகவும் ஒரு காலத்தில் வைக்கப்பட்டிருந்தன.)

### வேலைக்காரிகள் தந்திரம்!

ஒரு கிழவி தினந்தோறும் அதிகாலையில் கோழி கூவியதும் தன் வேலைக்காரிகளை எழுப்பிவிடுவது வழக்கம். சுகமான தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும்போது கிழவி வந்து எழுப்பி விடுவது அந்தச் சோம்பேறி வேலைக்காரிகளுக்கு எரிச்சலாக இருந்தது. சேவல் கூவுவதைக் கேட்டுத்தான் அவள் தங்களை வந்து எழுப்பி விடுகிறாள் என்பதை அறிந்த வேலைக்காரிகள் ஒரு நாள் சேவலைப் பிடித்துக்



கொன்றுவிட்டார்கள். அன்று முதல் கிழவிக்கு நேரம் தெரியாமல் போய் விட்டது. விடியப் போகிறது என்று நினைத்துக் கொண்டு நள்ளிரவிலேயே வந்து வேலைக்காரிகளை எழுப்பி விடத் தொடங்கி விட்டாள். அவர்களின் நிலை முன்னிலும் மோசமாகி விட்டது.

சிறு கஷ்டத்தைப் பெருங் கஷ்டமாக்கி விடக் கூடாது.

### அழகுப் போட்டி

"உலகத்தில் உள்ள பறவைகளெல்லாம் தம் குஞ்சுகளுடனும், மிருகங்களெல்லாம் தம் குட்டிகளுடனும் நாளை என் முன்னால் வந்து



நிற்க வேண்டும். எந்தப் பிராணியின் குழந்தைகள் மிக மிக அழகாக இருக்கின்றன என்று நான் பார்க்க விரும்புகிறேன்" என்று கடவுள் ஒரு நாள் கட்டளை பிறப்பித்தார்.

மறு நாள் அதிகாலையிலேயே அத்தனை பறவைகளையும் மிருகங்களையும் முந்திக் கொண்டு, குட்டிகளோடு கடவுளின் முன் வந்து முதலாவதாக ஆஜரானது ஒரு குரங்கு!

உயர் பதவியுடைய முந்திக் கொள்வதில் தகுதியற்றவர்கள் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள்.

### வண்டிக்காரன் பிரார்த்தனை

ஒருவனுடைய வண்டி சேற்றில் ஆழ்ந்து விட்டது. உடனே அவன் எல்லாத் தெய்வங்களையும் உரக்கக் கூவி அழைத்து, "என் வண்டியைச் சேற்றிலிருந்து தூக்கிவிட வேண்டும்" என்று பிரார்த்தித்தான். அப்போது ஒரு தேவதூதன் அங்கே வந்து, "ஏ, சோம்பேறியே! நீ ஒரு முயற்சியும் செய்யாமல் கையைக் கட்டிக் கொண்டு உரக்கக் கூவிய மாத்திரத்தில் தெய்வங்கள் உனக்கு உதவி



செய்ய வந்துவிடுமோ? நீ செய்ய வேண்டிய காரியம் என்ன தெரியுமா? ஒரு கையால் உன் மாடுகளுக்குத் தார்க் குச்சி போட்டுக் கொண்டு, மற்றொரு கையால் வண்டியின் சக்கரத்தைத் தள்ள வேண்டும். அப்புறம் தான் தெய்வங்களை நோக்கிப் பிரார்த்திக்க வேண்டும்" என்று கூறினான்.

சோம்பேறிக்குக் கடவுள் உதவமாட்டார்.

### காட்டு மனிதனும் நாட்டு மனிதனும்

ஒரு காலத்தில் ஒரு காட்டு மனிதனும் நாட்டு மனிதனும் சேர்ந்து பழகத் தொடங்கினார்கள். காட்டு மனிதன் பயங்கரமான கொடிய சுபாவம் கொண்டவனாக இருந்தும் நாட்டு மனிதன் அவனோடு சகவாசம் வைத்துக் கொண்டான். ஒரு நாள் நாட்டு மனிதன்



தன் உள்ளங் கைகளைத் தேய்த்து அவற்றின் மீது வாயால் ஊதிக் கொண்டிருந்தான்.

"ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று கேட்டான் காட்டு மனிதன்.

"குளிரினால் கைகள் மரத்துப் போய்விட்டன. அதனால் சூடேற்றுவதற்கு ஊதுகிறேன்" என்றான் நாட்டு மனிதன்.

மற்றொரு நாள் நாட்டு மனிதன் தான் குடிக்கப் போகும் கஞ்சியை வாயால் ஊதினான்.

''இப்பொழுது ஏன் ஊதுகிறாய்?'' என்று கேட்டான் காட்டு மனிதன்.

''கஞ்சி மிகவும் சூடாக இருக்கிறது. அதை ஆற்றிக் குளிர வைப்பதற்காக ஊதுகிறேன்'' என்றான் நாட்டு மனிதன்.

அதைக் கேட்டானோ, இல்லையோ, காட்டு மனிதன் பயந்து விட்டான். '' அப்பா ! நீ மகா பயங்கரமான ஆசாமி! உன்னோடு தெரியாமல் சகவாசம் வைத்துக் கொண்டு விட்டேன். ஒரே வாயால் ஊதிச் சூடாக்கவும் குளிர வைக்கவும் செய்கிற உன் தந்திர வித்தையைப் பார்த்தால், நீ இன்னும் என்னென்ன செய்வாயோ என்று பயமாக இருக்கிறது. நான் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே ஓடி விட்டான் காட்டு மனிதன்.

அற்பத்தைக் கண்டாலும் அறியாமைக்கு அச்சமே.

## வாத்தும் குஞ்சும்

'' நீ இடுப்பை ஆட்டிக்கொண்டு நடப்பது விகாரமாக இருக்கிறது. நன்றாக நிமிர்ந்து இடுப்பை ஆட்டாமல் நடக்க வேண்டும்'' என்று ஒரு வாத்து தன் குஞ்சுக்குக் கூறியது.

குஞ்சும் அவ்வாறே செய்ய முயன்றது. ஆனால் என்ன செய்தும் அவ்வாறு நடக்க முடியவில்லை. தாய் — வாத்து தன் குஞ்சை நிமிர்த்துவதற்காக அதன் காலில் மட்டை வைத்துக் கட்டி விட்டது. ஆனால் குஞ்சு



ஒரு நிமிஷத்தில் திரும்பி வந்து, ''அம்மா! இப்போது என்னால் நிற்கவே முடியவில்லை'' என்று வேதனையோடு சொன்னது.

''அப்படியானால் உன் கழுத்தையாவது நிமிர்த்திக்கொள்'' என்றது தாய் வாத்து.

குஞ்சும் தன் கழுத்தைச் செங்குத்தாக உயர்த்தியது. அப்போது அது தன் தாயைப் பார்த்து, ''அம்மா! இப்படிச் செய்தால் என்ன இருக்கிறதென்றே தெரியவில்லை. என் கண்ணுக்கு ஆகாயம்தான் தெரிகிறது'' என்று கூறியது.

அப்போது தாய் வாத்து பின்வருமாறு சொன்னது: ''அப்படியானால் நீ மற்ற வாத்துக்களைப் போலவே கழுத்தையும் கால்களையும் வைத்துக் கொள். அதைச் செய்வதற்கு மட்டும் தவறிவிடாதே.''

முன்னேற முடியாவிட்டாலும் உள்ள நிலையையாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

## ஓநாயின் ஆசை

ஒரு குழந்தை ஓயாமல் அழுதுகொண்டிருந்தது. அப்பொழுது அதன் தாய், ''அழுகையை நிறுத்துகிறாயா, இல்லையா? நிறுத்தாவிட்டால் உன்னை ஓநாயின் முன்னால் தூக்கிப் போட்டுவிடுவேன்'' என்று பயமுறுத்தினாள்.

அப்போது அந்த வீட்டு வழியாகச் சென்ற ஓநாய், அந்த வார்த்தைகளைக் கேட்டு, சிறிது நேரத்தில் குழந்தை தன் முன்னால் வந்து



விழும், உடனே தூக்கிக் கொண்டு போய்ச் சாப்பிடலாம் என்று நம்பிக்கையோடு வாசலில் காத்திருந்தது.

சிறிது நேரம் கழித்துத் தாய் தன் குழந்தையைக் கொஞ்சி இதமான வார்த்தைகளால் அதன் அழுகையை நிறுத்த முயன்றாள்.

''என் கண்ணே! ஏன் இப்படி அழுகிறாய்? ஓநாய் வந்தால் அடித்துக் கொன்று விடுகிறேன். நீ மட்டும் அழாமல் இருக்க வேண்டும்'' என்று தாயார் சொன்னாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட ஓநாய், ''அதற்குள் இப்படி மாறிப் பேசுகிறாளே இவள்! சீ! இப்படிப்பட்டவர்கள் இருக்கும் திசையைக் கூடத் திரும்பிப் பார்க்கக் கூடாது'' என்று வெறுப்போடு சொல்லி விட்டுக் காட்டுக்குப் போய்விட்டது.

மற்றவர்கள் நேர்மையாக நடக்க வேண்டும் என்பதில் மோசக்காரர்களுக்கு அதிக ஆசை.

## படுக்கை அறையில் புலி!



ஆதாரம் : காரனெட் - தகவல்: ச. ஸ்ரீதரன்

நடு இரவு. தூங்கிக் கொண்டிருந்த கணவனைப் பரபரப்புடன் எழுப்பி, ''என் அம்மா படுத்திருக்கும் அறையில் புலி ஒன்று புகுந்துவிட்டது. சீக்கிரம் காப்பாற்றுங்கள்'' என்றாள் மனைவி. கணவன் கண்களை மூடியபடியே கூறினான்: ''நான் போய் என்ன கிழிக்கப் போறேன்? புலி தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள வேண்டியதுதான் !''




★ ஒற்றுமை ஓங்க, நிம்மதி நிலவ...

★ தென்னகம் நடத்தும் தர்மப் போர்

★ பள்ளம் கண்ட இடம் குப்பை

திரிகால ஞானி ராஜாஜி அவர்கள், சுதந்திரம் பெறுவதற்காக இந்தியாவைப் பிரிக்கலாம் என்று யோசனை கூறினார். அன்றையத் தலைவர்கள் பலரது மனம் இதற்கு இசையவில்லை.

ஆனால் இறுதியில் நடந்ததென்ன? இந்தியாவைத் துண்டு போட்டுப் பாகிஸ்தானைக் கொடுத்தோம். ராஜாஜியின் யோசனையை அன்று உடனே கேட்டிருந்தால், வகுப்புக் கலவரத்தால் பல்லாயிரக் கணக்கான மக்கள் பின்னால் தங்கள் ரத்தத்தை வீணே சிந்தியிருக்க வேண்டியதில்லை. உயிரையும் உடைமைகளையும் இழந்திருக்க வேண்டியதில்லை.

அதே அரசியல் தீர்க்கதரிசி ராஜாஜி இன்று நம் பாரதப் பிரதமருக்கு முக்கியமாக நாட்டின் ஒருமைப்பாட்டினைக் கருதியே மொழிப் பிரச்னை சம்பந்தமாக நல்லதோர் ஆலோசனையை வழங்கியிருக்கிறார். பாரதப் பிரதமரும் அப்பழுத்த பெரும் அரசியல் மேதையின் யோசனையை உடனே செயல்படுத்த முன்வரா விட்டால், நாடெங்கும் பெரும் விபரீத விளைவுகள் ஏற்படும். செயல்படுத்தினாலோ அவருக்கு (பிரதமருக்குத்தான்!) பெரும் புகழ் சேரும். நாட்டில் ஒற்றுமை ஓங்கும். நிம்மதி நிலவும்.

நமது பழைய அநுபவம் ஒரு வழிகாட்டியாக அமையட்டும். சரித்திரம் கற்பித்த பாடத்தை மறக்க வேண்டாம்.

கோவை–3 க. மாரியப்பன்

பாரதம் பெற்ற அருந்தவப் புதல்வர்களில் தற்போது தலைசிறந்து நிற்கும் ராஜாஜி அவர்களின் தொண்ணூறாவது பிறந்த நாள் விழாவினைக் கொண்டாடும் வகையில் 26–12–67 அன்று பாலர் அரங்கில் ஒரு மாபெரும் கூட்டம் நடைபெற்றது. நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு அன்றும், இன்றும் மனம் தளராது உழைக்கும் ராஜாஜி அவர்களின் அரும் பெரும் சேவைகளைப் பாரதத்தின் பல்வேறு கட்சித் தலைவர்களும் கட்சிக்கு அப்பாற்பட்ட அரும் பெரும் தலைவர்களும் பாராட்டினர். 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி போட்டுக் கொண்டு அன்னாருக்குப் புகழ்மாலை சூட்டிய காட்சி, கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருந்தது. புகழ் மாலை எப்படிச் சூட்ட வேண்டும் என்பதற்கு அன்றைய கூட்டமும் அதில் ஆற்றிய அறிவுரைகளும் ஓர் இலக்கணமாக அமைந்திருந்தன. அறுபதாண்டு அயராது சளியாது, அதே சமயம் அஞ்சாது அரசியல் வாழ்க்கையில் போராடிய ராஜாஜியின் முன், இப்பொழுது மொழிப் பிரச்னை தலைவிரித்தாடுகிறது. நாட்டின் பல சிக்கலான பிரச்னைகளைத் தீர்த்து வைத்த அவருக்கு இது ஒரு பிரச்னை இல்லைதான். எனினும், அவருடைய பொறுமையை இன்னும் சோதிக்காது அன்னாருடைய 'ஒருமைப்பாட்டு நல்லெண்ணத்தை'ச் செயல்படுத்த, மத்திய அரசு விரைந்து வரவேண்டும்.

ராஜாஜி அவர்களின் தர்மப் போருக்குப் பாரதத்தின் தென்பகுதி முழுவதுமே ஆதரவாக நிற்கிறது என்பதை மத்திய அரசு புரிந்து கொள்ள வேண்டும்.

சென்னை–5 புனர்வசு

'சோறு கண்ட இடம் சொர்க்கம்' என்பார்கள். சென்னை மாநகராட்சி 'பள்ளம் கண்ட இடம் குப்பை' என்ற ரீதியில் செயல்படுகிறது. பள்ளத்தில் குப்பையைக் கொட்டினால் மேலே மண் பரப்ப வேண்டும். இல்லையெனில் ஈக்களும் கொசுக்களும் விருத்தியாகிச் சுற்றுவட்டாரத்தில் வசிக்கும் மக்களுடைய ஆரோக்கியத்தை வெகுவாகப் பாதிக்கிறது. சுகாதார அதிகாரிகள் கவனிப்பார்களோ?

சென்னை – 34 சீதா

'சோ'வின் கதைகள் என்றாலே வாசகர்களுக்கு அலாதிப் பிரியம் ஏற்பட்டு விடுகிறது. வெறும் நகைச்சுவை வெடிகளை மட்டும் உதிர்க்காமல் சிறந்த கருத்துக்களை இலை மறைவு காய்களைப் போன்று புகுத்தி வாசகர்களின் சிந்தனையைத் தூண்டிவிடுகிறார் 'சோ'. முகத்துவின் படத்திற்குப் பதிலாக சோவின் படத்தைப்போட்டதும் நன்றுதான்.

மதுரை – 13 அ. ஞானப்பன்

'மூன்று புனித தேவாலயங்கள்' என்ற தலைப்பில் நான் எழுதிய கட்டுரை கல்கி 24–12–67 இதழில் வெளியாகியுள்ளது.

''கடல் அலைகள் மயிலாப்பூரின் சில பகுதிகளைத் தமக்கு இரையாக்கிக் கொள்ளும் போது மேலை நாட்டினர் இங்கு வந்து கிறிஸ்துவ சமயப் பிரசாரம் செய்வார்கள்'' என்று முன்கூட்டியே உணர்ந்து சொன்னது புனித தூதர் தாமஸ்; ஸாது சேவியர் அல்ல.

சென்னை–20 ராஜா ராமநாதன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி

## உங்கள் குழந்தை ஜலதோஷத்தின் வலிகளால் அவதிப்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்

## உடனடியாக இதமளிக்க அவனுக்கு விக்ஸ் வேபோரப் தடவுங்கள்.

மூக்கு ஒழுக்கு, நீர் வடியும் கண்கள், தொண்டை அழற்சி, மூச்சுவிடுவதில் சிரமம்—ஆகிய ஜலதோஷ நோவுகளால் உங்கள் குழந்தை அவதிப்பட்டால், மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு ஆகிய பகுதிகளில் விக்ஸ் வேபோரப் தடவி சுகமாகப் போர்த்திப் படுக்கவிடுங்கள். அயர்ந்து தூங்கும்போது விக்ஸ்வேபோரப் இரவு முழுதும் செயல் புரியும். பொழுது விடிவதற்குள், ஜலதோஷத்தின் கடுமை அகன்று விடும். ஆடிக் களிக்கும் ஆனந்தத்தோடு அவன் துள்ளி யெழுவான்.




# விக்ஸ் வேபோரப்

ஒரே இரவில் ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் அளிக்கிறது